# கல்கி பொருளடக்கம்

சாதாரண, மாசி 9 ※ பிப்ரவரி 21, 1971



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


| சந்தா விவரம் : | ஒருவருடம் | ஆறுமாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கைநாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 40-00 | ரூ. 20-00 |



யாவரும் விரும்புவது

அசோகா

சுகந்த பாக்குத்தூள்

No 1506 ASOKA

# மோகனப் புன்னகை
# கோலினஸ் புன்னகை




குளிர்ந்த தூய இன்மூச்சு

மூச்சினில் மிளிரும் தூய்மை
மலரும் நாணிடும் அருமை!

தூய இன் மூச்சு! பளிச்சிடும் பற்கள்!
மோகனப் புன்னகை!
கோலினஸ்—வாழ்வுக்கு இனிமை
கூட்டி வாழ்விக்கும் பெயர்!

காலையிலும் இரவிலும் கோலினஸ் சூபர் ஒயிட்
பற்பசையால் பல் துலக்குங்கள்.

ஆஹா...**கோலினஸ்** சூபர் ஒயிட் டூத்பேஸ்ட்

Regd. User of TM: Geoffrey Manners & Co., Ltd.

மலர் 30

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்



இதழ் 30

# மகா மனிதர் மறைந்தார்

**பா**ரதத்தின் தூய, உயரிய பண்புக்கு ஒரு தலைசிறந்த காவலராக இருந்த பெருமகனார் ஸ்ரீ கே. எம். முன்ஷி இறைவனின் இணையடி சேர்ந்து விட்டார். ஆன்மிகம், சமயம், கலை, இலக்கியம், அரசியல், சமூக இயல் ஆகிய எல்லாத் துறைகளிலும் அதிஉன்னத ஸ்தானம் வகித்து வந்த ஒரு பெருந்தகையை ஸ்ரீ முன்ஷியின் மறைவில் இழந்து விட்டோம்.

பெரிய சரித்திர நிபுணராகிய ஸ்ரீ முன்ஷி அவர்களின் வாழ்வே ஓர் ஒப்பற்ற சரித்திரமாகும். அறிவுக் கூர்மையில் தேர்ந்த ஸ்ரீ முன்ஷி அவர்கள் வழக்கறிஞராகப் பிராபல்யம் பெற்ற போதே, சுதந்திரப் போராட்டத்தில் கவரப்பட்டு, மகாத்மா காந்தியின் சீடராகவும், சர்தார் வல்லபபாயின் வலக்கரமாகவும் ஆனார். பல முறை சிறை புகுந்தார். விடுதலைப் போராட்டத்தில் கைதான பெரும் தியாகிகளுக்காக அற்புதமாக வழக்குரைத்தார். இந்திய சுதந்திரம் எட்டாக் கையிலிருக்கையில் அவரது பணி இது. சுதந்திரம் நெருங்குகையில் இப்பணி மேலும் மெருகு பெற்றது. தேசம் சுதந்திரம் பெற்ற பிறகு மக்கட் சுதந்திரத்தைக் காப்பதற்கென்றே இயற்றப்பட்ட நமது ஒப்பற்ற அரசியல் சாஸனத்தை உருவாக்கிய மூதறிஞர்களில் ஒருவராகத் திகழ்ந்தார் ஸ்ரீ முன்ஷி. !இந்தியா சுதந்திரம் பெற்றபின் மத்திய உணவு மந்திரியாக வனமகோற்சவத்தைத் தொடங்கி வைத்த அவர் பல மாநிலங்களில் கவர்னராகவும் அரும் பணி புரிந்தார். பிறகு தேச சுதந்திரம் ஒவ்வொரு பிரஜைக்கும் சுதந்திரமாக வேண்டியதன் அவசியத்தைக் கருதி ராஜாஜி அமைத்த சுதந்திரக் கட்சியில் ஸ்ரீ முன்ஷி மனமார ஈடுபட்டுச் சமீபகாலம் வரையில் அதன் உபதலைவராகச் சீரிய பணி புரிந்தார்.



ஆனால் இவற்றை யெல்லாம்விட அவர் புரிந்துள்ள தலையாய திருப்பணி 'பாரதீய வித்யா பவனம்' என்ற பொன்னான பண்புப் பண்ணையை நிறுவி நிர்வகித்த திறன்தான். ஸ்ரீ அரவிந்த முனிவரிடம் ஈடுபட்ட நாளாக ஆத்மிகமே அவரது வாழ்வுக்கு ஆதார சுருதியாகிவிட்டது; அந்த சுருதியில் பிறந்த சங்கீதமே பாரதீய வித்யா பவனம். இன்று பாரதக் கலாசாரத்துக்கான ஸ்தாபனங்களை எண்ணியவுடன் முதலில் நினைவில் நிற்பது பாரதீய வித்யாபவனம்தான். பல மொழிகளில் வெளியாகும் 'பவன்ஸ் ஜர்னல்', பிரசுரப் பகுதி, கல்லூரிகள், ஸம்ஸ்கிருத வளர்ச்சிக் கேந்திரம் ஆகியவற்றின் மூலம் பாரதீய கலாசார தீபத்தைச் சிகரத்தில் ஏற்றி வைக்கும் இந்த ஸ்தாபனத்துக்குத் தம் உடல் பொருள் ஆவியை அர்ப்பணித்தார் ஸ்ரீ முன்ஷி அவர்கள். அதனால் சநாதன தர்ம மாளிகையின் ஓர் ஆதார ஸ்தம்பமாக விளங்கினார்.

ராஜாஜி அவர்கள் கூறியிருப்பது போல், இந்தியாவுக்கும் இந்திய கலாசாரத்துக்கும் தலைசிறந்த காவலராக இருந்த ஸ்ரீ முன்ஷி அவர்கள் மறைந்துவிட்ட போதிலும், அவர் விட்டுச் செல்லும் கலாசார நிறுவனங்கள் இனியும் அவர் ஜீவியவந்தராக இருப்பது போலவே பூரண ஆற்றலுடன் செயல்பட வேண்டும். இறைவன் அருளால் இந்தத் திருப்பணி நீடித்து, ஸ்ரீ முன்ஷி அவர்களின் நினைவை அமரமாகக் காத்து வரும் என நம்புகிறோம்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

ஆள்கிற கட்சியின் ஒழுங்கீனங்கள், சட்டத்துக்கு ஒவ்வாத செயல்கள், பலவந்தக் காரியங்கள் முதலியவற்றை யெல்லாம் தேர்தல் முடிந்த பிறகும்கூட நாம் அம்பலமாக்கலாம். இப்போது உடனுக்குடனே செய்ய வேண்டியது, வாக்காளர்களை ஆட்சியிலுள்ளவர்களின் அதிகார சக்திக்கு அடிபணியாமல் இருக்கச் செய்வதே. பணத்தின் பலத்துக்கு ஆளாகிவிடாதபடியும், தாற்காலிகமாகக் கிடைக்கும் லாபங்களுக்குச் சபலம் கொள்ளாதவாறும் வாக்காளர்களை ஊக்கி அவர்களுக்கு நல்லுணர்வு ஊட்ட வேண்டும். அதிகார சக்தி, பண பலம், தாற்காலிகச் சலுகை இவற்றுக்கு இந்தியாவின் ஏழை மக்களும், எழுத்தறிவற்ற மக்களும் அடிபணிய மாட்டார்கள் என்பதை இந்தத் தேர்தலின் மூலம் நிரூபித்தாக வேண்டும். தமது தேசக் கடமையில் படுமோசமாகத் தவறிய ஒரு பிரதமரை இந்திய மக்கள் பதவியிலிருந்து விலக்கினார்கள் என்று இத்தேர்தலில் நிரூபிக்க வேண்டும்.

கல்வியறிவு பெற்ற இந்தியர்கள் அரசியல் சாஸனத்தைக் காப்பதும், ஸ்ரீமதி இந்திரா காந்தியை ஆட்சி பீடத்திலிருந்து இறக்குவதுமே இன்று தமது புனிதக் கடமை என உணர வேண்டும்.

பிரதமருக்குரிய தகுதிகளைப் பெற்று அப்பதவியை வகிப்பதற்குப் பெரிய பாரம்பரிய மகிமை இருக்க வேண்டும் என்று யாரும் எண்ண வேண்டா. பாரம்பரிய மகிமை இருக்கிறதென்பதாலேயே பிரதமரின் முக்கியப் பொறுப்புக்களை ஆற்றுவதில் உள்ள தகுதியின்மையைச் சரிக்கட்டி விடவும் முடியாது. நேர்மையுள்ள சாமானிய மனிதர் ஒருவரே பிரதமர் பதவியை நன்கு வகித்துவிட முடியும். ஒருவரிடம் ஏதோ விசேஷப் பிரபை இருப்பதாகக் கருதி அவரைப் பிரதமராக்கி, அதன் மூலம் நாட்டை நாசமாக்குவதைவிட, சாமானிய நல்ல மனிதர் ஒருவரைப் பிரதமராக்கிக் கொள்வதிலேயே நாம் திருப்தி அடையலாம்.

★

தேர்தலில் பெருத்த விஷமங்களுக்கு இடமளிக்கப் போவது ஸ்ரீமதி இந்திராவின் கட்சி பெற்றுள்ள பசுச் சின்னம். ஆட்சேபங்களை விசாரித்து முடிவு செய்வதற்கு அவகாசமில்லாத நிலையில் இச்சின்னம் இந்திரா கட்சிக்கு வழங்கப்பட்டிருக்கிறது. இவ்விதத் தந்திரோபாயங்களால் ஸுப்ரீம் கோர்ட்டுக்குத் தர்ம சங்கடம் விளைவிக்க முயன்றாலும், ஸுப்ரீம் கோர்ட் உறுதியாகச் சட்டத்தையும் நீதியையும் காக்கவே செய்யும் என நம்பலாம்.

இந்திரா காந்தியின் கட்சி வைத்துக் கொண்டிருப்பது திருட்டுப் பசு. சமயத் துறைக்குரிய பசுவைத் திருடிக் கொண்டிருக்கிறார்கள். இந்தத் திருட்டுப் பசுவை வைத்துக் கொண்டு ஜெயிப்பதற்கு இந்திரா கட்சியை அனுமதிக்கலாகாது. ▌

★

சுதந்திரம் பெற்றபின் நடக்கும் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த தேர்தல் என்று வரவிருக்கும் இடைக்காலத் தேர்தல் வருணிக்கப்படுகிறது. ஆளும் கட்சி அதிகார துஷ்பிரயோகம் செய்வதையும், நிருவாக இயந்திரத்தைத் தனக்குச் சாதகமாகப் பயனாக்கிக் கொள்வதையும் எதிர்க்கும் மக்களின் எழுச்சி வெற்றி பெற்றாலே இத்தேர்தல் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். பெர்மிட்—லைசென்ஸ் ராஜ்யத்தின் மூலம் ஸ்ரீமதி இந்திரா காந்தியின் கட்சிக் கஜானாவுக்கும், அவரோடு அரசியல் தொடர்பு கொண்ட முதல் மந்திரிகளின் கட்சிக் கஜானாக்களுக்கும் லட்சக் கணக்கில் பணம் புரளுவதாகப் பொது மக்கள் உறுதியாக நம்புகின்றனர். இதை எதிர்த்து மக்களின் உத்வேகம் வெல்ல வேண்



## ஹரி சரணம் அடைந்த ஸ்ரீஹரி

'உடம்புக்கு மருந்து தருவதில் நிபுணர். மனத்துக்கு மருந்து தருவதில் அதைவிட நிபுணர்' என்று அனைவராலும் மதிக்கப்பட்ட ஸ்ரீஹரி அவர்கள் தாம் அனவரதமும் வழிபட்டு வந்த பெருமாளிடம் சேர்ந்து விட்டார். ஆயுர்வேத சாஸ்திரத்தில் அவருக்கிருந்த சிறப்பைக் கண்டு அவரை தன்வந்திரியின் மறு பிறப்பாகவே கருதியவர்கள் உண்டு. புராதன இந்திய வைத்தியம் நமது கல்வித் திட்டத்தில் உரிய இடம் பெறப் பாடுபட்டவர். தொழில் முறைச் சிறப்பை விட ஸ்ரீஹரி என்ற அன்புள்ளம் படைத்த மனிதரின் சிறப்பு மிகப் பெரிது. நோயாளிகளை அத்தியந்த உறவினர்கள் போல் ஆக்கிக் கொண்டவர் அவர். நோய் விட்ட பின்னும் வைத்தியரை விடமுடியாதபடி அன்பில் பந்தப்படுத்திக் கொள்வார். உண்மையான வைஷ்ணவராக வாழ்ந்து ஸ்ரீராமனிடம் உருகி உருகிக் கரைந்தார். ராஜாஜியிடம் தேவதா விசுவாசம் கொண்டவர். 'கல்கி' குடும்பத்தில் ஒருவராக ஆகிவிட்டவர். நாட்டு வைத்தியம் பற்றி இந்த ஏட்டில் இனிக்க எழுதியவர். தர்ம காரியங்களுக்கு அள்ளி அள்ளிக் கொடுத்தவர். இனி ஸ்ரீஹரி இல்லை என்பதை ஏற்பது அவரது எண்ணற்ற அன்பர்களுக்கு இலேசில் முடியாத காரியம்தான்!

ஸ்ரீஹரி, ஜனார்தனன் திருவடி அடைந்து விட்டார். மனைவியும் மகனும் மறைந்தபோது பட்ட துயரத்தை மறுபடியும் அனுபவிக்கிறேன்.

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி

---

டும். அப்போதுதான் இந்தியாவின் பார்லி மெண்டரி ஜனநாயக வாழ்வு பற்றி நம்பிக்கை கொள்ளலாம்.

கொலைகள், பயங்கரமான வன்முறை, அச்சுறுத்தல், பீதி, லஞ்ச ஊழல் இவற் றிடையே நடைபெறும் தேர்தல் ஒருகாலும் இந்திரா சர்க்காருக்கு மக்களின் ஒப்புதலைப் பெற்றுத் தந்ததாகக் கொள்ள முடியாது.

★

பிரதமர் தமது வேட்பில் இந்திரா காந்தி நேரு என்று பெயர் கொடுத்திருக்கிறார். இதில் உள்ள ''காந்தி''க்கும் தேச பிதாவான மோகனதாஸ்காந்திக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை. பிரதமரின் கணவரான காலஞ்சென்ற ஃபிரோஸ் காந்தியின் பெயரையொட்டி அவரும் ''காந்தி'' எனப்படுகிறார். நமது மக்கள் எளிதில் ஏமாறும் தன்மை வாய்ந்த வர்களாகவும், சில தலைவர்களைத் தெய்வமாக வழிபடுபவர்களாகவும் இருப்பதாலேயே இதை நான் எடுத்துக்காட்ட வேண்டியிருக் கிறது. இல்லாவிடில் இவ்விஷயமாக எழுதி யிருக்கமாட்டேன். பிரங்கிக்கு இரண்டாவது குண்டாகத் தமது தந்தை நேருவின் பெயரை யும் சேர்த்துக் கொண்டிருக்கிறார் பிரதமர். அவருக்கு இவ்விதம் செய்ய உரிமை இருப்ப தாலேயே அதன் லாபத்தை அடையப் பார்க்கிறார்.

★

இப்போது இடைக்காலக் காப்புச் சர்க்கா ராக மட்டும் பதவி வகிக்கும் இந்திராவின் அரசாங்கம் ஏராளமான பெர்மிட்-லைசென்ஸ் களை வழங்கி அதற்குப் பிரதியாக அக்கட்சி யின் நிதிநிலையைப் பெருக்கி வருகிறது என்று ஸ்ரீ நிஜலிங்கப்பா குறை கூறியிருக்கிறார். இவ் வித லைசென்ஸ் பெறுகிறவர்கள் தொழிலில் ஏறக்குறைய ஏகபோக்கியம் பெறுவதால் கோடிக்கணக்கில் பணம் பண்ண முடிகிறது. அதற்கு நன்றியறிதலாக ஆள்கிற கட்சிக்கு வாரிக் கொடுப்பார்கள். எனவே, இவ்விஷ யத்தில் ஆளும் கட்சி ஏராள நிதியம் சேர்த்து விட்டதாக ஸ்ரீ நிஜலிங்கப்பா கருதுவதில் ஆச்சரியம் இல்லை.

இது போன்ற போக்குகளை முன்னரே எதிர் பார்த்துத்தான் நான் நீண்ட காலமாக, தேர்தலுக்கு முன்பு ஆள்கிற கட்சி அரசாங் கத்திலிருந்து ராஜிநாமா செய்துவிட்டு, நிரந் தர உத்தியோகஸ்தர்களிடமே தேர்தல் காலத் தில் பொறுப்புத் தர வேண்டும் என வற் புறுத்தி வருகிறேன். அதேபோல் பெர்மிட் — லைசென்ஸ் முறையை முடித்த மட்டில் அகற்ற வேண்டும் என்றும், அத்தியாவசிய பெர்மிட்களை வழங்கும் பொறுப்பைக் கட்சிச் சார்பற்ற ஒரு சுதந்திர போர்டிடம் ஒப்புவிக்க வேண்டும் என்றும் வலியுறுத்தி வந்திருக் கிறேன். ஆனால் எனக்குப் போதிய ஆதரவு கிடைக்கவில்லை. எனவே, இந்த விஷம முறை நீடித்து, தேர்தலை ஆளும் கட்சியின் பண பலத்துக்கு ஆடும் விளையாட்டுப் பொம்மை யாக்கி விட்டிருக்கிறது. 'இந்திரா காந்தியின் தவறுதல்களை மக்களால் சகிக்க முடியவில்லை ; பண பலத்தாலும் அவர்களை மாற்ற முடிய வில்லை' என்பதை இத்தேர்தல் நிரூபித்தால் மகத்தான நன்மையாகும்.

★

பிப்ரவரி 10ந் தேதியிட்டு பம்பாயிலிருந்து வந்துள்ள செய்தியைப் படிக்கவே அருவருப் பாக உள்ளது. கம்பளித் தொழில் சங்கத்தி லிருந்து இந்திரா கட்சியின் 'பெருந் தலை வர்கள்' சிலர் ரூ. 75 லட்சம் பெற்றதாகவும், ஒரு ரேயான் ஸ்தாபனத்திலிருந்து ரூ. 25 லட்சம் பெற்றதாகவும் கூறப்படுகிறது. சுதந் திரக் கட்சியின் பொதுக் காரியதரிசி டாக்டர் ஆர். வி. கூப்பர் கையெழுத்திட்டு வெளி யிட்டுள்ள பத்திரிகை அறிக்கை கூறுவதாவது: ஆளும் கட்சி யஜமானர்கள் பண வசூலுக் காகச் செய்யும் சட்டவிரோத வற் புறுத்தலுக்கான பொறுப்பைத் தாம் ஏற்ப தற்கில்லை எனப் பிரதமர் வெளிப்படக் கூறுவ துடன், இவ்வித சட்டவிரோதமான நன் கொடைகளை அளிக்க ஜவுளித் தொழில் காரர்கள் இணங்க வேண்டியதில்லை என்றும் பிரதமர் பகிரங்கமாகக் கூறவேண்டும்.

'மார்ச் ஆஃப் தி நேஷன்' என்ற பத்திரிகை (பிப்ரவரி 13) பிரகரித்துள்ள திருவனந்த புரத்துச் செய்தியும் இது போலவே அசங் கியமாக இருக்கிறது. இறக்குமதி லைசென்ஸ் வழங்கியதற்குப் பிரதியாக இந்திரா கட்சிக்கு ரப்பர் தொழிலில் ஈடுபட்டுள்ளோர் பெரும் தொகையை நன்கொடையாகத் தந்திருப்ப தாக இச்செய்தி கூறுகிறது. பெர்மிட்— லைசென்ஸை வைத்து எழுப்பும் இந்தத் துர் நாற்ற அழுக்கு மலையை அழிக்கத் தேர்தலில் மக்கட் சக்தி பொங்கி எழும் என நம்புகிறேன். தங்களை இந்திரா கட்சியினர் பணத்துக்காக அணுகவில்லை என்று பிரஸ்தாபத் தொழில் களைச் சேர்ந்தவர்கள் மறுத்திருப்பதற்கு அர்த்தம் இல்லை. இதுபோல் பணம் கேட்கும் போது எழுத்தில் எழுதி, ருசிப்பிக்கும் விதத் தில் கேட்க மாட்டார்கள். இதில் அதிகார பூர்வமான சம்பிரதாய முறை ஏதும் பின்பற்ற மாட்டார்கள். அதிகாரபூர்வமாக இன்றியே இவ்வித நிர்ப்பந்தங்கள் செய்யப்படும்.

# ரகுபதி ராகவ

மகாத்மா காந்தி

தமிழாக்கம்: ராஜாஜி

## 64

ஒரு நண்பர் கேட்கிறார்: ''பிரமசரியம் என்றால் என்ன? அதை முற்றிலும் பழுதின்றிக் காப்பாற்றுவது சாத்தியமா?''

பிரமசரியம் என்றால் பிரம்மத்தை அடையப் பார்ப்பது. அந்த முயற்சிக்கு வேண்டிய விரதமே பிரமசரியம். ஈசுவரன் உள்ளத்தில் உளன். ஒவ்வொரு உள்ளத்திலும் உளன். அவனைக் காண வேண்டுமானால் உள்ளத்தைச் சோதித்து அந்தராத்மாவைக் காண வேண்டும். புலன்களை முற்றிலும் வசப்படுத்தினாலன்றி அந்தக் காட்சியை அடைய முடியாது.

ஆகவே, பிரம்மசரியம் என்றால் மனோ வாக்குக் காயங்களை வசத்தில் நிறுத்தி வைப்பது. எப்போதும் எந்தச் சூழ்நிலையிலும் அந்தப் புலனடக்கம் நிலை குலையாதிருக்க வேண்டும். பிரமசரியத்தை வெற்றியுடன் நடத்தினால் காமமாவது கோபமாவது கிட்டே நெருங்காது. ஆண்டவன் அண்மையிலேயே எப்பொழுதும் வாழ்க்கை நடைபெறும். ஈசுவரத் தன்மையை அடைந்தே விடுவோம். இத்தகைய பிரமசரியம் சாத்தியம் என்பது என்னுடைய உறுதியான நம்பிக்கை. மனோ வாக்குக் காயங்களை முற்றிலும் அடக்கி ஆள்வது முடியும்.

(யங் இந்தியா, 5-6-1924)

சத்தியத்துக்கென்று தன் வாழ்க்கையை ஒப்புவித்த ஒருவன் சத்தியத்தை வழிபடுவதிலேயே எப்போதும் ஈடுபடுவான். வேறு விஷயத்தில் தன் மனத்தை எவ்வாறு செலுத்துவான்? செலுத்தினால் கொண்ட மனைவிக்குத் துரோகம் செய்தவாறு ஆவான். சிற்றின்பத்தில் மனம் செலுத்த மாட்டான். சத்தியத்துக்கென்று தன் உயிரை அர்ப்பணம் செய்த ஒருவனுக்குக் குழந்தைகளைப் பெற்றுக் குடும்பத்தை நடத்த அவகாசமே இராது. சத்திய வாழ்க்கையும், புலன்களின் வழி இன்பம் தேடுவதும் ஒன்றுக்கொன்று நேர் விரோதமானவை.

சத்தியத்தை விட்டு விட்டு அஹிம்ஸையை வைத்துப் பார்த்தாலும் சுயநலமும் புலன்கள் வழி இன்பம் தேடுவதும் அஹிம்ஸைக்கு முற்றிலும் முரணாகும். அஹிம்ஸை என்றால் ஜீவராசிகள் அனைத்தினிடத்துமே அன்பு செலுத்த வேண்டும். ஒருவன் தன் மனைவிக்கு மட்டும் முற்றிலும் அன்பைத் தந்து விட்டால், உலகத்துக்கு என்ன மிஞ்சும்? அவ்வாறே ஒரு ஸ்திரீயானவள் தன் புருஷனுக்கே தன் அன்பையெல்லாம் செலுத்தி விட்டால் ஜீவராசிகள் அனைத்துக்குமே செலுத்த வேண்டிய அருள் எஞ்சி நிற்காது. தாம் இருவர்தாம் உலகம் என்று முடிந்து விடும். அஹிம்ஸை முறையில் உலகம் முழுவதையும் தன் இனமாகப் பார்க்க வேண்டிய தர்மத்தை நடத்த இயலாது. தங்கள் அன்புக்குச் சுவர் எழுப்பி வரம்பு கட்டினவர்கள் ஆவார்கள். குடும்பம் பெருகப் பெருக உலகம் மறைந்து போகும். அஹிம்ஸா தத்துவத்தைக் கடைப்பிடிக்க விரும்புகிறவர்களுக்கு விவாகம் செய்து கொண்டு இன்பம் நுகர்வதற்கு இடமில்லை. இல்லறத்தைத் தாண்டிய இன்பங்களைப் பற்றிச் சொல்ல வேண்டியதே யில்லை.

ஆகவே, விவாகம் ஆகிய மக்களுக்கு என்ன வழி என்கிற கேள்வி எழலாம். அவர்களுக்குச் சத்தியம், அஹிம்ஸை என்கிற மார்க்கம் சாத்தியமே யில்லையா? உலகம் முழுவதற்கும் செலுத்த வேண்டிய அருள் அவர்கள் விஷயத்தில் முற்றிலும் முடியாததா?

அவ்வாறல்ல. விவாகம் ஆகியிருந்த போதிலும் விவாகம் ஆகாத தனிப்பட்டவர்களைப் போலவே நடந்து கொள்ளலாம். இதைச் சிலர் செய்து பார்த்து வெற்றியும் அடைந்திருக்கிறார்கள். நான் சொல்லும் முறையை அநேகம்பேர்கள் வெற்றியுடன் கடைப்பிடித்திருக்கிறார்கள். இருவரும் சகோதர சகோதரிகளாகப் பாவித்துக் கொண்டு ஜீவராசிகளின் சேவையில் தங்கள் வாழ்க்கையைச் செலவிடலாம்.

# வாக்காளர்களுக்கு வேண்டுகோள் !

இந்தத் தேர்தல் ஜன சுதந்திரத்தைக் காக்கவும் சர்க்கார் எதேச்சாதிகாரத்தை ஒழிக்கவும் நடத்தப்படும் விடுதலைப்போர். இந்தப் பெரும் போரில் பணி செய்யும் தேசபக்தர்கள் சிறியோரும் பெரியோரும் யாரும் திரு காமராஜ் அவர்களிடம் ஊதியம் கேட்காதீர்கள். தேசபக்தியால் ஊக்கப்பட்ட சேவைக்கு ஊதியம் கேளாதீர். ஜனநாயகத்தைக் காப்பதற்காக திரு காமராஜ் அவர்கள் எவ்வளவு இடைஞ்சல், எவ்வளவு கஷ்டத்தின் இடையில் தைரியத்துடன் பாடுபடுகிறார்கள் என்பது உங்களுக்குத் தெரியாமலிருக்கலாம். எனக்குத் தெரியும். ஆனபடியால் இதை மக்களுக்கு எடுத்துச் சொல்லி எச்சரித்து திரு காமராஜ் அவர்களுக்கு வெற்றி சம்பாதித்துத் தருவீர்களாக என்று வேண்டுகிறேன்.

**வோட்டுச் சாவடிக்குச் சென்று வோட்டு பதிவு செய்ய வேண்டிய தேதிகள் :**

மார்ச் 1ந் தேதி : வடசென்னை, தென்சென்னை, ஸ்ரீபெரும்புதூர், செங்கல்பட்டு, திருத்தணி, திண்டிவனம், சிவகங்கை, ராமநாதபுரம், சிவகாசி, திருநெல்வேலி, தென்காசி, திருச்செந்தூர், நாகர்கோவில் ஆகிய பார்லிமெண்டு தொகுதிகளும் அவற்றைச் சார்ந்த சட்டசபைத் தொகுதிகளும்.

மார்ச் 4ந் தேதி : வேலூர், திருப்பத்தூர், சிதம்பரம், கள்ளக்குறிச்சி, கிருஷ்ணகிரி, சேலம், நீலகிரி, பொள்ளாச்சி, தாராபுரம், கரூர், திருச்சி, புதுக்கோட்டை, மாயவரம் ஆகிய பார்லிமெண்டு தொகுதிகளும் அவற்றின் சட்டசபைத் தொகுதிகளும்.

மார்ச் 7ந் தேதி : வந்தவாசி, கடலூர், மேட்டூர், திருச்செங்கோடு, கோவை, கோபிச்செட்டிபாளையம், பெரியகுளம், திண்டுக்கல், மதுரை, கும்பகோணம், பெரம்பலூர், நாகப்பட்டினம், தஞ்சை ஆகிய பார்லிமெண்டு தொகுதிகளும் அவற்றைச் சார்ந்த சட்டசபைத் தொகுதிகளும்.

சக்ரவர்த்தி ராஜகோபாலாச்சாரி

---

## பேராபத்து





# இந்தியாவையும் ஜனநாயகத்தையும் காப்பாற்ற

# தேசிய ஜனநாயக முன்னணி

## வேட்பாளர்களுக்கே

**தயவுசெய்து உங்கள் வாக்குகளை அளியுங்கள்!**

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி, சென்னை-2


மர்பி
மினியாய்
டிரான்ஸிஸ்டர்கள்
...லண்டனுக்கு
என்னுடைய ஆங்கிலேய ரசிகர்களும்கூட என்னை விரும்பத் தொடங்கிவிட்டனர். பெருமைக்குரிய விஷயம்!
FOR EXPORT
MURPHY TRANSISTOR
BOMBAY TO LONDON
MURPHY TRANSISTORS

ஸெயிண்ட் லூயி நகரில் மிஸ்ஸிஸிபி ஆற்றின் குறுக்கே பாலம் கட்டப் போவதாக ஜேம்ஸ் ஈட்ஸ் கூறினார். அமெரிக்காவின் தலை சிறந்த பொறி இயல் நிபுணர்கள் இருபத்தேழு பேர் ஒரு மகாநாட்டுக்காகக் கூடியிருக்கையில் இச் செய்தி வரவே அந்நிபுணர்கள் அனைவரும் இதனை நடவாத காரியம் என்று இளக்காரம் செய்தனர். ஏனெனில் ஈட்ஸ் இதற்கு முன்பு பாலம் கட்டும் பணி எதிலுமே ஈடுபட்ட தில்லை. ஆனால் அவருக்கு மிஸ்ஸிஸிபி ஆற்றினைப் பற்றி மற்றவர்களைவிட அதிகமாகத் தெரிந்திருந்தது. அந்த ஆற்றின் குண இயல்பு களைக் கச்சிதமாகக் கணித்து வைத்திருந்தார். இவரது வெற்றிக்கு இதுவே பெரிதும் உதவியது.

மூன்று வளைவுகளைக் கொண்ட பாலம் சமைக்கத் திட்டம் தீட்டினார். ஒவ்வொரு வளைவும் ஐந்நூறு அடி நீளம். அன்று வரைக்கும் எந்தப் பாலத்தின் மேற்பகுதிக்கும் பயன் படுத்தப்படாத ஓர் உலோகம் இப்பாலத்தில் உபயோகப்படுத்தப்பட்டது. அதுதான் எஃகு! ஆம், 1867ல் நிலைமை இவ்வாறுதான் இருந்தது. ஒரு நூற்றாண்டுக்குப் பிறகு ஈட்ஸ் பாலம் இன்றும் மக்களுக்குப் பயனாகிறது.

* * *

ப்ருக்லின் பாலத்தைக் கட்ட ஆரம்பித்து இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு ஒரு நாள், பொறி இயல் நிபுணர் ஜார்ஜ் வாஷிங்டன் ரோப்லிங் பாலத்தின் அஸ்திவார அமைப்பு வேலைகளைக் கவனித்துக் கொண்டிருந்தார்— நீருக்கு அடியில். மிக அதிகமான அழுத்தம் நிலவும் சூழலில் வேலை செய்வதால் ஏற்படக் கூடிய கிஸான் நோய் அவரை அப்போது திடீரென்று பிடித்தது. இதனால் உடல் ஊனமுற்றுவிட்டது. நடக்கக் கூட முடியாது போய் மூளையும் இலேசாகப் பாதிக்கப்பட்டு விட்ட நிலையிலும் அவர் தாம் மேற்கொண்ட பணியினை விடவில்லை. தமது மனைவியிடம் 'பேச' அவர் ஏற்பாடு செய்து கொண்டார். தந்தி அடிக்கச் சில சங்கேத ஓசைகளைப் பயன் படுத்துவது போல் இவரும் தட்டித் தட்டிக் காண்பித்து மனைவியிடம் பேசினார். அவளும் கணிதமும், பொறியியலும் கற்றுத் தேர்ந்து அவர் கூறிய விஷயங்களைப் புரிந்துகொண்டாள். அவரது உதவியாளர்களான பொறி இயல் நிபுணர்களுக்கு அவர் கூறிய கருத்துக் களைத் தெரியப்படுத்தினாள். அதன்படி காரியங்கள் நடந்தன. 1883ல் ரோப்லிங் தம்பதியின் கூட்டு முயற்சி வெற்றி பெற்றது. ப்ருக்லின் பாலம் திறந்து வைக்கப்பட்டது. (படம்)

* * *

1920ல் ஜோஸப் ஸ்ட்ராஸ் என்கிற இன்ஜினீயர் பலரது எச்சரிக்கைகளையும் பொருட்படுத்தாமல் ஸான்பிரான்ஸிஸ்கோவில் கோல்டன் கேட் பாலத்தைக் கட்டத்

# படுத்துக் கொண்டே கட்டினார் பலமான பாலம்

தொடங்கினார். ஸான்பிரான்ஸிஸ்கோ நகரையொட்டிக் கடல் நீர் உட்புகும் இடத்தில் இது அமைக்கப்பட்டது. கடல் அலைகள், சுழல்கள், காற்று, புயல் எல்லாவற்றையும் சமாளித்து ஐந்து ஆண்டுகள் பாடுபட வேண்டியிருந்தது. பாலத்தைத் தாங்க இரு பக்கங்களிலும் தூண்கள் உண்டு. இவற்றில் தெற்குப் பக்கத் தூணுக்காகப் பத்து மாடிக் கட்டிடம் எவ்வளவு உயரமோ அத்தனை உயரத்துக்கு நீருக்கு அடியிலேயே தூண் எழுப்பி, அதுவே நீர் மட்டத்துக்கு மேலேயும் கழுத்தொடியப் பார்க்கும் அளவுக்கு உயர வேண்டியிருந்தது. இதுபோன்ற பல கடின சாதனைகளைச் செய்து முடித்ததன் விளைவு: உலகிலேயே மிக அழகான பாலம்!

வால்டர் காத்தே என்ற ஊழியர் இந்தப் பாலம் உருவாகையில் நடந்த ஒரு வேடிக்கை நிகழ்ச்சியை நினைவுகூர்கிறார்:

எங்கள் தோழர் ஒருவர் ஓய்வு நேரத்தில் கடல்புறாக்களைக் கண்ணி வைத்துப் பிடிப்பார். அவற்றின் தலைக்குப் பின்னால் கொஞ்சம் வர்ணம் தீட்டிப் பறக்க விட்டு விடுவார். ஓரிரு வாரங்களுக்குப் பிறகு பத்திரிகைகளில் செய்தி வெளியாகிவிட்டது: ''கோல்டன் கேட் பாலம் உருவாகும் இடத்துக்குச் சமீபமாகப் புது ஜாதிக் கடல் புறாக்கள் கண்டு பிடிக்கப்பட்டன. இவற்றின் தலைகள் சிவப்பாக உள்ளன!''

வில்லியம் கெட்ஸ் கூறுகிறார்: மழைக்காக ''ரெய்ன் கோட்'' அணிந்து கொண்டு வேலையில் இறங்குவோம். பாலத்தில் இருபுறமும் மிக உயரமான ஸ்தூபிகள் உண்டு. இவற்றுள் ஒன்றன் மீது ஏறும்படி யிருக்கும். அதன் உச்சியை அடையுமுன்னர் உடம்பெல்லாம் வியர்வையால் தொப்பலாக நனைந்து விடும். மழையில் நனைவதே தேவலாம் என்றாகிவிடும்.



# பாடி பில்டிங்கில் டிவிஎஸ்ஸின் பழுத்த அனுபவத்தை நன்கு பயன்படுத்தி மிகச் சிறந்த பாடிகளை நியாய விலையில் அமையுங்கள்



ஆண்டுதோறும் ஆயிரத்துக்கு மேற்பட்ட பாடிகள் கட்டுகிறோம். 45 ஆண்டு அனுபவத்தின் காரணமாக தேவைகளுக்கு ஏற்ற பாடிகளை அமைக்க நன்கு அறிந்துள்ளோம். அன்றியும் எங்கள் அனுபவமும் ஆராய்ச்சியும். சிக்கனமாகப் பாடிகளைக் கட்ட உதவியுள்ளன.

பாடிகளை அமைக்கும் சாமான்களைத் தேர்ந்தெடுப்பதில் குறியாய் இருக்கிறோம். பக்குவமான உயர்தர மரம், பாஸ்பேட் ஸ்டீல் ஷீட் முதலியவற்றை உபயோகிக்கிறோம். ஒவ்வொரு வண்டியையும் கடினமான சோதனைக்குப் பின்னரே டெலிவரி செய்கிறோம். பாடிகளைப் பற்றி அதே சிந்தனையாய் ஆராய்ச்சி செய்து புதிய புதிய டிசைன்களைக் கண்டுபிடித்து நடைமுறையில் நேரும் பிரச்னைகளைச் சமாளிப்பதில் கண்ணும் கருத்துமாய் உள்ள நிபுணர்கள் கொண்ட தனிப் பகுதி ஒன்று டிவிஎஸ்ஸில் உண்டு.

டிவிஎஸ் கட்டும் பாடிகள் லேசானவை. ஆதலால் எண்ணெய்ச் செலவு குறைவு. அன்றியும் கரடுமுரடான சாலைகளில் ஆட்டம் கொடுக்காது. உறுதியானது. பல்லாண்டுகள் உழைக்கும்.

இந்தியாவிலேயே பாடிகள் கட்டும் மிகப் பெரிய ஸ்தாபனம் டிவிஎஸ்

சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ்
பிரைவேட் லிமிடெட்
மதுரை

(இது ஒரு டிவிஎஸ் ஸ்தாபனம்)

TVS உங்கள் நம்பிக்கைக்கு உரியது டிவிஎஸ்

SI-6089 R




## ஆறாம் அத்தியாயம்

மோகினித் தீவின் சுந்தர புருஷன் கூறினான்: ''இளஞ் சிற்பியைக் குறித்துப் பாண்டிய குமாரி கொண்ட எண்ணத்தில் தவறு ஒன்றுமில்லை. சுகுமாரன் தன் இருதயத்தை உண்மையில் அவளுக்குப் பறி கொடுத்து விட்டான். அவளை ஏமாற்ற வேண்டி யிருக்கிறதே என்னும் எண்ணம் அவனுக்கு அளவில்லாத வேதனையை அளித்தது. ஆயினும் தந்தையை விடுதலை செய்ய வேண்டிய கடமையை அவன் எல்லாவற்றைக்காட்டிலும் முக்கியமான கடமையாகக் கருதினான். பாண்டிய குமாரியிடம் தான் கொண்ட காதல் பூர்த்தியாக வேண்டுமானால், அதற்கும் உத்தம சோழரை விடுவிப்பது ஒன்றுதான் வழி. இவ்விதம் எண்ணிச் சுகுமாரன் புவன மோகினி தன்னிடம் நம்பிக்கை வைத்துக் கொடுத்த மோதிரத்தைத் தான் வந்த காரியத்துக்குப் பயன்படுத்திக் கொள்ள விரும்பினான். ஆயினும் அதற்கு இன்னும் பல தடங்கல்களும் அபாயங்களும் இருக்கத்தான் இருந்தன. ஒற்றர் தலைவன் தினகரன் அந்தச் சிற்ப மண்டபத்தைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தது எல்லாவற்றிலும் பெரிய இடையூறு. அதை எப்படி நிவர்த்தி செய்வது என்று அவன் சிந்தித்துக் கடைசியில் அந்த இடையூற்றையும் தன்னுடைய நோக்கத்துக்குப் பயன்படுத்திக் கொள்ள ஓர் உபாயம் கண்டுபிடித்தான்.

அன்று சூரியன் அஸ்தமித்து இருள் சூழ்ந்ததும் சுகுமாரன் சிற்பக் கூடத்திலிருந்து வெளியேறினான். சற்றுத் தூரத்தில் வேறு எதையோ கவனிப்பவன் போல நின்று கொண்டிருந்த தினகரனை அணுகி, ''ஐயா! இந்த ஊரில் சிறைக் கூடம் எங்கே இருக்கிறது தெரியுமா?'' என்று கேட்டான். தினகரனின் முகத்தில் ஏற்பட்ட மாறுதலையும் அவனுடைய புருவங்கள் மேலேறி நின்றதையும் கவனித்தும் கவனியாதவன் போல ''என்ன ஐயா! நான் சொல்வது காதில் விழவில்லையா? இந்த ஊரில் சிறைக் கூடம் எங்கே இருக்கிறது? எப்படிப் போகவேண்டும்?'' என்றான். அதற்குள் தினகரன் நிதானமடைந்து விட்டான். 'இந்த ஊரில் பன்னிரண்டு சிறைக் கூடங்கள் இருக்கின்றன. நீ எதைக் கேட்கிறாய் அப்பா?' என்றான். 'உத்தம சோழரை வைத்திருக்கும் சிறையைக் கேட்கிறேன்' என்று சுகுமாரன் சொன்னபோது மறுபடியும் தினகரனுடைய முகம் ஆச்சரியம் கலந்த உவகையைக் காட்டியது. 'உத்தம சோழரை அடைத்திருக்கும் சிறை திருப்பரங்குன்றத்துக்குப் பக்கத்தில் இருக்கிறது. ஆனால் நீ எதற்காகக் கேட்கிறாய்? நீ இந்த ஊரான் இல்லை போலிருக்கிறதே?' என்றான். 'ஆமாம்! நான் இந்த ஊர்க்காரன் இல்லை. தஞ்சாவூரிலிருந்து வந்தவன். இன்று ராத்திரி எனக்கு உத்தம சோழரை அவசியம் பார்த்தாக வேண்டும். ஆனால் அவர் இருக்கும் சிறை எனக்குத் தெரியாது. உனக்கு முக்கியமான வேலை ஒன்றும் இல்லை போலிருக்கிறதே! கொஞ்சம் எனக்கு வழி காட்ட முடியுமா?' என்றான்.

தினகரன் மேலும் திகைப்புடன், 'வழி காட்ட முடியும், அப்பா! அதைப் பற்றிக் கஷ்டம் ஒன்றுமில்லை. ஆனால் நீ என்ன உளறுகிறாய்? கடுஞ் சிறையில் இருக்கும் உத்தம சோழரை நீ எப்படிப் பார்க்க முடியும்?' என்றான். 'அதற்கு என்னிடம் ஒரு மந்திரம் இருக்கிறது. அதைச் சொன்னால் சிறைக் கதவு உடனே திறந்து விடும். உனக்கு நம்பிக்கை இல்லாவிட்டால் நீயும் என்னோடு வந்து பார்! எனக்கு வழி காட்

— அமரர் கல்கி —

டியதாகவும் இருக்கும்' என்றான் சுகுமாரன். ஒற்றர் தலைவன் தன்னுடைய திகைப்பையும் வியப்பையும் வெளிக் காட்டாமல் அடக்கிக் கொண்டு 'நான் வழி காட்டுவது இருக்கட்டும். உத்தம சோழரை நீ எதற்காகப் பார்க்கப் போகிறாய்? அவரிடம் உனக்கு என்ன வேலை? நீ யார்?' என்றான். 'நானா? தேவேந்திரச் சிற்பியாரின் மாணாக்கன். செப்புச் சிலை வார்க்கும் வித்தையின் இரகசியத்தைத் தெரிந்து கொள்வதற்காகப் போகிறேன். பாண்டிய குமாரி பெரிய மனசு பண்ணி முத்திரை மோதிரத்தை என் வசம் கொடுத்திருக்கிறாள். நாளைக்கு அதைத் திருப்பிக் கொடுத்து விட வேண்டும் என்று சொல்லியிருக்கிறாள். ஆகையால் இன்று ராத்திரியே உத்தம சோழரை நான் பார்த்தாக வேண்டும். உனக்கு வர விருப்பமில்லையென்றால் வேறு யாரையாவது அழைத்துக் கொண்டு போகப் போகிறேன்' என்றான் சுகுமாரன்.

இதையெல்லாம் பற்றி என்ன நினைக்கிறது என்று தினகரனுக்குத் தெரியவில்லை. இதில் ஏதோ கபட நாடகம் இருக்கிறது என்பதுமட்டும் அவன் மனத்துக்குள் தெரிந்தது. எப்படியிருந்தாலும் இந்தப் பையனைத் தனியாக விடக் கூடாது, தானும் பின்னோடு போவது நல்லது என்று தீர்மானித்தான். 'இல்லை அப்பனே! நானே வருகிறேன். எனக்கு அந்தச் சிறைச் சாலையின் காவலர்கள் சிலரைக் கூடத் தெரியும்!' என்றான். 'வந்தனம். இங்கிருந்து நீ சொல்லும் சிறைக் கூடம் எத்தனை தூரம் இருக்கும்?' என்று சோழ குமாரன் தினகரனிடம் கேட்டான்.

'அரைக் காதம் இருக்கும்' என்று தினகரன் கூறியதும், 'அவ்வளவு தூரமா? நடந்து போய் வருவது என்றால் வெகு நேரம் ஆகிவிடுமே? நான் இரவு சீக்கிரமாகத் தூங்குகிறவன். குதிரை ஒன்று கிடைத்தால் சீக்கிரமாய்ப் போய் வரலாம்' என்றான் சுகுமாரன். 'குதிரைக்கு என்ன பிரமாதம்? ஒன்றுக்கு இரண்டாகவே வாங்கித் தருகிறேன். இரண்டு பேருமே போய்விட்டு வரலாம். எனக்குக் கூட உத்தம சோழரைப் பார்க்க வேண்டும் என்று ஆசையாக இருக்கிறது. ஆமாம், அவர் ராஜ ராஜ சோழரின் நேரான வம்சத்தில் பிறந்தவராமே? அது உண்மைதானா?' என்று தினகரன் கேட்டான். 'அதெல்லாம் எனக்குத் தெரியாது, ஐயா! உத்தம சோழர் சிற்பக் கலையில் சிறந்த நிபுணர் என்று மட்டும் தெரியும். முக்கியமாகச் செப்பு விக்கிரகம் வார்க்கும் வித்தை தற்சமயம் இந்தத் தேசத்திலேயே அவர் ஒருவருக்குத்தான் தெரியுமாம். பாண்டிய குமாரி புவனமோகினி சிற்பக் கலையில் ஆசையுள்ளவளாயிருப்பது அதிர்ஷ்ட வசந்தான். இல்லாவிட்டால் பாண்டிய மன்னரின் முத்திரை மோதிரம் இலேசில் கிடைத்துவிடுமா?' என்று சொல்லிச் சுகுமாரன் தான் பத்திரமாய் வைத்திருந்த முத்திரை மோதிரத்தை எடுத்து ஒரு தடவை பார்த்து விட்டு மறுபடியும் அதைப் பத்திரப்படுத்தினான். ஆனால் அந்த ஒரு விநாடி நேரத்தில் அது உண்மையான அரசாங்க முத்திரை மோதிரம் என்பதைத் தினகரன் பார்த்துக் கொண்டான். அதைப் பலவந்தமாகச் சுகுமாரனிடமிருந்து பிடுங்கிக்கொண்டு விடலாமா என்று ஒரு கணம் தினகரன் நினைத்தான். ஆனால் இந்த அதிசயமான மர்மத்தை முழுதும் ஆராய்ந்து தெரிந்து கொள்ள வேண்டும் என்னும் ஆசை காரணமாக அந்த எண்ணத்தை ஒற்றர் தலைவன் கைவிட்டான். 'சரி, வா! போகலாம்!' என்று சொன்னான்.





அரண்மனைக் குதிரை லாயங்களில் ஒன்றுக்குத் தினகரன் இளஞ் சிற்பியை அழைத்துக் கொண்டு போனான். உள்ளே சென்று லாயத் தலைவனிடம் ஏதோ சொல்லிவிட்டு இரண்டு குதிரைகளைக் கொண்டு வந்தான்.

'அடே அப்பா! நீ இவ்வூரில் ரொம்பச் செல்வாக்குள்ள ஆள் போலிருக்கிறதே! நீ யார்?' என்றான் சுகுமாரன். தினகரன் ஒரு கணம் யோசித்து 'நான் யார் என்றால், இந்த மதுரையில் வசிக்கும் ஒருவன். எனக்குக் கூடச் சிற்பக் கலையில் ஆசை உண்டு. அதனால்தான் உன்னோடு வருகிறேன்' என்றான். 'கட்டாயம் வா! அது மட்டுமல்ல; உத்தம சோழரிடம் நான் எதற்காகப் போகிறேனோ அதை மட்டும் தெரிந்து கொண்டு விட்டால் அப்புறம் சிற்ப வித்தையில் நான் தெரிந்து கொள்ள வேண்டியது ஒன்றும் இராது. மதுரையில் ஒரு சிற்பக் கூடம் ஏற்படுத்தலாம் என்றிருக்கிறேன். நீ எனக்கு உதவி செய்ய முடியுமா?' என்றான் சுகுமாரன். 'ஆகட்டும்; முடிந்ததைச் செய்கிறேன்' என்றான் தினகரன். இருவரும் குதிரைகளின் மேல் ஏறித் திருப்பரங்குன்றத்துக்கு அருகில் இருந்த பெரிய சிறைச் சாலைக்குச் சென்றார்கள். வழக்கம்போல் சிறைக் காவலர்கள் அவர்களைத் தடை செய்தார்கள். ஒற்றர் தலைவன் தினகரனைப் பார்த்ததும் அவர்களுக்குக் கொஞ்சம் திகைப்பாக இருந்தது. ஏனெனில் தினகரனுக்குப் பாண்டிய ராஜ்யத்தில் மிக்கச் செல்வாக்கு உண்டு என்பது அவர்களுக்குத் தெரியும். ஆனாலும் யாரா யிருந்தால் என்ன? அவர்களுடைய கடமையைச் செய்தேயாக வேண்டுமல்லவா?

தடுத்த காவலர்களிடம் சுகுமாரன் முத்திரை மோதிரத்தைக் காட்டியதும் மந்திரத்தைக் காட்டிலும் அதிக சக்தி முத்திரை மோதிரத்துக்கு உண்டு என்று தெரிந்தது. புவன மோகினி சொன்னது போலவே காவலர்கள் தலை வணங்கினார்கள். கதவுகள் தட்சணமே திறந்து கொண்டன. இருவரும் பல வாசல்கள் வழியாக நுழைந்து பல காவலர்களைத் தாண்டி உத்தம சோழரை வைத்திருந்த அறைக்குச் சென்றார்கள். உத்தம சோழரைப் பயங்கரமான தோற்றத்துடன் பார்த்ததும் சுகுமாரனுடைய உள்ளத்தில் அழுங்கி யிருந்த கோபம், துக்கம் எல்லாம் பொங்கின. ஆயினும் மிகவும் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டான். அவருடைய அறைக்குள் நுழைவதற்கு முன், 'நீர் கொஞ்ச நேரம் வெளியே இருக்கலாமா?' என்று தினகரனைக் கேட்டான். 'நன்றா யிருக்கிறது. இத்தனை



பத்மவிபூஷண் ஸ்ரீமதி சுமதி மொரார்ஜி — நிர்வாக டைரக்டர், சிந்தியா ஸ்டீம் நேவிகேஷன் கம்பெனி.



பத்மபூஷண் திரு கே. எம். செரியன் — ஆசிரியர், மலையாள மனோரமா.



பத்மஸ்ரீ ஸ்ரீமதி சாந்தா ராவ் — நாட்டியம்.



பத்மஸ்ரீ ஆர். மாத்ருபூதம் — சமூக சேவை.

தூரம் அழைத்துக் கொண்டு வந்துவிட்டு இப்போது வெளியிலேயே நிற்கச் சொல்கிறாயே?' என்றான் தினகரன். அவ்விதம் சொல்லிக் கொண்டே சுகுமாரனுடன் உள்ளே நுழைந்தான், சுகுமாரன் வேண்டியதும் அதுதான். அறைக்குள் நுழைந்ததும் சுகுமாரன் கதவைச் சாத்திக் கொண்டான். தினகரன்மீது ஓரே பாய்ச்சலாகப் பாய்ந்து அவனைப் பிடித்துக் கட்டிவிட்டான். வாயிலும் துணி அடைத்து விட்டான். இதையெல்லாம் பார்த்துத் திகைத்திருந்த உத்தம சோழனரச் சுகுமாரன் உடனே விடுதலை செய்தான். அதற்கு உதவியாக அவன் கல்லுளியும் சுத்தியும் கொண்டு வந்திருந்தான். உத்தம சோழரின் இடுப்பில் சங்கிலி கட்டி, அதைச் சுவரில் அடித்திருந்த இரும்பு வளையத்தில் மாட்டியிருந்தார்கள். அந்த வளையத்தில் இப்போது சுகுமாரன் தினகரனைப் பிடித்துக் கட்டிவிட்டான். அவன் அணிந்திருந்த உடைகளைக் கழற்றித் தந்தையை அணிந்து கொள்ளச் செய்தான். 'எல்லா விவரமும் அப்புறம் சொல்கிறேன். இப்போது என்னோடு வாருங்கள். நான் என்ன பேசினாலும் மறுமொழி சொல்ல வேண்டாம்' என்று தந்தையிடம் கூறினான்.

உடனே தந்தையும் மகனும் சிறையை விட்டு வெளிக் கிளம்பினார்கள். நல்ல இருட்டாகையால் காவலர்கள் அவர்களைக் கவனிக்கவில்லை. சுகுமாரனும் தினகரனுடன் பேசுவதுபோல 'உத்தம சோழருக்கு ரொம்ப வயதாகிவிட்டது. பாவம்! எத்தனை காலம் இன்னும் உயிரோடு இருக்கிறாரோ, என்னமோ?' என்று சொல்லிக் கொண்டே நடந்தான். இருவரும் சிறையை விட்டு வெளியேறினார்கள். சுகுமாரனும் தினகரனும் ஏறிவந்த குதிரைகள் ஆயத்தமாயிருந்தன. அவற்றின்மேல் ஏறித் தஞ்சாவூரை நோக்கிக் குதிரைகளைத் தட்டிவிட்டார்கள். வழியில் ஆங்காங்கு அவர்களை நிறுத்தியவர்களுக்கெல்லாம் முத்திரை மோதிரத்தைக் காட்டியதும் தடுத்தவர்கள் திகைப்படைந்து இரண்டு பேருக்கும் வழி விட்டார்கள். குதிரை மீது வாயுவேக மனோவேகமாகப் போய்க் கொண்டிருந்த போதிலும் சுகுமாரனுடைய உள்ளம் மட்டும் மதுரையிலேயே இருந்தது. தான் செய்துவிட்ட மோசத்தைப் பற்றிப் புவனமோகினி அறியும்போது எப்படியெல்லாம் அவள் நொந்து கொள்வாளோ, அதனால் அவளுக்கு என்ன துன்பம் விளையுமோ என்னமோ என்று எண்ணி மிகவும் வருத்தப்பட்டான்.'' (தொடரும்)



# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

## பதின்மூன்றாம் அத்தியாயம்

## குந்தவை கேட்ட வரம்!

ஜோதிடரின் வீட்டுக்குள் பழுவேட்டரையர் பிரவேசித்த போது அங்கு உண்மையாகவே குந்தவைப் பிராட்டியும் வானதியும் இருந்தார்கள்.

ஈழத்து ராணியைப் பொழுது விடிந்ததும் காணாததிலிருந்து குந்தவையின் மனம் அமைதியை இழந்து விட்டது. அதேசமயத்தில் பூங்குழலியும் காணாமற் போனது அவளுடைய கலக்கத்தை அதிகமாக்கிற்று. முதன் மந்திரி அநிருத்தரைப் பார்க்கச் சென்றாள். அச்சமயத்தில் அங்கே அருள்மொழிச் சோழனைப் பற்றிச் செய்தி வந்திருந்தது. நாகைப்பட்டினத்தில் அடித்த புயலின் காரணமாக அவன் வெளிப்பட நேர்ந்ததென்றும், திரளான மக்கள் கூடி அவனை வெற்றி முழக்கத்துடன் தஞ்சைக்கு அழைத்து வருகிறார்கள் என்றும் அறிந்தாள். குந்தவையின் பரபரப்பு எல்லையைக் கடந்து விட்டது. இதனால் ஏதோ விபரீதம் வரப் போகிறது என்று கருதினாள். பொன்னியின் செல்வனை வழியில் சந்தித்துப் பேசித் தஞ்சையில் நடந்ததை யெல்லாம் தெரிவிக்க வேண்டும் என்று விரும்பினாள். அவன் பெரும் ஜனக் கூட்டம் புடைசூழத் தஞ்சைக் கோட்டையில் பிரவேசிக்க விரும்பினால், பழுவேட்டரையரின் படைவீரர்கள் அவனைத் தடுத்து நிறுத்த முயலுவார்கள். இதற்கிடையில் பூதிவிக்கிரம கேசரி தென் பிரதேசத்துப் படைகளுடனே கொடும்பாளூர் வரைக்கும் வந்து விட்டார் என்று தெரிய வந்திருந்தது. இரண்டு படைகளும் தஞ்சைக்கருகில் மோதிக் கொள்ளும்படி நேரிடலாம். அதனால் தந்தையின் உள்ளம் புண்படும் என்பது நிச்சயம். அதனால் அவருடைய உயிருக்கே அபாயம் நேர்ந்து விடலாம். மேலும் என்னென்ன விளையுமோ, யாருக்குத் தெரியும்? புயற்காற்றின் காரணமாகக் குடிமக்களின் உள்ளங்கள் கொந்தளித்துக் கொண்டிருக்கின்றன. ஏதாவது ஒரு வியாஜம் ஏற்பட வேண்டியதுதான். சோழ நாடே அழியும்படியான பெரும் உள்நாட்டுக் கலகம் மூண்டுவிடக்கூடும். பிறகு அதை நிறுத்துவது எப்படி? வந்த பின்னர் நிறுத்த முயலுவதைக் காட்டிலும் முன்னாலேயே தவிர்க்கப் பார்ப்பது அவசியம் அல்லவா? இல்லாவிடில் இத்தனை காலமும் செய்த முயற்சியெல்லாம் வீணாகி விடுமே? ஆதலின் அருள்மொழிச் சோழனை வழியிலேயே சந்தித்துப் பழையாறையில் சிறிது காலத்துக்கு நிறுத்திக் கொள்ள வேண்டும். கடம்பூரிலிருந்து பெரிய பழுவேட்டரையரையும் தருவிக்க வேண்டும். அருள்மொழிக்கு இராஜ்யம் ஆளும் ஆசை இல்லை என்பதை அவருக்குத் தெரிவித்து, அவருடைய சம்மதம் பெற்ற பிறகுதான், தஞ்சைக்கு அவனை அழைத்துப் போக வேண்டும்......

இவ்விதம் தனக்குள் சிந்தித்து முடிவு செய்து கொண்டு, தந்தையிடம் கூடச் சொல்லிக் கொள்ளாமல் அன்னையிடமும் அநிருத்தரிடமும் மட்டும் சொல்லிவிட்டு இணைபிரியாத வானதியையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டாள். பழையாறைக்குப் போகுமுன்பு குடந்தை ஜோதிடரை இன்னொரு தடவை பார்த்துவிட விரும்பினாள். கவலை அதிகம் ஏற்படும்போது வருங்

காலத்தைப் பற்றி ஜோதிடம் பார்த்து அறிய விரும்புவது மனித இயல்பு அல்லவா ?

வழக்கம்போல் அம்மன் கோயிலுக்கு அருகில் ரதத்தை விட்டுவிட்டு ஜோதிடர் வீட்டுக்குள் புகுந்தாள். ஜோதிடரிடம் அவளுடைய கவலையைத் தெரிவிக்கத் தொடங்கிச் சிறிது நேரம்கூட ஆகவில்லை. அதற்குள் வீட்டு வாசலில் ஏதோ தடபுடல் நடைபெறும் சத்தம் கேட்டது. முக்கியமாக, பழுவேட்டரையரின் ஹுங்காரம் அவளுக்கு ரோமாஞ்சனம் உண்டு பண்ணியது. அந்த மாதிரி கம்பீரமாக ஹுங்காரம் செய்யக் கூடியவர் பெரிய பழுவேட்டரையர் ஒருவர்தான். தடுக்க முயன்ற ஜோதிடரின் சீடனைத் தள்ளி விட்டுப் பழுவேட்டரையர் உள்ளே வருவதாகக் காணப்பட்டது. அவர் எப்படி இங்கே வந்தார் ? எதற்காக வருகிறார்? அதுவும் இந்த வேளையில்?....

ஆகா! ஒரு வேளை ஜோதிடம் கேட்கத்தான் வருகிறார் போலும்! அவர் ஜோதிடருடன் பேசுவதைக் கேட்டால் ஒரு வேளை அவருடைய





மனத்தில் உள்ள எண்ணங்கள் தெரியக்கூடும். இராஜ்யத்துக்கும் இராஜ குலத்துக்கும் பெரிய நெருக்கடி நேர்ந்திருக்கும் இச் சமயத்தில் பெரிய பழுவேட்டரையரின் மனப் போக்குத் தெரிந்திருந்தால் எவ்வளவோ சௌகரியமாயிருக்கும். அதைத் தெரிந்து கொள்ள இப்போது ஒரு சந்தர்ப்பம் நேர்ந்திருக்கிறது. மேலும், தானும் வானதியும் அங்கு இருப்பதைப் பார்த்தால், அவர் என்ன எண்ணிக் கொள்வாரோ என்னமோ ? ....ஏன் ? தவறாகத்தான் எண்ணிக் கொள்வார் ! சந்தேகமில்லை. ஆகையால் அவர் கண்ணில் படாமல் மறைந்திருப்பதுதான் நல்லது....

குந்தவை, ஜோதிடரிடம் ஜாடையினால் தனது நோக்கத்தைத் தெரிவித்து விட்டு வானதியையும் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு அவசரமாக அடுத்த அறைக்குள்ளே சென்றாள்.

அவர்கள் புகுந்த அறையின் கதவு சாத்தப்பட்ட தட்சணமே பழுவேட்டரையர் உள்ளே பிரவேசித்தார். பரபரப்புடன் எழுந்து நின்று கும்பிட்ட ஜோதிடரை உற்றுப் பார்த்துவிட்டுச் சுற்றுமுற்றும் நோக்கினார். அவர் முகத்தில் வியப்புக்கும் ஏமாற்றத்துக்கும் அறிகுறி தென்பட்டது. இது ஒரு கண நேரந்தான். உடனே சமாளித்துக் கொண்டு, ''ஜோதிடரே! நான் யார் தெரிகிறதா ? தனாதிகாரி பெரிய பழுவேட்டரையனே தான்! ஏன் இவ்வாறு பேந்தப் பேந்த விழிக்கிறீர்? அவ்வளவு உருமாறிப் போயிருக்கிறேனா? உம்மால் எனக்கு ஒரு முக்கியமான காரியம் ஆக வேண்டியிருக்கிறது. ஒரு பெரிய உதவி நீர் எனக்குச் செய்ய வேண்டும். முதலில் சாப்பிடுவதற்கு ஏதேனும் இருந்தால் கொண்டு வாரும். ரொம்பப் பசியாயிருக்கிறது. சாப்பிட்டுக் கொண்டே சொல்ல வேண்டியதைச் சொல்கிறேன்'' என்றார்.

ஜோதிடர் தட்டுத் தடுமாறி, ''ஐயா! இந்த ஏழை எளியவனால் தங்களுக்கு என்ன பெரிய உதவி தேவையாயிருக்க முடியும்? இந்தக் குடிசையைத் தேடித் தாங்கள் வந்தது என் முன்னோர் செய்த பாக்கியம். தங்களுடைய அந்தஸ்துக்குத் தக்கபடி விருந்து அளிக்க என்னால் இயலாது. ஆனாலும் இந்தக் குடிசை

யில் உள்ளவை யெல்லாம் தங்க ளுடையவைதான். தயவு செய்து அம ருங்கள். நின்று கொண்டிருக்கிறீர்களே?

உட்கார நேரமில்லை. ஏதாவது சாப்பிடு வதற்குக் கொடுக்கக் கூடியது இருந்தால் இலையிலே சுற்றிக் கையிலே கொடுத்து விடுவீர். தஞ்சைக்கு அவசரமாக ஒரு செய்தி அனுப்ப வேண்டும். என் சகோ தரன் காலாந்தக கண்டனுக்கு....ஓலை யும் எழுத்தாணியும் தருகிறீரா?..... வேண்டாம்! ஓலை எழுதிக் கொண் டிருக்க நேரமில்லை. என் முத்திரை மோதிரத்தைக் கொடுக்கிறேன். அதை எடுத்துக் கொண்டு நீர் தஞ்சாவூர் உடனே போக முடியுமா? அல்லது வாசலில் நின்றானே உமது சீடன், நல்ல தடியனாக இருக்கிறான். அவனை அவசர



தங்களைப் பார்த்த வுடனே திடுக்கிட்டுப் போனேன். அதனால் தங்களைத் தக்கபடி வர வேற்று உபசரிப்பதற்குத் தவறிவிட்டேன். ஆகா! இந்த எளியவனுடைய குடிசையில் தாங்கள் அமருவதற்குத் தகுதி யான ஆசனம் கூட இல்லை. பெரிய மனம் செய்து அந் தப் பலகை யிலேஉட்கார வேண்டும்'' என்று சற்று முன் குந்த வையும் வான தியும் உட் கார்ந்திருந்த பலகைகளைச் சுட்டிக் காட் டினார்.

பழுவேட்டரையர் அப் பலகைகளையும் அவற் றின் அருகில் சிந்தியிருந்த மலர்களையும் உற்றுப் பார்த்து விட்டு, ''ஜோதி டரே! இல்லை; எனக்கு

மாக அனுப்ப முடியுமா?'' என்று கேட்டார்.

''தங்கள் கட்டளை எதுவோ அப்படியே செய்கிறேன். நானும் என் சீடனும் இரண்டு பேரும் வேணுமானாலும் போகிறோம். ஆனால் தனாதிபதி! பெரிய மனசு செய்து சிறிது நேரம் இந்த ஏழையின் குடிசையில் அமர்ந்து இந்த எளியவன் அளிக்கும் அமுதைத் தாங்கள் அருந்தி விட்டுப் போக வேண்டும்!''

''ஜோதிடரே! எதற்காக உம்மை ஏழை என்றும் எளியவன் என்றும் அடிக்கடி சொல்லிக் கொள்கிறீர்? உம்முடைய வீட்டைத் தேடி அரசர்களும் அரசிளங் குமரிகளும் அடிக்கடி வருவதுண்டு என்று கேள்விப்பட்டிருக்கிறேன். நான் ஒருவனே உம்மிடம் ஜோதிடம் கேட்க வராதவன். அது தவறு என்பதை உணர்ந்து கொண்டேன். ஒரு வேளை உம்மிடம் கேட்டிருந்தால் இம்மாதிரி பயங்கர விபத்துக்கள் ஏற்படாமலிருந்திருக்கலாம்...''

''ஐயா! தங்கள் மொழிகள் எனக்குப் பெரிதும் கவலையைத் தருகின்றன. என்ன விபத்து நேர்ந்தது? யாருக்கு? தங்களை இந்தக் கோலத்தில் பார்த்ததும் நான் திடுக்கிட்டது சரிதான். புயலிலும் வெள்ளத்திலும் சிக்கிக் கொண்டீர்களா? கொள்ளிடம் உடைப்பு எடுத்துக் கொண்டது என்று கேள்விப் பட்டேன். ஒருவேளை அதனால்....? தனாதிபதி! பழுவூர் இளையராணி சௌக்கியமாக இருக்கிறார்கள் அல்லவா?'' என்று ஜோதிடர் கேட்டதும், பழுவேட்டரையர் பயங்கரத் தொனியில் சிரித்தார்.

''இல்லை, இல்லை! பழுவூர் இளைய ராணிக்கு ஒன்றும் நேரவில்லை. அவள் கொள்ளிடத்தில் முழுகிச் செத்துப் போய்விடவில்லை. இதுவரையில் கடம்பூர் அரண்மனையில் சௌக்கியமாகவே இருக்க வேண்டும். ஆனால் அந்தச் சண்டாளி நாளை இந்த நேரம் வரையில் உயிரோடு இருப்பாளா என்று நான் சொல்ல முடியாது. ஜோதிடரே! நீர் சொல்ல முடியுமா? இராஜ குடும்பங்களைச் சேர்ந்தவர்கள் எல்லாருடைய ஜாதகங்களும் உம்மிடம் இருப்பதாகக் கேள்விப் பட்டிருக்கிறேன். அது உண்மையா? நந்தினியின் ஜாதகம், நான் கிழ வயதில் அறிவு கெட்டு மணந்து கொண்ட மோகினிப் பேயின் ஜாதகம் இருக்கிறதா?''

ஜோதிடர் மேலும் பதறிப் போனவராய், ''தனாதிபதி! இது என்ன சொல்கிறீர்கள்? என்னைச் சோதனை செய்கிறீர்களா? இளைய ராணியின் ஜாதகம் என்னிடம் இல்லை. அவர் பிறந்த நாளும் வேளையும் தாங்கள் தெரிவித்தால் ஜாதகம் கணிக்க முடியும்'' என்றார்.

''வேண்டாம், வேண்டாம். நந்தினியின் ஜாதகத்தை நானே கணித்துக் கொள்வேன். அவளுடைய ஆயுளை நானே, என் கையினாலேயே முடிவு கட்டத் தீர்மானித்து விட்டேன். மற்றவர்களுடைய ஜாதகத்தைப் பற்றித் தெரிந்தால் சொல்லுங்கள். சக்கரவர்த்தியின் ஆயுர்பாவம் எப்படி இருக்கிறது? அவருடைய குமாரர்கள் இருவருடைய ஆயுர்பாவமும் எப்படி இருக்கிறது?... ஆகா! தலையை அசைக்கிறீர்! நீர் சொல்ல மாட்டீர். உம்மை நான் சோதிப்பதாகவே எண்ணுவீர். அல்லது உம்முடைய ஜோதிட சாஸ்திரம் எல்லாமே வெறும் புரட்டோ என்னமோ, யார் கண்டது?... ஜோதிடரே! ஜாதகம் ஒரு புறம் இருக்கட்டும். சில காலமாக வானத்தில் தோன்றிக் கொண்டிருந்த தூமகேது இன்று காலையில் வானத்திலிருந்து பூமியில் விழுந்து மறைந்ததே, அது உமக்குத் தெரியுமா? தெரிந்தால் அதன் பொருள் என்ன என்று சொல்லக் கூடுமா? அது ஏதேனும் பெரிய உற்பாதத்தைக் குறிப்பிடுகிறதா? சக்கரவர்த்திக்கோ அவருடைய மக்களுக்கோ நேரப் போகிற விபத்தைக் குறிப்பிடுகிறதா? இதைக் கூட நீர் சொல்ல மறுப்பதாயிருந்தால் உம்முடைய ஜோதிடம் வெறும் புரட்டுத்தான்!....''

''தனாதிபதி! அப்படி முடிவு கட்ட வேண்டாம். இராஜாங்க சம்பந்தமான காரியங்களில் ஜோதிடம் பார்க்கக் கூடாது என்பது எங்கள் தொழிலின் பரம்பரை மரபு. இன்று காலையில் தூமகேது விழுந்ததை நான் கண்ணால் பார்க்கவில்லை. ஏதோ ஜகஜ்ஜோதியான வெளிச்சம் தோன்றியதைக் கண்டு ஆச்சரியப்பட்டு உடனே எழுந்து வெளியில் சென்று பார்த்தேன். சில நாட்களாக வால் குறுகி வந்து கொண்டிருந்த தூமகேதுவைக் காணவில்லை. தூமகேது தோன்றுவதும் விழுவதும் அரச குலத்தினருக்கு அரிஷ்டத்தைக் குறிப்பிடுவதாகச் சொல்லுவார்கள். ஆனால் அது ஜோதிட சாஸ்திரத்தைச் சேர்ந்ததல்ல. ஜனங்களின் தொன்று தொட்ட நம்பிக்கை. அதில் எனக்கு அவ்வளவாக நம்பிக்கை கிடையாது. இன்று காலையில் கூட சக்கரவர்த்தி சௌக்கியம் என்று தெரிந்து கொண்டிருக்கிறேன்...''

''அது நமது அதிர்ஷ்டம்தான். இன்றிரவு சக்கரவர்த்திக்கு ஒன்றும் நேரிடாமல் இருக்க வேண்டும். நாளை வரையில்

இவ்விதழ் பொன்னியின் செல்வனில் வரும் காட்சியைத்தான் அட்டைப்படத்தில் சித்திரித்திருக்கிறார் ஓவியர் திரு வினு.

# உண்மையே வெல்லும்

உண்மையே வெல்லும் என்ற கட்டுரைப் போட்டியில் பரிசு பெறுபவர்கள் விவரம் பின்வருமாறு:

**முதல் பரிசு**
**ரூ. 100-00**

**இரா. கோபாலகிருஷ்ணன்,**
ஆராய்ச்சி மாணவர், தத்துவத்துறை,
அண்ணாமலை பல்கலைக் கழகம், அண்ணாமலைநகர்.

**இரண்டாவது பரிசு**
**ரூ. 75-00**

**சு. வெங்கடரமணி,**
I பி.எஸ்ஸி. மாணவர்,
கிறிஸ்துவக் கல்லூரி, தாம்பரம்.

**மூன்றாவது பரிசு**
**ரூ. 50-00**

**சோ. கிருஷ்ணமூர்த்தி,**
III பி.ஏ. (இலக்கியம்) மாணவர்,
செயிண்ட் ஜோஸப் கல்லூரி, திருச்சி-2.

பரிசு பெற்ற மாணவர்களுக்கு ராஜாஜி அவர்களுடைய அன்பளிப்பாக அவர் எழுதிய சில நூல்களும் அவரது கையெழுத்துடன் அனுப்பி வைக்கப்படும்.

இக்கட்டுரைப் போட்டியில் ஏறத்தாழ ஆயிரம் மாணவ, மாணவியர் கலந்து கொண்டனர். அவர்கள் அனைவருக்கும் எங்கள் நன்றியையும் ராஜாஜி அவர்களின் நல்லாசிகளையும் தெரிவித்துக் கொள்கிறோம். —ஆசிரியர்.

அவர் சுகமாக இருந்தால் அப்புறம் கவலையில்லை. பொன்னியின் செல்வனைப் பற்றி ஏதேனும் தெரியுமா?...''

''நேற்றிரவு வெகு நேரத்துக்குப் பிறகு இளவரசர் திருவாரூர் வந்து சேர்ந்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். தளபதி! லட்சக் கணக்கான மக்கள் அவரைச் சூழ்ந்து வந்து கொண்டிருக்கிறார்களாம். அவருடைய விருப்பத்துக்கு விரோதமாக அவரைத் தஞ்சைக்கு அழைத்து வருகிறார்களாம்...''

''ஆகா! அவர்கள் மட்டும் இளவரசரைத் தஞ்சையில் கொண்டு போய்ச் சேர்த்து விட்டால் எவ்வளவோ நன்றாக இருக்கும். ஆனால் முடியுமா? லட்சக் கணக்கானவர்கள் சூழ்ந்திருந்தாலும் யமனைத் தடுத்து நிறுத்த முடியுமா? சொல்லும், ஜோதிடரே! சொல்லும்! நீர் ஜோதிடம் சொல்லா விட்டாலும் நான் சொல்லுகிறேன். சக்கரவர்த்திக்கும் அவருடைய குமாரர்கள் இருவருக்கும் இன்றைக்குப் பெரிய கண்டம் காத்திருக்கிறது. யம தர்மன் அவர்களை நெருங்கி நெருங்கி வந்து கொண்டிருக்கிறான். சக்கரவர்த்தியின் யமன் பழுவூர் மாளிகையைச் சேர்ந்த பொக்கிஷ நிலவறையில் மறைந்திருக்கிறான். அருள்மொழியின் யமன் யானைப் பாகனுடைய அங்குசத்திலே ஒளிந்திருக்கிறான். அவர்கள் இருவரையும் தடுத்து நிறுத்திச் சக்கரவர்த்தியையும், பொன்னியின் செல்வனையும் காப்பாற்றுவது உம்முடைய பொறுப்பு. என்னுடைய முத்திரை மோதிரத்தை எடுத்துக்கொண்டு உம் சீடன் தஞ்சைக்குப் போகட்டும். நீர் திருவாரூர் சென்று இளவரசருக்கு எச்சரிக்க வேண்டும். செய்வீரா? உடனே புறப்படுவீரா?''

ஜோதிடர் தத்தளித்துப் போனார். பழுவேட்டரையருக்குச் சித்தப்பிரமை பிடித்து விட்டதா என்ற சந்தேகம் அவர் மனத்தில் தோன்றியது. ஆனால் அப்படியும் நிச்சயமாகச் சொல்வதற்கில்லை. கூறுவதெல்லாம் அறிவுக்குப் பொருத்தமாகவே இருக்கிறது. ஆத்திரத்துடனும் பரபரப்புடனும் பேசினாலும் உண்மையைச் சொல்கிறவராகவே தோன்றுகிறது. இந்தப் பேச்சையெல்லாம் இளைய பிராட்டியும் கேட்டுக் கொண்டிருப்பாள். அவளுடைய கருத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும். எப்படியாவது இந்தக் கிழவரை இங்கிருந்து உடனே அனுப்பிவிட வேண்டும்.

''துர்க்கா பரமேசுவரியின் அருளினால் தங்களுடைய கட்டளையை என்னால் இயன்றவரையில் நிறைவேற்றி வைப்பேன்!''

இப்படி ஜோதிடர் கூறியபோது உள்ளேயிருந்து பெண்கள் அணியும் பாதச் சிலம்பின் ஒலி கேட்டது.

''ஆகா! துர்க்கா பரமேசுவரி பாதச் சதங்கையை ஒலித்து அருள் புரிகிறாள். இனி, நான் கடம்பூருக்குத் திரும்பலாம். இதோ புறப்படுகிறேன்...''

''தளபதி! பசியாயிருக்கிறது என்றீர்களே? இந்த எளியவன் வீட்டில் அமுது செய்து விட்டு...''

''வேண்டாம், வேண்டாம்! என் பசி தாகம் எல்லாம் பறந்து போய்விட்டன.



பம்பாய் லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன் காரியதரிசி திரு பி. ஆர். கிருஷ்ணசுவாமி அவர்களின் புதல்வி குமாரி ஜெயஸ்ரீயின் அரங்கேற்றம் பம்பாய் ஷண்முகானந்த ஹாலில் சமீபத்தில் விமரிசையாக நடந்தது. பம்பாய் லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன் மானேஜிங் டைரக்டர் திரு என். வி. நாயுடு இந் நடன வைபவத்துக்குத் தலைமை வகித்துச் சிறப்பித்தார்.

நானும் கடம்பூருக்குப் பறந்து போக வேண்டும். ஆலயத்துக்கு அருகில் ரதம் ஒன்று நிற்கிறதே, அது யாருடையது, ஜோதிடரே! அதை நான் எடுத்துச் செல்லப் போகிறேன். கொள்ளிடக் கரை சென்றதும் திருப்பி அனுப்பி விடுகிறேன். ஓடத்தை மட்டும் எடுத்துக் கொண்டு....''

''ஐயா! அந்த ரதம்....அந்த ரதம்... என்பேரில் கருணை கொண்டு அதை எடுத்துப் போகவேண்டாம்...''

''ஜோதிடரே! நீர் வீணாகக் கவலைப் படாதீர். சோழ நாட்டின் பட்டத்து இளவரசருடைய உயிரைக் காப்பாற்றுவதற்காக நான் அந்த ரதத்தை எடுத்துப் போகிறேன். துர்க்கா தேவியே அதற்குச் சம்மதம் தருவாள். மறுபடியும் பாதச் சிலம்பை ஒலிக்கச் செய்து தேவி அருள் புரிந்தால் சம்மதம் கிடைத்ததாக அறிந்து கொள்வேன்.... அதோ, கேளும்.''

இவ்விதம் பெரிய பழுவேட்டரையர் கூறிக் கொண்டிருக்கையில் இளைய பிராட்டி குந்தவை பக்கத்து அறையின் கதவைத் திறந்துகொண்டு இலேசாகப் பாதச் சிலம்பு ஒலிக்க நடந்து வந்தாள்.

பெரிய பழுவேட்டரையர் அவளைப் பார்த்து வியப்படையவில்லை; திடுக்குறவும் இல்லை.

''தாயே! நான் ஊகித்தது சரிதான். அடுத்த அறையில் நீ இருக்க வேண்டும் என்று கருதினேன். உன் முகத்தைப் பார்த்துப் பேசுவதற்கு எனக்குத் தைரியம் இல்லை. ஆகையினாலேயே உன் காதில் விழட்டும் என்று இவ்வளவு சத்தம் போட்டுப் பேசினேன். ஜோதிடரிடம் நான் சொன்னதை யெல்லாம் கேட்டுக் கொண்டாயல்லவா?''

''ஐயா! மன்னிக்க வேண்டும். நான் செய்த பிழையை மன்னிக்க வேண்டும். இந்த வீட்டில் தாங்கள் திடீரென்று பிரவேசித்தபோது, தாங்கள்தான் என்பதை என்னால் நிச்சயமாக அறிய முடியவில்லை. அதனால் தங்களுடைய பேச்சை ஒட்டுக் கேட்கும்படி நேர்ந்தது. மன்னிக்க வேண்டும்!'' என்றாள் குந்தவை.

''தாயே! நான் உன்னை மன்னிப்பதற்கு ஒரு காரணமும் ஏற்படவில்லை. உன்னிடம்தான் நான் மன்னிப்புக் கேட்க வேண்டும். மன்னிப்புக் கோரத் தகுதியுடையவனா என்பதே எனக்குச் சந்தேகமாக இருக்கிறது. இன்றிரவுக்குள் கடம்பூர் சென்று, பட்டத்து இளவரசருக்கு எதுவும் நேராமல் தடுத்தேனானால் உன்னிடம் மன்னிப்புக் கோருவதற்கு நான் தகுதி பெறுவேன். மூன்று வருஷங்களாக இந்தக் கிழவனின் கண்கள் மோகாந்தகாரத்தினால் மூடியிருந்தன. என் கண்களைத் திறப்பதற்கு நீ எவ்வளவோ பிரயத்தனம் செய்தாய். எத்தனையோ குறிப்புக்கள் சொன்னாய். ஒன்றும் என் காதில் ஏறவில்லை. என் சகோதரன் காலாந்தக கண்டனும் என் கண்களைத் திறக்க முயன்றான். அவன் முயற்சியும் பலிக்கவில்லை. நேற்றிரவு துர்க்கா பரமேசுவரியின் கருணையினால் பாண்டிய நாட்டுச் சதிகாரர்கள் இருவரின் சம்பாஷணையை ஒட்டுக் கேட்க நேர்ந்தது. அதன் பலனாகவே உண்மையை அறிந்தேன். அந்தச் சண்டாளியை, சதிகாரியை, விஷ நாகத்தை என் அரண்மனையிலேயே வைத்திருந்து பாலூட்டிச் சீராட்டி வளர்த்தேன். அவள் என்னைக் குலத் துரோகியாக்கினாள்; ராஜத் துரோகியாக்கினாள். சோழ நாட்டுப் பொக்கிஷத்திலிருந்து பொருளை எடுத்துப் பாண்டிய நாட்டுச் சதிகாரர்களுக்குக் கொடுத்தாள். அந்தப் பாதகி நந்தினியை இன்றிரவு கழிவதற்குள் என் கையினாலேயே கொன்றால் ஒழிய என் நெஞ்சில் கொழுந்துவிடும் நெருப்பு அணையாது.''

இவ்வாறு பழுவேட்டரையர் கூறி வந்தபோது அவர் சற்றும் எதிர்பாராத ஒரு காரியத்தைக் குந்தவை செய்தாள். திடீரென்று அவர் காலடியில் விழுந்து வணங்கினாள். பழுவேட்டரையர் இன்னது செய்வதென்று தெரியாமல்

திகைத்து நின்றபோது, இளையபிராட்டி எழுந்து நின்று, "ஐயா, எனக்கு ஒரு வரம் கொடுத்து அருள வேண்டும்!" என்றாள்.

"இளவரசி! என்னைச் சோதிக்கிறாய் போலத் தோன்றுகிறது. வேண்டாம். என்னுடைய பாவச் செயல்கள் எவ்வளவு பயங்கரமானவை என்பதை நான் நன்கு உணர்ந்து கொண்டேன். அவற்றுக்கு என்ன பிராயச்சித்தம் செய்து கொள்வது என்றுதான் யோசித்துக் கொண்டிருக்கிறேன். அதற்கு முன்னால் இன்றையக் கண்டத்திலிருந்து சோழ குலத்தைச் சேர்ந்த மூன்று பேரையும் தப்புவித்தாக வேண்டும். உன் தந்தைக்கும் சகோதரர்களுக்கும் இன்று தீங்கு ஒன்றும் நேரிடாமலிருக்க வேண்டும். அதற்கு எனக்கு உதவி செய். இன்று ஒரு நாள் போகட்டும். நாளைக்கு நானே உன்னிடம் வந்து எனக்குத் தண்டனை என்ன? பிராயச்சித்தம் என்ன என்று கேட்பேன்!" என்றார்.

"ஐயா! தங்களுக்குத் தண்டனை கொடுக்கவோ, பிராயச்சித்தம் சொல்லவோ, நான் முற்பட மாட்டேன். தாங்கள் என் பாட்டனாரின் ஸ்தானத்தில் உள்ளவர். என் தந்தையின் போற்றுதலுக்கு உரியவர். உண்மையாகவே தங்களிடம் ஒரு வரம் கேட்கிறேன்..."

"அப்படியானால், உடனே கேள் அம்மா! வெறும் பேச்சுப் பேசுவதற்கு இப்பொழுது நேரமில்லை."

"கொடுப்பதாக வாக்களியுங்கள்!"

"உனக்கும் உன் குடும்பத்துக்கும் நான் செய்து விட்ட துரோகத்துக்கு நான் கொடுக்கக் கூடியது எதுவும் ஈடாகாது. நீ எது கேட்டாலும் கொடுக்கிறேன். சீக்கிரம் கேள்!"

"இளைய ராணி நந்தினி தேவியைத் தாங்கள் ஒன்றும் செய்வதில்லை என்று வாக்கு அளிக்க வேண்டும். அதுதான் நான் கோரும் வரம்!"

"அம்மா! இது என்ன விளையாட்டா? விளையாட இதுதானா சமயம்? என் முதுமைப் பிராயத்தில் நான் புத்தி கெட்டுப்போனது உண்மைதான். அதற்காக என்னை முழுப் பைத்தியக்காரனாக்கிவிடப் பார்க்கிறாயா? அந்தச் சதிகாரிக்கு நான் தக்க தண்டனை கொடுக்கா விட்டால், மற்றச் சதிகாரர்களை எப்படித் தண்டிக்க முடியும்? என் கையினால் அவளைக் கொன்றுவிட்டுத்தான் மறு காரியம் பார்ப்பேன். என் மனத்தில் உள்ளதை யெல்லாம் சொல்லிவிட்டு, இந்தக் கிழவனை அவளால் கடைசி வரையில் ஏமாற்ற முடியவில்லை யென்பதை எடுத்துக் காட்டிவிட்டு, அவளை என் வாளினாலேயே



அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் லேடஸ்ட் ஃபாஷன் "நேரு சட்டை". மிகப் பிரபலமாகி ஏராளமாய் வியாபாரம் ஆகிறது.

சண்டே டைம்ஸ் - 'பாலி'

வெட்டிக் கொல்லுவேன். அதற்குக் குறைந்த தண்டனை எதுவும் அவளுக்குக் கொடுத்தால் நியாயம் செய்தவனாக மாட்டேன். அதற்குப் பிறகு, எனக்கு என்ன நியாயமான தண்டனை என்பதையும் யோசிப்பேன். போ அம்மா! போ! உன் தந்தையையும் தம்பியையும் இன்று வரப்போகும் கண்டத்திலிருந்து காப்பாற்றுவதற்கு வேண்டிய பிரயத்தனம் செய்!...."

"செய்கிறேன், ஐயா! ஆனால் என் சகோதரியைப் பாதுகாக்கவும் முயற்சி செய்ய வேண்டாமா? இளைய ராணி நந்தினி என் சகோதரி. அவருக்குத் தாங்கள் என்ன தீங்கு செய்தாலும் அதுவும் சோழ குலத்துக்குச் செய்த துரோகமாகும்!"

பழுவேட்டரையர் எல்லை கடந்த திகைப்பில் ஆழ்ந்தார். "நான் இன்னமும் கனவு கண்டுகொண்டிருக்கிறேனா?" என்று அவருடைய உதடுகள் முணுமுணுத்தன.

"இல்லை, இல்லை! தாங்கள் கனவு காணவில்லை. தாங்கள் காண்பதும் கேட்பதும் உண்மைதான். சிறிது யோசித்துப் பாருங்கள். பழைய சம்பவங்களை நினைத்துப் பாருங்கள். என் சகோதரன் அருள்மொழி வர்மனைக் காவேரியில் முழுகிப் போகாமல் ஒரு மாதரசி காப்பாற்றியது நினைவு இருக்கிறதா? அவள்தான் இளைய ராணி நந்தினியின் தாயார். இளைய ராணியைத் தாங்கள் மணம் புரிந்து அரண்மனைக்கு அழைத்துக் கொண்டு வந்த நாளில் என் தந்தை நினைவிழந்து விழுந்தது நினைவிருக்கிறதா? இளைய ராணியின் அன்னையைக் காண்பதாக நினைத்தே சக்கரவர்த்தி மூர்ச்சை அடைந்தார். அவள் இறந்து

விட்டதாக வெகு காலம் எண்ணிக் கொண்டிருந்தார். ஆகையால் திடீரென்று இளையராணியைப் பார்த்ததும் ஞாபகத்தை இழந்தார்....''

பழுவேட்டரையருக்கு வேறுசில சம்பவங்களும் நினைவுக்கு வந்தன. நள்ளிரவில் நந்தினியை அவர் சுந்தர சோழ சக்கரவர்த்தியின் முன்னால் கொண்டு போய் நிறுத்தியதும், அவளைக் கண்டு சக்கரவர்த்தி அலறியதும், அதற்கு நந்தினி கற்பித்துக் கூறிய காரணங்களும் அவருக்கு அப்பொழுது நினைவு வந்தன.

''தாயே! நீ பேசுவது விளையாட்டு அல்ல என்பதை உணர்கிறேன். விதியின் விளையாட்டுத்தான் மிக விசித்திரமாயிருக்கிறது. இளையராணி உன் தமக்கை என்றால், ஆதித்த கரிகாலனுக்கும் அவள் சகோதரியாகிறாள். இந்த உறவு உனக்கு மட்டுந்தான் தெரியுமா? இன்னும் யார் யாருக்கெல்லாம் தெரியும்? சக்கரவர்த்திக்குத் தெரியுமா?''

''சக்கரவர்த்தி இரண்டு நாளைக்கு முன்பு வரையில் என்னுடைய பெரியன்னை இறந்து விட்டதாகவே எண்ணிக் கொண்டிருந்தார். முந்தாநாள் அந்த மூதாட்டி நேரில் வந்தபோதுகூடப் பேய் என்று எண்ணி விளக்கை விட்டு எறிந்தார். பிறகுதான் நம்பினார்...''

'' அதைப் பற்றிக் கேட்கவில்லை, அம்மா! இளைய ராணி தன் சகோதரி என்பது கரிகாலனுக்குத் தெரியுமா?''

''அவனுக்கு இதற்குள் தெரிந்திருக்க வேண்டும். எனக்கு அவன் வாணர் குலத்து வீரர் ஒருவரிடம் ஓலை கொடுத்து அனுப்பி யிருந்தான். அவரிடம் நான் சொல்லி யனுப்பினேன்...''

''ஆகா! வந்தியத் தேவன் வல்லவரையனைச் சொல்கிறாயாக்கும்!''

''ஆம், ஐயா!''

''அவன் கரிகாலனிடம் சொல்லியிருப்பான் என்று தோன்றவில்லை. சொல்லியிருந்தாலும் கரிகாலன் நம்பியிருக்க மாட்டான். எனக்கே நம்பிக்கை உண்டாகவில்லையே? அவன் எப்படி நம்புவான்? இளையராணிக்கு இச் செய்தி தெரிந்திருக்க முடியாது. தெரிந்திருந்தாலும் பயனில்லை. சதிகாரர்கள் வேறு விதத்தில் தங்கள் நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ளப் பார்ப்பார்கள். இன்றிரவு அதற்குக் கட்டாயம் முயற்சி செய்வார்கள். அம்மா! நீ தெரிவித்த செய்தி என்னுடைய பொறுப்பை இன்னும் பயங்கரமாக்குகிறது. இளையராணி நந்தினி சகோதர ஹத்தி செய்யாமல் பாதுகாக்கும் கடமை எனக்கு ஏற்படுகிறது. நான் உடனே கடம்பூர் போகிறேன். நீங்கள் வந்த ரதத்தை எடுத்துக் கொண்டு போகிறேன். சக்கரவர்த்திக்கும் பொன்னியின் செல்வனுக்கும் ஒன்றும் நேராமல் பாதுகாப்பது உன்னுடைய பொறுப்பு!'' என்றார்.

''ஐயா! தாங்கள் கவலைப்பட வேண்டாம்! நான் இதோ தஞ்சைக்குப் புறப்படுகிறேன். பழையாறையிலிருந்து வாகனம் தருவித்துக் கொண்டு போகிறேன். பொன்னியின் செல்வனைப் பற்றிச் சிறிதும் கவலைப்படத் தேவையில்லை. அவன் பிறந்த நாளும் வேளையும் அவனைப் பாதுகாக்கும்!'' என்றாள்.

''பெண்ணே! ஜோதிடத்தை நம்பி அஜாக்கிரதையாக இருந்து விடாதே! ஜோதிடர்கள் மனத்திற்குள் உண்மை தெரிந்தாலும் வெளிப்படையாகச் சொல்ல மாட்டார்கள்! இரண்டு பொருள் தொனிக்கும்படி ஏதேனும் கூறி வைப்பார்கள். காரியம் நடந்த பிறகு, 'முன்னமே சொல்லவில்லையா?' என்பார்கள். ஜோதிடத்தை நம்பினாலும் ஜோதிடக்காரர்களை நம்ப வேண்டாம்!'' என்று போகிற போக்கில் ஒரு சொல்லம்பைப் போட்டு விட்டுப் பழுவேட்டரையர் வெளியேறினார்.

அவர் அப்பால் சென்று சில வினாடி நேரத்துக்கெல்லாம் ஆழ்வார்க்கடியான் உள்ளே பிரவேசித்தான்.

''ஆம், ஆம்! தனாதிகாரி கூறியதை நான் ஆமோதிக்கிறேன். ஜோதிடத்தை நம்பினாலும் ஜோதிடக்காரர்களை நம்பவே கூடாது!'' என்றான். (தொடரும்)



கார்ட்டூனிஸ்ட் ஆர். கே. லட்சுமணுக்கு பத்ம பூஷண் விருது கிடைத்தது. அவரது சகோதரர் நாவலாசிரியர் ஆர். கே. நாராயண் ஒரு வாழ்த்துச் செய்தி அனுப்பி யிருந்தார். வாழ்த்துக்கு லட்சுமண் எழுதிய பதில்:

'' உங்கள் கடிதத்துக்கு நன்றி. லட்சுமணுக்குப் பரிசு இல்லை. நமது அரசியல்வாதிகளும், மந்திரிகளும் செய்துள்ள தவறுகள்தாம் எனக்கு இந்தப் பரிசை வாங்கிக் கொடுத்திருக்கின்றன.''

டைம்ஸ் ஆஃப் இந்தியா - முத்து

# மாதம் நான்கு, ஐந்து, ஆறு
# மெதுவாத் தவழ்ந்து உதைக்கும் பாரு



மூன்றாவது மாதத்திலிருந்து, உங்கள் குழந்தையின்
போஷாக்குக்குப் பால் மட்டுமே போதாது. உங்கள்
குழந்தைக்கு பாரெக்ஸ் தேவை—அதாவது, திட
உணவு ஊட்ட முதற் படி. பாரெக்ஸிலுள்ள புரதச் சத்து உங்கள்
குழந்தையின் மென்மையான ஜீரணத்திற்கு மிகவும் உகந்தது.

பாரெக்ஸ் புத்தகத்தை இலவசமாகப் பெற, 25 பைசா தபால் தலையை
இணைத்து, டிபார்ட்மெண்ட் K-1, த.பெ. 16558, பம்பாய் 18 டபிள்யூ.பி.
என்னும் முகவரிக்கு எழுதுக. (எந்த மொழியில்
வேண்டுமென்று தெரிவிக்கவும்).




சீரான உடல் வளர்ச்சிக்குக் குழந்தையின் முதலாவது திட உணவு.

**பாரெக்ஸ்**® -க்ளாக்ஸோ தயாரிப்பு

CMGF-13-203 TAM

# ராமாயணம்

## ராஜாஜி

"சீதையை நீர் கொண்டு வந்தது முதற்கொண்டு லங்கா நகரத்தில் நானும் மற்றவர்களும் அபசகுனங்களையே காண்கிறோம். ஹோமாக்கினி வளர்க்கும் போது எரிய வேண்டிய முறையில் எரியவில்லை. சரியான மந்திரங்களுடன் அவி சொரிந்தாலும் அக்கினி மூள்வதில்லை. பூஜை ஸ்தலங்களில் பாம்புகள் காணப்படுகின்றன. நைவேத்தியச் சாமான்களில் எறும்பு மொய்க்கிறது. பசுக்கள் பால் சரியாகக் கறப்பதில்லை. யானைகள், குதிரைகள், ஒட்டகங்கள், கோவேறு கழுதைகள் இவை ஆரோக்கியமிழந்து சரியாக உண்ணாமலும் விபரீதமாகவும் நடந்து கொள்ளுகின்றன. வைத்தியம் பலிக்கவில்லை. காக்கைகள் நகரத்து விமானங்கள் மேல் கூட்டம் கூட்டமாக உட்கார்ந்து அவலக்ஷணமாகக் கத்துகின்றன. கழுகுகளும் வட்டமிட்டுக் கொண்டு சகுனக் குறிகள் அறிந்தவர்களுக்குக் கவலை உண்டாக்கி வருகின்றன. நரிகள் ஊருக்குள் பிரவேசித்து அகாலங்களில் ஊளையிடுகின்றன.

காட்டு மிருகங்கள் நகரத்துக்குள் நடமாடுகின்றன. இவையெல்லாம் நமக்கு மிகப் பெரும் அபாயமும் நஷ்டமும் வரவிருப்பதைக் குறிக்கின்றன. இதை நாம் அலட்சியம் செய்யக் கூடாது. சீதையைத் திருப்பி அனுப்பி விடுவீர். அவளைக் கொண்டு வந்தது முதல்





இந்தக் கெட்ட குறிகள் காணப்படு கின்றன. மற்றவர்களையும் விசாரித்துப் பார்ப்பீர். நான் சொல்லும் அவலக்ஷணக் குறிகள் நிகழ்ந்தது உண்மையா இல்லையா என்று. நான் சொல்லுவதை ஏற்றுக் கொள்ள முடியாது என்று தீர்மானித்தாலும் என் பேரில் கோபித்துக் கொள்ள வேண்டாம். வீணாக விரோதத்தைச் சம்பாதிப்பதில் பயனில்லை. சீதையைத் திருப்பித் தந்துவிட்டுச் சுகமாக இருப்போம்'' என்று மிகப் பணிவுடன் சொன்னான் விபீஷணன்.

''ஒரு நாளும் முடியாது! சீதையைத் திருப்பித் தரும் பேச்சுப் பேச வேண்டாம். இந்த எதிரியை நான் பெரிதாகப் பொருட்படுத்தவில்லை. நமக்கு ஒரு பயத்தையும் நான் காணவில்லை. நீ போகலாம்!'' என்றான் ராவணன்.

இவ்வாறு பிடிவாதமாக இருந்த போதிலும் சீதையைப் பற்றித் தன்னுடைய ஆசை நிறைவேறவில்லையே என்றும், நெருங்கிய உறவினர்களும் தன் காரியங்களைக் குற்றமாகக் கருதுகிறார்களே என்றும் கண்ட ராவணன் சாந்தியை இழந்தான். ஆனால் அதைக் காட்டிக்கொள்ளாமல் மறுபடியும் சபை கூட்டினான். காமமும் கோபமும் புத்தியை நேர் வழியில் செலுத்தாமற் போனாலும் தான் செய்ததில் தவறு இருப்பதை உணர்ந்து மற்றவர்களோடு ஆலோசனை செய்வதில் ஓர் ஆறுதல் கண்டான்.

தங்க மயமான தேரில் ஏறித் தெருவில் சென்றான். மிக உயர்ந்த ஜாதிக் குதிரைகள் பூட்டிய தேர். கத்தியும் கேடயமும் தரித்த வீரர்கள் கண்ணைக் கவரும் உடுப்புகள் அணிந்து முன்னும் பின்னும் இரு பக்கங்களிலும் சென்றார்கள். சிலர் தேர், யானை, குதிரை முதலிய வாகனங்களில் ஏறிப் பயங்கரமான தோமரம், கோடரி, சூலம்

முதலிய ஆயுதங்களைத் தரித்து ராவணனுடைய தேருக்குப் பின்னால் சென்றார்கள். சங்கம், பேரி முதலிய போர் வாத்தியங்கள் முழங்கின. ராஜ வீதியில் லங்கேசன் பரிவாரத்துடன் இப்படி வெகு கம்பீரமாகச் சென்றபோது வழியில் நின்றவர்கள் எல்லாரும் கை கூப்பித் தலை வணங்கி நமஸ்கரித்து வெற்றி கோஷங்கள் செய்தார்கள். திக்குகள் நடுங்கும்படி சங்கங்களும் பேரிகைகளும் கோஷிக்க ராக்ஷசேந்திரன் சபைக்குள் பிரவேசித்தான்.

தங்கத்தாலும் வெள்ளியாலும் செய்யப்பட்ட தூண்களும், சிறந்த விரிப்புக்களும், மயனுடைய சிற்பமும், சாமர்த்தியமும் விளங்கிய அந்த மண்டபத்தில் வைடூரிய சிம்மாசனத்தின் மேல் ராவணன் அமர்ந்தான். நூற்றுக்கணக்கான பிசாசங்கள் சபைக்குக் காவலாட்களாக நின்றன. ராக்ஷசேந்திரன் உத்தரவின்படி ராக்ஷச வீரர்கள் ஆயிரக்கணக்காக வந்து குழுமியிருந்தார்கள். அவர்கள் வந்த வாகனங்கள் பெருங் கணக்காக நின்றன. அவரவர்கள் பதவிக்குத் தக்கவாறு ஆசனங்களில் உட்கார்ந்தார்கள். புரோகிதர்கள், வேதம் ஓதுபவர்கள் நூற்றுக் கணக்காக வந்து வெகுமானிக்கப்பட்டு அமர்ந்தார்கள்.

விபீஷணன், சுகன், பிரஹஸ்தன் முதலியவர்கள் ராவணேசுவரனை வணங்கி விட்டுத் தங்களுடைய ஆசனங்களில் அமர்ந்தார்கள். ஆலோசனைச் சபையில் நிர்வாகிகள், உத்தியோகஸ்தர்கள் எல்லோரும் வந்து கூடியிருந்தார்கள். அவர்கள் அனைவரும் மகா நிபுணர்கள், சூரர்கள், ராவண பக்தர்கள்.

பரிமளப் பொருள்களின் வாசனை மண்டபத்தில் வீசிற்று. ஒருவருடன் ஒருவர் பேசாமல் சப்தம் அடங்கிச் சபை கம்பீரமாக, அறிவாளிகளும், மகாபல சாலிகளும், உக்ர வீரர்களும் நிறைந்து தேவேந்திரனுடைய சபைக்கு நிகராக விளங்கிற்று.

* * *

தன் ராஜ்யத்தின் க்ஷேமத்தைக் கோரினவனும் இயற்கையாகச் சிறந்த அறிவாளியுமான ராவணன் காமத்தின் வேகத்தால் மதியை இழந்தான். பெருங் கவலையிலிருந்தானாகிலும் காமத்தாலும் அகங்காரத்தாலும் சரியான யோசனை செய்ய முடியாத நிலையிலிருந்தான். சபையில் கூடிய தன் பந்துக்களும் தன் நன்மையை விரும்புகிறவர்களுமான ராக்ஷசக் கூட்டத்தைப் பார்த்துச் சொன்னான்:

"எல்லா விதத்திலும் நீங்கள் திறமைசாலிகள். எந்தச் சிக்கலான விஷயத்திலும் சரியான யோசனை சொல்லும் சக்தி வாய்ந்தவர்கள். இது வரை நீங்கள் ஆலோசித்துச் சொன்ன எந்த விஷயமும் பயன் பெறாமல் போனதே இல்லை. ஆனபடியால் உங்களை இப்போது கேட்கிறேன். நான் செய்த காரியம் உங்களுக்குத் தெரிந்ததே. தண்டகாரண்யத்தில் வசித்துக் கொண்டிருந்த ஜானகியைக் கொண்டு வந்து விட்டேன். அவள் பேரில் எனக்கு உண்டாகியிருக்கும் ஆசையை நான் அடக்க முடியவில்லை. அவளை நான் திருப்பி அனுப்ப முடியவே முடியாது. இப்போதும் அவள் பேரில் எனக்குள்ள விருப்பத்தை நீக்கிக் கொள்ள என்னால் முடியவில்லை. இதை நான் உங்கள் முன்னிலையில் ஒப்புக் கொள்கிறேன்.

"என் விருப்பத்துக்கு அவள் சம்மதிக்கவில்லை. ராமன் வருவான். தன்னை மீட்பான் என்று நம்பி வருகிறாள். 'அவன் வர முடியாது. உன்னை அவன் அடைய முடியாது. என்னை ஒப்புக் கொண்டு சுகமாக இரு' என்று எவ்வளவோ நான் சொன்னேன். ஒரு வருஷ காலம் கெடு கேட்டாள். நானும் அதற்கு ஒப்புக் கொண்டேன். இப்போது உங்கள் யோசனையைக் கேட்கிறேன். என் இஷ்டம் பூர்த்தியாகவில்லை. சீதையைத் திருப்பி அனுப்பி விட்டு ராமனிடம் மன்னிப்புக் கேட்க என் மனம் ஒரு நாளும் இசையாது. இது வரையில் நானும் வீரர்களாகிய நீங்களும் எந்த யுத்தத்திலும் தோல்வியைக் கண்டதில்லை. இந்தச் சமுத்திரத்தைத் தாண்டி ஒரு வானரன் எப்படியோ வந்து இந்த நகரத்தைச் சேதம் செய்து விட்டுத் திரும்பினான். ராமனும் வானர சேனையும் கடலைத் தாண்டி வருவது கஷ்டம்; வந்தாலும் எனக்குப் பயமில்லை. நன்றாக யோசித்துச் சொல்லுங்கள். கடல் எதிர்க் கரையில் ராம லக்ஷ்மணர்களும் சுக்ரீவனும் அவனுடைய வானரர்களும் வந்திருக்கிறார்கள். ராம லக்ஷ்மணர்களைக் கொல்லும் உபாயம் சொல்லுங்கள்.

"நான் முந்தியே சபை கூட்டியிருப்பேன். கும்பகர்ணன் விழித்துக் கொள்ள வில்லை. அதற்காகக் காத்திருந்தேன்"—என்றான்.

இவ்வாறு காமத்தால் புத்தியிழந்து, தன் கவலையை மறைத்துக் கொஞ்சம் பொய்யும் கலந்து பேசினான். சீதை ஒரு வருஷ காலம் கெடு கேட்கவில்லை. தன் கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்ள அவ்வாறு மாற்றிச்சொன்னான்.

(தொடரும்)

# உணர்ச்சிக்கு வேலி உண்டோ!

''உலகக் கால்பந்தாட்ட வீரர்களான செக்கோஸ்லோவேகிய வீரர்கள் ஆஸ்திரேலிய, தூரக்கிழக்கு நாடுகளில் பிரயாணத்தை முடித்து விட்டு வந்து சென்னையில் மட்டும் ஆடிவிட்டுப் போயிருக்கிறாங்க!''

''ஓஹோ! சென்னையின் மகிமை ஒரு படி உயர்ந்து விட்டதாக்கும்! செக்கோஸ்லோவேகிய குழுவில் அப்படிப் பிரமாதமான ஆட்டக்காரர்கள் இருக்கிறார்களா?''

''இதோ சொல்கிறேன்: டோக்கியோ ஒலிம்பிக்கில் ஆடிய அன்டன் ஸ்வாஜ்லென், மெக்ஸிகோ ஒலிம்பிக்கில் கலந்துகொண்ட ஜன் ஜிவார்னிக், ஜராஸ்லோவ் போராஸ், உலகக் கோப்பை கால் பந்தாட்டப் போட்டியில் கலந்தாடிய ஜோசப் போம்பா ஆகிய படா படா ஆசாமிகள் 'செக்' கால் பந்தாட்டக் கோஷ்டியில் இருந்தார்கள். இவர்கள் நேரு ஸ்டேடியத்தில் அபாரமாக ஆடினர்.''

''அப்போ அந்த உலகக் கால் பந்தாட்டக் கோஷ்டிக்கு முன்னால் சென்னைக் கோஷ்டியின் ஆட்டம் எடுபடவில்லையா?''

''முதல் பகுதி நேரத்தில் ஆஜானுபாகுவான 'செக்' ஆட்டக்காரர்களைச் 'செக்' பண்ண முடியவில்லை. அவர்கள் காலிலேயே பந்து பவனி வந்தது.... மூன்று கோல்கள் போட்டுத் தமிழகக் கோஷ்டியைத் திணற அடித்தார்கள்!''

''அப்போ 'ஒன் சைட்' ஆட்டம் என்று சொல்லித் தொலையுமே!''

''அப்படியும் சொல்லிவிட முடியாது! தமிழகக் கோஷ்டி அடித்த பந்தெல்லாம் துரதிர்ஷ்டவசமாக 'கோலா'கப் பரிணமிக்கவில்லை! காப்டன் அருமைநாயகம் அருமையாகத் தமிழகக் கோஷ்டியின் மானத்தைக் காப்பாற்ற ஒரு 'கோல்' போட்டார்!''

''போகட்டும்! தமிழகக் கோஷ்டிக்கும், செக்கோஸ்லோவேகிய கோஷ்டிக்கும் நடைபெற்ற ஆட்டத்தைக் காண நிறையப் பேர் வந்திருப்பார்களே!''

''கேட்பானேன்? பெரும் கூட்டம்தான். தமிழகத்தில் உள்ள பல செக்கோஸ்லோவேகிய மக்கள் தம்பதி சமேதராகக் குஞ்சு குளுவான்களோடு குழுமி யிருந்தார்கள். தங்கள் பாஷையில் 'செக்' ஆட்டக்காரர்களை உற்சாகப் படுத்தினார்கள். ஒவ்வொரு கோலின்போதும் துள்ளிக் குதித்தார்கள்!''

''ஆட்டத்தோடு இந்தக் காட்சியும் சுவாரசியமா யிருந்ததாக்கும்?''

''சில சமயங்களில் ஆட்டத்தை விடக்கூட இது சுவாரசியமாக இருந்தது!''

'இரும்புத் திரை' நாட்டிலிருந்து வந்தாலும் உணர்ச்சிக்கு 'வேலி'போட முடியாது என்பது செக்கோஸ்லோவேகிய — சென்னை கால் பந்தாட்டப் பந்தயத்தில் நிதரிசனமாகத் தெரிந்தது!

— குண்டுமணி



உலகக் கால்பந்தாட்ட 'செக்' குழுவினர் சென்னைக்கு மட்டும்
விசேஷமாக வந்து விளையாடிவிட்டுப் பறந்தார்கள்.
நேரு ஸ்டேடியம் நிரம்பி வழிந்தது.
ஆனால் இந்த உலகக்
கால்பந்தாட்டக்காரர்களோடு மோதிய
தமிழக ஆட்டக்காரர்கள்
ஏன் பயந்து பயந்து ஆடினார்கள்?
நல்ல ஆட்டக்காரர்கள் கூட
'ஒளி' மங்கியதன்
காரணம் என்னவோ?......

# காணிக்கை

## அத்தியாயம் 39

**ஆர்வி**

**யா**மினிக்கு ராத்திரியெல்லாம் அடிக்கடி விழிப்பு வந்தது. என்னவோ உள்ளூற ஒரு தவிப்பு. நினைத்து நினைத்து நெஞ்சு காய்ந்து போயிற்று. எத்தனை தடவைதான் தண்ணீர் குடிப்பது! ஒரு பக்கம் பிறந்த மண்ணைப் பார்க்கப் போகிறோம் என்று உற்சாகம்; மறு பக்கம் இந்தக் கணவனை விட்டு எப்படித் தனியாகப் பிரிந்திருப்பது என்று வேதனை. அவள் புரண்டு புரண்டு படுத்தாள்.

இவளுடைய தவிப்பைச் சிறிதும் அறியாத பாஸ்கரன் பக்கத்துக் கட்டிலில் அட்டகாசமாய்ப் படுத்து உறங்கிக் கொண்டிருந்ததைக் கண்டு அவளுக்குக் கோபமும் தாபமுமாக இருந்தது. 'ஆண்களே இப்படித்தான்; ஒரு கவலையும் இல்லாமல் தூங்குவதைப் பாரேன்' என்று நெஞ்சுக்குள்ளாகக் கடிந்து கொண்டாள்.

அத்தை ஊருக்கு அழைத்துக் கொண்டு போக வந்திருப்பதாகச் சொன்னபோது அவளுக்கு உண்மையில் ஆனந்தமாகத்தான் இருந்தது. கல்யாணமாவதற்கு முன்பு ஊரில் உள்ளவர்கள் எத்தனை தூரத்துக்கு வம்பளந்தார்கள்! அவர்கள் எல்லாரும் இப்போது தன்னுடைய சௌபாக்கியத்தைப் பார்த்தால் என்ன பேசிக்கொள்வார்கள் என்று பார்க்க வேண்டும்போல் இருந்தது. அப்பாவைப் பார்க்க வேண்டும் போல இருந்தது, அவளும் பாஸ்கரனும் சந்தித்துக் கொண்ட அம்பிகையின் சந்நிதியைப் பார்க்க வேண்டும் போல இருந்தது. துணிந்து தன்னைத் தங்கள் குடும்பத்தில் ஏற்றுக் கொள்ளக் காரணமாக இருந்த பாஸ்கரனுடைய அண்ணாவையும் மன்னியையும் பார்க்க வேண்டும் போல இருந்தது. அம்மாவின் வீணையை மடியில் எடுத்து வைத்துக் கொண்டு விரல்களால் மீட்ட வேண்டும் போல இருந்தது. ஆசை தீர வெட்கப் படாமல் முருகனையும் கண்ணனையும் குறும்புக்காரக் குழந்தைகளாக வைத்துப் பாடிப் பார்க்க வேண்டும் போல இருந்தது. புளியம் பூவையும் இளுவைக் கொழுந்தையும் தின்று பார்க்க வேண்டும் போல இருந்தது. ஜாதிப் பூவைப் பறித்துத் தொடுத்து, சுவாமி படத்துக்குச் சாத்திவிட்டு, பிறகு அதை எடுத்துத் தலையில் சூட்டிக் கொண்டு சிவந்த உதட்டையும் சிந்தூரப் பொட்டையும் கண்ணாடியின் முன்னால் நின்று சேர்த்துப் பார்க்க வேண்டும் போல இருந்தது. இதை யெல்லாம் ஓசைப் படாமல் எட்டிப் பார்த்துவிட்டுப் பின்னால் வந்து நின்று புன்னகை செய்கிற பாஸ்கரனைக் கற்பனை செய்து பார்க்க வேண்டும்போல இருந்தது. ஒருவரும் இல்லையென்கிற துணிச்சலோடு தன்னை அணைக்க வருகிற அவன் கையைப் பிடித்து இஷ்டத்துக்கு முறுக்கிவிட வேண்டும்போல இருந்தது. அது முடியாமல் மூச்சுத் திணற வேண்டும் போல இருந்தது. அவனிடம் தோல்வி பெற வேண்டும் போல இருந்தது. அந்தத் தோல்வியில் இன்பத்தின் சிகரத்தை எட்டிப் பிடிக்க வேண்டும் போல இருந்தது....

ஆனால் அதே சமயத்தில் இன்னொரு பக்கத்தில் இந்தப் பாஸ்கரனை விட்டுத் தன்னால் எப்படிப் பிரிந்து இருக்க முடியும் என்று மலைப்பாகவும் இருந்தது. பாஸ்கரன் பக்கத்தில் இருப்பதற்கு ஈடாக வேறு எதுவுமே இருக்க முடியாது என்பதும் நிச்சயமாக இருந்தது. ஒருவேளை அவன் வருவதற்குச் சற்றுத் தாமதப் பட்டுப் போனால் கூடப் பொறுக்க முடியாமல் போகிற நிலைமையில் பிறந்த வீட்டுக்குப் போவதாவது, சீராடுவதாவது!

யாமினி கோபமாக அவன் படுக்கைக்கு அருகில் போய் உட்கார்ந்து கொண்டு சுகமாகத் தூங்குகிறவன் தலையை எதிர்த்துக் கலைத்து விட்டாள். அவன் திருவனந்தபுரத்தில் வாங்கி அணிவித்திருந்த மோதிரத்தில் தலைமயிர் ஒன்று சிக்கிக் கொண்டு இழுத்த இழுப்பில் முனகிக் கொண்டே அவன் கண்ணை விழித்து அவளைப் பார்த்தான். தூக்கம் பிடிக்காமல் அருகில் வந்து உட்கார்ந்து வம்புக்கு வருகிற அவளுடைய மன நிலை அவனுக்கு உடனே புரிந்தது.

''ஏன், உனக்குத் தூக்கம் வரவில்லையா?''

''எப்படி வரும்?''



''அதான் அடுத்த வாரமே நான் வந்து உன்னே அழைச்சிண்டு வந்துடற தாகச் சொன்னேனே—''

''அதனுலே இப்பக் கவலே யில் லாமே தூங்கச் சொல்றேளா?''

''பின்னே முழிச்சுண்டே இருக்க முடியுமா?''

''என்னுலே இரண்டுமே முடியல்லே! ஒரு வாரம் பத்து நாள் போல என்னே விட்டு விட்டு உங்களாலே தனியா இருக்க முடியுமா?''

''முடியுமோ முடியாதோ இருந்து தானே தீரணும்!''

''ஒண்ணு செய்தால் என்ன? நீங் களும் என்னுடே வந்திடுங்களேன்! நாலு நாள் பேருக்கு இருந்துட்டு, சேர்ந்தாப்பலேயே திரும்பிடுவோம்!''

'' அது எப்படி முடி யும், யாமினி ? இந்த நாலு நாளிலே என்னெல் லாம் ஆயிருக்கு. இன் னும் எத்தனே வேலே யிருக்கு எனக்கு — உனக் குத் தெரியாதா ? இந்தச் சமயம் நீ ஊருக்குப் போறதே நல்லது. ராத் திரி — பகல் பார்க்காமே நான் தொழிற்சாலே நிர் மாணப் பணியிலேயே இருக்கவேண்டி யிருக்கும். புது யூனிட்டு களே நிர்மாணித்து அவற்றை, ஓட வைக்கணும். தொழில் மந்திரி வந்து தொடங்கி வைப்பதற்கு வேண்டிய ஏற்பாடெல்லாம் செய்யணும். எல் லாம் ஒழுங்கு செஞ்க, சரி பார்க்கணும். நான் எப்படி வர முடியும் ?''

''முடியாதுதான். ஆனுல் நான் இல் லேன்னுட்டு வீட்டுக்கே வராமல், வேளா வேளேக்குச் சாப்பிடாமல், பட் டினி கிடந்துண்டு, கண்ணே முழிச்சிண்டு உடம்பைக் கெடுத்துக்குவேள் போல் இருக்கே !'' என்று சொல்லும் போதே உணர்ச்சிவசப்பட்டு அப்படியே சாய்ந்து கொண்டாள் அவள்.

''அதெல்லாம் மாட்டேன்; கவலேப் படாதே !''

யாமினியைச் சமாதானப் படுத்துவதற்குள் அவனுக்குப் போதும் போதுமென்ருகி விட்



டது. இரண்டு மணி நேரம்கூடச் சரியாகத் தூங்கியிருக்க மாட்டாள். மறுபடியும் அவள் விழித்துக் கொண்டாள். அவனுக்கும் விழிப்பு வந்தது.

"எனக்கு என்னவோ அந்த அஜிதாவை நினைச்சாலே எரிச்சலாய் இருக்கு. அவள் எதுக்கு எனக்கு அடிக்கடி போன் செய்யணும்?"

"போன் செய்தாளா, என்ன? எனக்குத் தெரியாதே!"

"அவள் என்னைப் பார்க்க வந்தாளாம். அதே போல அவளைப் பார்க்க நான் போகணுமாம். எப்ப வரப் போறேன்னு இரண்டு மூணு தடவை கேட்டுட்டாள்!"

"இவ்வளவுதானே? அதுக்கு நீ என்ன சொன்னே?"

"அத்தை வந்திருக்கிறதனாலே எங்கேயும் அசைய முடியல்லே; ஊருக்குப் போயிட்டு வந்தப்புறம்தான் வரணும்னு சொன்னேன். அப்படிச் சொன்னதும் தப்பாப் போச்சு. எப்ப ஊருக்குப் போகப் போறேன்னு கேட்டிண்டிருக்கா!"

"அவளுக்கு வேறே வேலையில்லே. பேசறதுக்கும் ஆளில்லே. உங்கிட்டே சிநேகம் பண்ணிக்கணும்னு நினைக்கிறாள் போலிருக்கு!" என்றான் பாஸ்கரன்.

"அதான் எனக்குக் கவலையாய் இருக்கு!"

"இதுக்குப் போய் என்ன கவலே?"

"அதென்னமோ தெரியலே? ஏகக் கவலையா இருக்கு! அவள் யாருகிட்டே சிநேகம் பண்ணிக்கணும்னு நினைக்கிறாளோ நான் என்ன கண்டேன்?"

பாஸ்கரன் இலேசாகச் சிரித்துவிட்டு, "தன்கிட்டே நம்பிக்கை குறைஞ்சால்தான் கவலே உண்டாகும். தன்னம்பிக்கை இருக்கிற வரையிலே கவலேயுமில்லே. சோபனுகிட்டே இதை நான் பார்த்திருக்கேன்!" என்றான்.

"அவள்கூட விபத்து ஆன சமயத்திலே ரெண்டு மூணு மாசம் உண்டாகியிருந்தாள், இல்லேயா?"

"சரி சரி, அதையெல்லாம் இப்பப் பேசாதே! பொழுது விடியறதுக்குள்ளே கொஞ்ச நேரமாவது தூங்கு!"

யாமினிக்கு உடல் தெம்பு குறைந்திருப்பதுபோல மனத் தெம்பும் குறைந்திருப்பதை உணர்ந்து இரக்கப்பட்டான் பாஸ்கரன். அவளுக்கு என்ன பயமோ தெரியவில்லே. தூக்கத்தில் கூடத் தன் கையை விடாமல் பற்றிக் கொண்டிருப்பதைக் கண்டு அவனுக்குச் சிரிப்பு வந்தது. கையை விடுவித்துக் கொண்டால் அவள் தூக்கம் கலேந்து விடுமோ என்று பேசாதிருந்துவிட்டான்.

மறுநாள் முழுவதும் அவனுக்கு வேலே கடுமையாக இருந்தது. ஒரே சமயத்தில் மூன்று யூனிட்டுகளில் யந்திரங்களேப் பொருத்தும் வேலே அவனுடைய மேற்பார்வையில் நடந்து கொண்டிருந்தது. போன வாரமெல்லாம் சூனியமாய், வெறிச்சென்று இருந்த இடமெல்லாம் இப்போது களேயும் கம்பீரமுமாய், ஆட்களும் யந்திரங்களுமாக அடியோடு உருமாறி விளங்கியதைப் பார்த்து அவனே பூரித்துப் போனுன். இத்தனே யந்திரங்களேயும் கருவிகளேயும் இந்தக் குறுகிய கால அளவில் எப்படி வாங்கிச் சேர்த்தோம் என்று அவனுக்கே வியப்பாகவும் மலேப்பாகவும் இருந்தது. சாயங்காலம் சிறிது நேரம் ஓய்வு கிடைத்த போது அவன் சுற்றிலும் ஒரு நோட்டம் விட்டுக் கொண்டிருந்த போது பின்னுல் யாரோ நடந்து வருகிற ஓசை கேட்டுத் திரும்பிப் பார்த்தான்.

"ஹலோ!"

"ஹலோ அஜிதா. எங்கே இப்படி, இவ்வளவு தூரம்!" என்று ஆச்சரியத்தோடு கேட்டான் அவன்.

"என்ன பாஸ்கர், இன்னும் இங்கேயே இருக்கே? ஏழரை மணிக்கு இல்லே வண்டி? யாமினி ஊருக்குப் போவதாகச் சொன்னுளே, நீ வீட்டுக்குப் போகல்லியா?"

"இதோ, போகணும். புறப்பட்டுண்டே இருக்கேன். ஆனுல் நீ எங்கே இந்தப் பக்கம்....?"

"என்னமோ வந்தேன், இந்தப் பக்கம். என்னைப் பத்தி என்ன இப்ப? நீ போய் உன் மனேவியை வண்டியேற்றி அனுப்ப வேணுமா? ஒரு வேளே பிரயாணம் ரத்தாயிடுத்தோ?"

"அதெல்லாம் இல்லே. இத்தனே நாழி வேலேயிருந்தது: போகல்லே. இப்பத்தான் போகணும்; புறப்படறதுக்குத்தான் இருந்தேன்!"

"அப்ப நீ புறப்படு. வந்ததுதான் வந்தேன், என்ன புதிய வேலேகள் முடிந்திருக்குன்னு பார்த்துட்டுப் போறேன். அதையெல்லாம் பார்க்கலாமோ, இல்லேயோ?"

"ஓ — தாராளமாய்!"

ராஜேஷைக் கூப்பிட்டு அஜிதாவுக்கு எல்லாவற்றையும் விளக்கிக் காட்டச் சொல்லிவிட்டு அவன் வண்டியை எடுத்துக் கொண்டு புறப்பட்டான். உள்ளூற நேரம் கழித்து வந்ததற்கு யாமினி ஏதாவது சொல்லப் போகிருளே என்று யோசனேதான். ஆனுல் அவள் ஒன்றும்

சொல்லவில்லே. ரயிலுக்குப் போகிற ஏற்பாடுகளில் அவன் தீவிரமாக முனைந்திருந்தாள்.

வண்டியில் ஏறிப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்ட பிறகுதான் அவள், ''நான் ஊருக்குப் போறது உங்களுக்குப் பிடிக்கல்லே, இல்லையா? அதனுல் தானே சாப்பிடக்கூட வரல்லே?'' என்று கேட்டாள்.

'' அப்படியெல்லாம் ஒன்றுமில்லே'' என்ருன் பாஸ்கரன்.

'' எப்படி யிருந்தாலும் சரிதான். நான் இல்லேயேன்னு அநாவசியமாய்க் கண் முழிக்க வேண்டாம்; சாப்பிடாமல் உடம்பைக் கெடுத்துக்க வேண்டாம். இங்கே திரும்பி வருகிற வரையில் எனக்கு ஊரிலே இருப்பே கொள்ளாது'' என்ருள் யாமினி.

'' சரி சரி, நீ கவலேப்படாமல் போயிட்டு வா!'' என்ருன் பாஸ்கரன்.

''அஜிதாகூட என்னே வழியனுப்பி வைக்கிறதுக்கு ஸ்டேஷனுக்கு வர்றதாச் சொல்லியிருக்காள்!''

''இதோ, வந்து நிற்கிருளே!'' என்று அஜிதா நிற்பதைச் சுட்டிக் காண்பித்தான் பாஸ்கரன்.

அஜிதா வேறு எங்கேயோ பார்த்துக் கொண்டிருந்தாள் !

## அத்தியாயம் 40

அஜிதாவின் பார்வை யெல்லாம் வேறு எங்கேயோ இருந்தாலும் எண்ணமெல்லாம் திசை பிசகாமல்தான் லயித்திருந்தது.

'' உனக்கு நினேவிருக்கா பாஸ்கர், அந்த மொரீஷஸ் மாணவியை? அவள் இப்ப எங்கே இருக்காள்னு தெரியுமா?'' என்று கேட்டாள் அஜிதா.

''தெரியாதே, எங்கே இருக்காள் அவள் இப்போ?'' என்ருன் பாஸ்கரன்.

''அவளேக்கூட நீ ஒரு தடவை பிளேனில் வ்ரபோது பார்த்தாயாமே... எங்கிட்டே சொல்லியிருக்காள். அவள்தான் இப்ப எங்க மாமனுருக்கு அந்தரங்கக் காரியதரிசி. கிட்டத்தட்ட அவள் கைக்குள்ளேதான் இருக்கார் அந்த மனுஷன். வயசு அறுபதாகிறது. இன்னும் தம்மை வாலிபமாத்தான் நினேச்சிண்டிருக்கார். நான்தான் அவளே அங்கே கொண்டு போய் முதல்லே சேர்த்தேன். அவள்தான் இப்ப எனக்கு முதல் எதிரியாக இருக்கிறவள். மாமனுர், கணவர் எல்லாரும்கூட அவளுக்கு அடுத்தபடிதான். ரொம்ப ஸ்கீமிங்! தந்திரசாலி. நான் இருந்தால் ரொம்ப இடைஞ்சல்னு என்னே விரட்ட ஏற்பாடு பண்ணி விட்டவளே அவள் தான். ஆனுல் அவள் பேசறதைப் பார்த்தால் யாருமே ஏமாந்து போக வேண்டியதுதான். அத்தனே சாதுவா வெகுளி மாதிரி பேசுவாள்...அடிக்கடி அவளே நான் இங்கே பார்க்கிறேன். எதுக்கு வந்துட்டுப் போருள்னு தெரியல்லே. ஒய். டபிள்யூ. ஸி. ஏ.யிலே விசாரிக்கணும். அதுக்குச் சந்தர்ப்பமே கிடைக்க மாட்டேங்கிறது!'' என்ருள் அஜிதா.

பாஸ்கரன் அந்தச் சாக்கில் அவள் ஏன் பம்பாய் போகாமல், சென்னேயிலேயே தங்கி விட்டாள் என்று கேட்டுத் தெரிந்து கொள்ளலாமா என்று நினேத்தான். ஆனுல் பேச்சு இன்னும் அந்தக் கட்டத்துக்கு நெருங்கவில்லே என்று சும்மா இருந்துவிட்டான். பம்பாயிலிருந்து வந்திருக்கும் அஜிதா சென்னேக்கு வெறும் கையோடு வரவில்லே, நிறைய பணத்தோடுதான் வந்திருந்தாள் என்பதை மட்டும் ஜாடையாக அவளுடைய பேச்சின் போக்கிலிருந்து அவன் தெரிந்து கொண்டான். அது கணிசமான தொகையாகத்தான் இருக்கும் போலிருந்தது. ஆனுல் அவளுக்கும் அவள் கணவனுக்கும் எதனுல் சண்டை என்பதோ அவள் மறுபடியும் பம்பாய்க்கு எப்போது திரும்பிப் போக நினேக்கிருள் என்பதோ புதிராகவே இருந்தன. அதைப் பற்றியெல்லாம் பேச்சுக் கொடுப்பது உசிதமாக இருக்காது என்று தோன்றியதுடன் அஜிதா அதைப் பற்றிப் பேசவே விரும்பவில்லே என்றும் தெளிவாகக் காட்டிக் கொண்டாள். ஒரு விதத்தில் அவனுக்கும் அது தான் சௌகரியமாக இருந்தது.

இதையெல்லாம் அவள் ஸ்டேஷனிலிருந்து வெளியே வருகிற போதே குறிப்பாகக் கோடி காட்டிச் சொல்லி விட்டாள்.

''நீ ஸ்டேஷனுக்கு வரப் போறது எனக்குத் தெரியாது. நான் எதிர் பார்க்கவேயில்லே!'' என்று சொன்னுன் பாஸ்கரன், அவளிடம் தனியாக.

''சில விஷயங்கள் தெரியாமல் இருக்கிறதே நல்லது'' என்ருள் அஜிதா குறும்புச் சிரிப்புடன்.

''சில விஷயங்கள் என்றுல் இன்னும் எது எது ஏதாவது ஒண்ணு இரண்டைச் சொல்லேன், கேட்போம்'' என்ருன் பாஸ்கரன்.

''அதாவது சுருக்கமாய், கண்ணுக்கு முன்னுல் தெரியறது மட்டும் தெரிஞ்சால் போதும். தெரியாததையெல்

லாம் தெரிஞ்சிக்காமல் இருக்கிறதே நல்லது. அதையெல்லாம் தெரிஞ்சிக்கப் போனல் மனசு வேகப்படும்; இல் லாட்டா வேதனைப்படும். எல்லாமே வாழ்க்கையிலே இன்பகரமா இருந் துடறதில்லே, பாரு. அதுக்குச் சொல் றேன்!'' என்ருள் அஜிதா.

ஒருவிதத்தில் அவள் பேச்சு நியாய மாகப் பட்டது. எல்லாவற்றிலுமே இதைக் கடைப்பிடிக்கும்படி எச்சரிக்கை செய்வது போலவும் இருந்தது. அதா வது — அவள் சம்பந்தப்பட்ட வரையில், 'இருக்கிறதை இருக்கிறபடி ஏற்றுக் கொள்; அல்லது விட்டுவிடு. ஏன், எதற்கு என்றெல்லாம் ஒரு பேச்சும் வேண்டாம்!' என்று தீர்மானமாகச் சொல்வது போல் இருந்தது.

இவள் பழைய அஜிதா இல்லே; பம் பாய்க்குப் போய்விட்டு வந்த பிறகு பார்க்கிற புதிய அஜிதா என்று அவன் எண்ணிக் கொண்டான்.

''வீட்டுச் சாப்பாடு உனக்கு அலுத் துப் போகல்லே? போற வழியிலே ஹோட்டல் 'சிங்கா'ரிலே சேர்ந்தாப் பலே சாப்பிட்டுட்டுப் போனு என்ன? ஒரு மாறுதலா இருக்கட்டுமே! நீ என்ன நினைக்கிறே?'' என்று திடீரென்று ஸ்டேஷனை விட்டு வெளியில் வந்ததுமே கேட்டாள் அஜிதா.

''ஓ! அது நல்ல யோசனைதான்! எனக்குக்கூடப்பசிதான். போகலாமா?''

''எனக்குத் தெரியும். அதுக்குத் தான் கேட்டேன்.''

போனர்கள். பாஸ்கரனுக்கு நல்ல பசி. ஆனல் அஜிதாதான் சரியாகச் சாப்பிடவேயில்லே. பெரும்பாலும் அவ னையே கவனித்துக் கொண்டிருந்தாள்.

''யாமினி அதிர்ஷ்டக்காரி தான். எனக்கு அவளை ரொம்பப் பிடிச் சிருக்கு!''

''அதைத் தெரிஞ்சிண்டேன்.''

''ஆன அவளுக்குத்தான் என்னை அவ்வளவாப் பிடிக்கல்லேன்னு நினைக் கிறேன்!''

''இது என்ன, தூண்டில் போட்டுப் பாக்கறியா?''

''அதிலே என்ன தப்பு? உனக்குத் தெரிஞ்சிருக்குமேன்னு தான் சொல் றேன். என்னைப் பத்தி அவள் உன் கிட்டே பேசினதேயில்லேயா?''

பாஸ்கரன் சிரித்தான்.

''நீதானே சொன்னே, சில விஷ யங்கள் தெரியாமல் இருக்கிறதே நல்ல துன்னு. நீயே மறந்துட்டியா?''

''இல்லே. நான் உனக்கிச்சதை உறுதி படுத்திக்கத்தான் கேட்டேன். அது சரியாப் போச்சு இப்ப!''

இருவரும் வெளியில் வந்து அவரவர் வண்டியில் ஏறிக் கொண்டார்கள்.

''மணி ஒன்பதுகூட ஆகல்லியே. என்ன அவசரம்? அம்மாவுக்குப் போன் பண்ணிட்டாப் போச்சு!'' என்ருள் அஜிதா.

''அதுவும் நல்ல யோசனைதான். இப்படியே நான் தொழிற்சாலேக்குப் போயிடலாம்....'' என்று இறங்கி வந்தான் பாஸ்கரன்.

அவன் போனில் அம்மாவைக் கூப் பிட்டுப் பேசும் வரையில் அஜிதா பக்கத் திலேயே இருந்தாள். ராத்திரி மிகவும் நேரமாகி விட்டால் தொழிலகத்திலேயே தங்கி விடுவதாகவும் கவலைப்பட வேண் டாம் என்றும் சொன்னன்.

''ராத்திரியெல்லாம் எல்லாருமா கண்ணை முழிச்சிண்டு வேலை செய்யறது ரொம்ப இன்டரஸ்டிங்கா இருக்கும். இல் லேயா, பார்க்கறதுக்கு?''

''சந்தேகம் என்ன? கண்ணுக்குக் காட்சியாத்தான் இருக்கும்!''

''அப்படியானல் ஒண்ணு செய் தால் என்ன? நீ ஆட்சேபிக்கலேன்னு நானும் உன்கூட வந்து அதையெல்லாம் பார்க்கிறேனே!''

''நீயா? அதெப்படி முடியும்? அங்கே எத்தனை நேரம் உட்கார்ந்திருக்க முடியும்? நடுவிலே வீட்டுக்கு வரணும் போலிருந்தால்? நடு இரவில் தனியாத் திரும்பணுமே...?''

''என்னைப் பத்தி என்ன? அதை நான் பார்த்துக்கறேன். உனக்கு ஒரு ஆட்சேபணையும் இல்லேயே! இருந்தால் சொல்லிடு; நான் வரல்லே!'' என்ருள் அவள்.

''நீ வரதானல் எனக்கும் சந் தோஷம்தான். ஆனல்....''

அவன் வார்த்தையை முடிக்கும் வரையில் அவள் காத்திருக்கவில்லே. வீட்டுக்கு ஃபோன் செய்து சமையல்கார அம்மாளிடம் சொல்லி விட்டாள்.

''புறப்படு; போகலாம். எனக்கு இதி லெல்லாம் எத்தனை இன்டரஸ்டுன்னு உனக்குத் தெரியாது. என்னை ஒதுக்கி வைக்க நினைக்காதே. நான்கூட ஒத் தாசை பண்ண முடியும்—பணத்தாலே—லட்சக் கணக்கா — அதாவது என் உதவி உனக்குத் தேவையாயிருந்தால்!''

''எனக்கு ஆசை காட்டாதே! அது வீண் முயற்சி!''

''அது முடியாதுன்னு எனக்குத் தெரியும்.''

''சரி; கிளம்பு — போவோம்!''

இருவரும் தொழிற்சாலேக்குப் போய்ச் சேர்ந்தார்கள். (தொடரும்)

# எஸ்.வி.வி.



எஸ்.வி.கிருஷ்ணமூர்த்தி

நான் பங்களூருக்குச் சமீபத்தில் போயிருந்தேன். ''இவர்தான் எஸ்.வி.வியின் பிள்ளை'' என்று என்னை ஐம்பது வயதுக்கு மேற்பட்ட ஒரு நண்பருக்கு என் உறவினர் அறிமுகம் செய்து வைத்தார்.

அந்த வயது வந்தவர், ''ஹா, ஹா, ஹா'' என்று வாய்விட்டுச் சிரித்தார். என்னை அறிமுகம் செய்து வைத்ததில் அவ்வளவு நகைச்சுவை ததும்பும்படி என்ன இருந்தது என்று எனக்கும் புரியவில்லை; என் உறவினரும் திகைத்து நின்றார்.

''எஸ்.வி.வி.யின் பிள்ளையா?'' என்று கேட்டு, அவர் சிரித்ததின் காரணத்தை நாங்கள் கேட்காமலே விளக்கினார். ''கோவில் யானைக்குத் தென்கலை நாமம் போடுவதா, வடகலை நாமம் போடுவதா என்பதைப் பற்றிய வழக்கை வைத்து ஒரு ஹாஸ்யக் கட்டுரை எழுதியிருந்தார் உன் தகப்பனார்.... அவர் புத்தகங்கள் இருக்கிறதா, மறுபடியும் படிக்க வேண்டும்'' என்றார்.

''எஸ். வி. வி.'' என்ற ஆங்கில மூன்றெழுத்துக்கு மகாகனம் சீனிவாச சாஸ்திரியார், என் தகப்பனாரின் ஷஷ்டியப்த பூர்த்தி விழாவில் ஒரு விளக்கம் கூறினார். ''ஸதா வேடிக்கையும் விளையாட்டும்'' என்று. அந்தச் சம்பவம் என் மனத்தை நிரப்ப, உண்மை நகைச்சுவை, காலத்தை வென்றது என்ற தத்துவத்தை அறிந்து கொண்டேன். இங்கே ஓர் உண்மையையும் நான் சொல்லித் தான் ஆகவேண்டும். என் தகப்பனாருடனேயே இருந்ததில் அவர் வாத்ஸல்யத்தின் மேன்மையையோ, அவர் ஆங்கிலம், தமிழ் இரு பாஷைகளிலும் எழுதி வந்த திறனையோ முழு அளவில் அறிந்து கொள்ளாமல் ''ஏதோ அப்பாவுக்கு நல்ல பேர். பிரபலமான 'இந்து' பத்திரிகையிலும், 'ஆனந்த விகடனி'லும் வாராவாரம் அவர் கதை கட்டுரைகள் வந்ததால் நல்ல பெயர்'' என்ற அளவுடன்தான் அவர் திறமையை எடை போட்டிருந்தேன். இப்படி நினைப்பதற்கு மற்றொரு காரணமும் உண்டு. அது தகப்பனாரே ஏற்படுத்திய சூழ்நிலை. அவர் வாழ்நாளில் கடைப்பிடித்த லட்சியம், ''இருக்கும் இடம் தெரியாமல் வாழ வேண்டும்' என்பதுதான்.

குடும்பத்தினர் எல்லோரும் ஒன்றாக இரவில் சாப்பிட உட்காரும்போது பேச்சுவாக்கில் அவர் வாழ்க்கையில் சில ரஸமான சம்பவங்களைச் சொல்லுவார். அதிலிருந்து அவர் வாழ்க்கை லட்சியங்களைத் தெரிந்துகொண்டதை வைத்துத்தான் இதை எழுதுகிறேன். அவர் அறுபதாம் பிறந்த தினத்தை முன்னிட்டு அகில இந்தியாவிலிருந்தும் அநேக பிரமுகர்கள் அவர் எழுத்தின் திறனை மெச்சி எழுதிய கடிதங்களை, ''என்னைப் பற்றிய புகழ்ச்சிகள் ஒன்றுமே இருக்கக் கூடாது'' என்று அவற்றையெல்லாம் அழித்துவிட்டார். ஒருநாள் பேச்சுவாக்கில் அவர் சொன்னார்: மதுரையில் டிராமில் இவர் போய்க் கொண்டிருந்தாராம். இவர் பக்கத்தில் சனிக்கிழமை 'இந்து' பத்திரிகையைப் பிரித்து இவர் ஹாஸ்யக் கட்டுரையைப் படித்துக் கொண்டே, ''எவனோ, எஸ். வி. வி.ன்னு ஒருத்தன் வாராவாரம் எழுதறாண்டா! விளாசித் தள்ளறாண்டா!'' என்று பேசிக் கொண்டானாம். இதை எதற்குச் சொல்ல வருகிறேன் என்றால் அவர் வாழ்க்கையின் அடிப்படையில், ''எஸ். வி. வி. என்பவன் யார் என்று தெரியவேண்டிய அவசியமில்லை. அவன் அநேகம் பேரைச் சிரிக்க வைத்துக் கவலையைக் கொஞ்ச நேரமாவது மறக்கச் செய்கிறான். அதுதான் வேண்டும்'' என்று சொல்லுவார். ஷஷ்டியப்தபூர்த்தியின்போது 'ஆனந்த விகடனின்' மேல் அட்டையில் அவர் புகைப்படத்தைப் பிரசுரிக்க வேண்டும் என்று திரு கல்கியும், திரு மாலியும் அவருக்கு எவ்வளவு வேப்பிலை அடித்திருப்பார்கள் என்பது எங்களுக்குத் தெரியும். அந்த ஒரு புகைப்படத்தைத் தவிர அவரிடம் வேறு எந்தப் படமும் கிடையாது. அதைத்தான் யார் கேட்டாலும் கொடுக்கவேண்டியிருக்கிறது.

அவர் பெற்றிருந்த பெயருக்கும், வக்கீல் தொழிலில் நுணுக்கபுத்திக்கும் அவர் சென்னையில் தொழில் நடத்தியிருந்தால் எப்படி இருந்திருக்கும் என்று இப்பொழுது நான் நினைத்துக் கொள்வதுண்டு. ஆனால் அவர் திருவண்ணாமலையிலேயே வக்கீலாகக் காலத்தை 1934ம் வருடம் வரையிலும் கழித்தார். நகைச்சுவை எழுத்தாளன் என்ற பெயர் சம்பாதித்ததில் வழக்கறிஞர் திறமை வெகுவாகப் பிரகாசிக்காமலேயே இருந்துவிட்டது.



1890ம் வருடம் பிறந்தார்; 1950ல் மறைந்தார். அவர் தகப்பனார் ஸ்ரீ வேணுகோபாலாச்

சாரியார் மதுராந்தகத்தில் பத்து ரூபாய் சம்பளத்தில் இருந்தார். இவர் மதுராந்தகத்தில் பள்ளிக்கூடக் காலங்களைக் கழித்து, சென்னையில் பச்சையப்பன் கல்லூரியில் மேல் படிப்புப் படித்தார். சமீபத்தில் காலஞ்சென்ற நீதிபதி மேதை எஸ். வரதாச்சாரியாரும் இவரும் ஒன்றாகப் படித்தவர்கள். இரவில் விளக்கு ஏற்றிப் படிக்கக் கையில் பணமில்லாமல், ஒரே அறையில் இருந்தவர்கள், இரவு எட்டு மணி வரையிலும் அங்குமிங்கும் சுற்றிவிட்டு இரவு சாப்பாட்டை முடித்துக் கொண்டு படுக்கப் போய் விடுவார்களாம். காலையில் ஐந்து மணிக்கு எழுந்து படிப்பது வழக்கம். இம்மாதிரி நடந்த காலத்தில் என் தாத்தா, வேணு கோபாலாச்சாரிக்கு மதுராந்தகத்தில், ஆங்கிலேய கலெக்டரின் உத்தரவின் பேரில் வேலை போய் விட்டது. என் தகப்பனார் பி. ஏ. வகுப்பை முடிக்க ஐந்தாறு மாதங்கள் இருந்தன. தகப்பனார் வேலையும் போய்ச் சென்னையில் சாப்பிட யார் பணம் கொடுக்க முடியும்? என் தகப்பனார் ஒரு மனு எழுதி, ஆங்கிலேய கலெக்டருக்குத் தம் நிலைமையை விளக்கி, தம் படிப்பு முடியும் வரையிலாவது தகப்பனாரை வேலையில் வைத்துக் கொள்ளும்படி எழுதிக் கேட்டுக் கொண்டார். அது பலன் அளித்தது. இந்த நல்ல செய்தியைத் தகப்பனாருடன் பகிர்ந்து கொள்ள மதராஸிலிருந்து மதுராந்தகத்துக்குக் கிளம்பினார். கையிலிருந்த பணம் செங்கல்பட்டு போவதற்குத்தான் போதுமானதாய் இருந்தது. பிறரைக் கடன் கேட்க மனம் இசைந்து கொடுக்கவில்லை. செங்கல்பட்டு வரையிலும் போய், அங்கிருந்து மதுராந்தகம் வரையில் நடந்து மாலை நான்கு மணிக்குப் போய்ச் சேர்ந்தார். தகப்பனாரைப் பார்த்ததும் ஒரு பக்கம் சந்தோஷம். ஒரு பக்கம் கால் வலி.

''இப்ப ஏதுடா வண்டி ?'' என்று தகப்பனாரை அவர் தந்தை கேட்டார். இவர் தயங்கினார்.

''எப்படிடா இந்த நேரத்தில் வந்தாய்?'' என்று மேலும் கேட்டதின் பேரில் விவரத்தைச் சொன்னார்.

''எனக்குத் திருப்பி வேலை வாங்கித் தந்த பிள்ளையைச் செங்கல்பட்டிலிருந்து நடக்க வைத்து விட்டேனே... ஏரி காத்த ராமா...! என் பேரன் பேத்திகளுக்காவது இந்த மாதிரி கஷ்டத்தைக் கொடுக்காதேடாப்பா'' என்று பையனைக் கட்டிக் கொண்டு அழுதுவிட்டதாக ஒரு நாள் சாப்பாட்டு நேரத்தில் பழங் காலத்தைப் பற்றிப் பேச்சு வார்த்தையில் சொன்னார். என் தாத்தாவின் ஆசீர்வாதமோ, அல்லது அவர் பட்ட கஷ்டம் எங்களுக்கு வரக் கூடாது என்கிற எண்ணமோ நாங்கள் ஐந்து பிள்ளைகளும் (இப்பொழுது நால்வர் தான்) என் தகப்பனார் இருந்த வரையிலும் ஒருவித குறைவும் இல்லாமல் நடத்தி விட்டார்.

இந்த நிகழ்ச்சி என் மனத்தை விட்டு என்றும் அகன்றதில்லை. அவர் இறந்தபின் தகப்பனாருக்கு எப்படி அஞ்சலி செய்வது என்று எவ்வளவோ நாட்கள் நான் யோசனை செய்ததுண்டு. கடைசியில், ''உயில்'' என்ற தலைப்பின் கீழ் என் தந்தையின் வாழ்க்கைச் சம்பவத்தை அடிப்படையாக வைத்து ஒரு சிறுகதை எழுதி நான் சாந்தி அடைந்தேன். நான் எழுதிய கதைகளுக்குள் எனக்குத் திருப்தியளித்தது இந்த ஒரு கதைதான்.

இம்மாதிரி ஓரிரு சம்பவங்கள் தவிர அவரைப் பற்றிய வாழ்க்கை விவரங்கள் ஒன்றும் விட்டு வைக்காமல் போய் விட்டார். ஆனால் அவர் 1935க்கு மேல் மதராஸில் வந்து நிலையாக ஊன்றியபின், அவர் கண் கோளாறினால் எழுத முடியாமல், அவர் சொல்ல நான் எழுதி வந்ததில் அவர் எழுத்தின் திறனைக் கொஞ்சம் அறிந்து கொண்டேன். அன்று காலை பத்து மணிக்கு ஆனந்த விகடனுக்கு ''உல்லாஸ வேளை'' என்று தொடர்ந்து எழுதி வந்த தொடரில் அன்றைய வாரத்துக்கு விஷய தானம் செய்ய வேண்டும்.

''என்னடா, எழுதலாம், கிச்சா ?'' என்றார். நான் என்னத்தைச் சொல்லுவது? விழித்தேன். அப்பொழுதுதான் என் தகப்பனாரைப் பார்த்துப் பிள்ளைக்கு வேலைக்குச் சிபாரிசு வாங்கிப் போக ஒரு நண்பர் வந்திருந்தார். வெற்றிலையில் சுண்ணாம்பைத் தடவிக் கொண்டே, ''பையன் என்ன படித்திருக்கிறான்?'' என்று விவரம் கேட்டார்.

''எம். ஏ. முடித்துவிட்டு 'ரிஸர்ச்' செய்கிறான்!'' என்றார் நண்பர்.

''எந்த ஸப்ஜெக்டில்?'' என்றார்.

''ராமாயண காலத்தின் சமூக வாழ்க்கையைப் பற்றி'' என்றார் வந்தவர். கொஞ்ச நேரம் பேசிவிட்டுப் போய்விட்டார்.

''என்னடா, எழுதலாமா?'' என்று என்னைப் பார்த்துக் கேட்டார். அந்த வாரத்திய 'உல்லாஸ வேளை'க்கான விஷயம் கிடைத்து விட்டது! ராமாயணத்தைப் பற்றிய ஒரு மாணவனின் ஆராய்ச்சி. என்ன ஆராய்ச்சி என்றால் தசரதன் மரணத்துக்குப்பின் கௌசல்யை, சுமித்திரை, கைகேயி தலையில் மயிர் வைத்துக் கொண்டிருந்தார்களா, இல்லையா என்று ராமாயண நாளைய சமூகத்தைப் பற்றிய ஆராய்ச்சி. இதை மையமாய் வைத்துக் கொண்டு ராமாயணத்தில் எவ்வளவோ மேம்பட்ட தத்துவங்கள் இருக்க இந்த மாதிரி விஷயங்கள்தாமா ஆராய்ச்சிக்குக் கிடைத்தன என்று சொல்லி, அநேக ஆராய்ச்சி முயற்சிகள் இந்த ரீதியில்தான் இருக்கின்றன என்பதைக் கிண்டல் செய்து எழுதினார்.

முழுக்க, முழுக்க ஆங்கிலத்திலேயே எழுதி வந்தவர் எப்படித் தமிழுக்கு வந்தார் என்பது வேடிக்கை. 'இந்து'வில் பிரசுரமாகியிருந்த அவர் நகைச்சுவைக் கட்டுரையை, 'ஆனந்தவிகடன்' அனுமதி இல்லாமல் பிரசுரித்து விட்டது. இதைத் தெரியப்படுத்தியதின் பேரில் திரு வாசன், திரு கல்கி, திரு துமிலன் மூவரும் உடனே காரைப் போட்டுக் கொண்டு திருவண்ணாமலைக்கு வந்தார்கள். அனுமதியும் பெற்று, தமிழிலும் எழுத வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள். ஆனால் மதராஸுக்கு நிரந்தரமாக வந்தபின்தான் 'ஆனந்த விகடனுக்கு' வாரா வாரம் எழுத ஆரம்பித்தார். தமிழில் எழுத ஆரம்பித்தவுடன் ஆங்கிலத்தைத் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. ஆனால் சில கொள்கை

களை அவர் மாற்றிக் கொள்ளவே மாட்டார். திரு கல்கியும், என் தகப்பனாரும் அத்தியந்த நண்பர்கள். 'கல்கி' பத்திரிகை தொடங்கியவுடன் திரு கல்கி என் தகப்பனாரைப் பார்த்து, " 'கல்கி'க்கும் எழுத வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார். ஆங்கிலத்தில் எழுதினால் 'இந்து'வுக்கு; தமிழில் எழுதினால் 'ஆனந்த விகடனு'க்கு" என்று சொல்லி விட்டார். திரு கல்கியும் இதை மகிழ்ச்சியுடன் வரவேற்றார்.

அவர் எழுத்தைவிட ஆர்வம் காட்டி மெய்ம் மறந்தது கர்நாடக சங்கீதம். ஓய்வு கிடைத்த பொழுதெல்லாம் வீணையை மீட்டிக் கொண்டே எதையாவது வாசித்துக் கொண்டிருப்பார். யாரிடமும் சிட்சை கிடையாது. சுயமுயற்சியால் கற்றுக் கொண்டதுதான். ஸங்கீத சாஸ்திரமும் நன்றாய்த் தெரிந்து அதன் நுட்பங்களை என் தமையன் எஸ்.வி. பார்த்தசாரதிக்கு எடுத்துச் சொல்லி, சாதகம் செய்ய வேண்டிய வழியையும் காட்டிக் கொடுப்பார். எனக்கு நன்றாய் ஞாபகம் வருகிறது. திரு முசிரி சுப்ரமண்ய ஐயர், காலஞ்சென்ற பிடில் நாராயணசாமி ஐயர், என். வி. ராகவன் மூவரும் யதேச்சையாய் எங்கள் வீட்டுக்கு வந்திருந்தனர். மாலை சுமார் ஐந்து மணியிருக்கும். ஏதோ பேச்சுவாக்கில் பழங்காலத்து வித்துவான்களைப் பற்றி ஆரம்பித்தது. "வாசவாதி ஸகலதேவா" என்று "ஸ்ரீ சுப்ரமண்யாய நமஸ்தே" என்ற தீட்சிதரின் கீர்த்தனையின் அநுபல்லவியை அந்தக் காலத்தில் எப்படி நிரவல் செய்வார்கள் என்று ஆரம்பித்து முசிரி, நாராயணஸ்வாமி ஐயர் (பிடில் நாராயணஸ்வாமி என்ற பெயரே தவிர வெகு அழகாய்ப் பாடுவார்.) என். வி. ராகவன், என் தகப்பனார் ஆகியோர் மாற்றி, மாற்றிப் பாடத் தொடங்கி விட்டனர். இரவு மணி பத்துக்கு மேலாகி விட்டது. 'வாஸவாதி ஸகல தேவா' முடிந்தபாடில்லை. அவ்வளவு ஸங்கீதத்தில் பைத்தியம்.

இதையடுத்து ஸம்ஸ்கிருதத்தில். எனக்கு பி. ஏ. வகுப்பில் காளிதாசனின் "விக்ரமோர்வசீயம்" நாடகமாக இருந்தது. அப்பொழுது கல்லூரிகளில் ஸம்ஸ்கிருத நாடகமே தவிர, விடைகள் ஆங்கிலத்தில்தான் எழுத வேண்டும். காளிதாசனின் சுலோகங்கள் ஒன்றும் தெரியாது. எல்லாம் ஆங்கில அர்த்தங்கள் மூலம் தெரிந்து கொண்டதுதான். ஒரு நாள் என் தகப்பனார் என் அறைக்கு வந்தார். தமிழ் எழுத்தாளர்தானே, ஸம்ஸ்கிருதம் அவ்வளவு என்ன தெரியப் போகிறது என்று என் எண்ணம்.

"என்னடா புஸ்தகம்?" என்று கேட்டார்.

"விக்ரமோர்வசீயம்" என்றேன்.

"அதுதான் டிராமாவா? ஆவிர்பூதே சசினி தமஸா... எங்கே அந்த சுலோகத்தைச் சொல்லு" என்றார்.

"சுலோகம் தெரியாது அப்பா. அதெல்லாம் ஆங்கிலத்திலேயேதான் எழுதணும்" என்றேன்.

"அப்படின்னா ஸம்ஸ்க்ருத டிராமா படிக்கிறேன்னு அர்த்தமா?" என்று பக்கத்து நாற்காலியில் உட்கார்ந்து ஒவ்வொரு சுலோகமாய்ச் சொல்லி, அதன் அர்த்தம் என்ன, அதில் புதைந்து கிடக்கும் ரசனை என்ன என்று விளக்கம் கூறி, "இப்படின்னுடா காளிதாசன் படிக்கணும்.... 'வாட் எ லவ்லி டாம்ஸல் இஸ் ஊர்வசி? ஹௌ கேன் பீ ஹெர் கிரியேடர்' இதுவாடா காளிதாசன்?" என்று கேலி செய்து எனக்கு சம்ஸ்கிருதத்தில் கொஞ்சம் ரசனையும் ஊட்டி வைத்தார்.

இம்மாதிரி தகப்பனாருடன் வாழ்க்கையில் பல சம்பவங்கள். அநேகமாய்த் தாம் உண்டு, தம் ஸங்கீதம், எழுத்து உண்டு, குடும்பம் உண்டு என்று வெளி உலகுக்கு 'எஸ்.வி.வி' என்ற மூன்றெழுத்தைத் தவிர வேறெந்த விதத்திலும் பிராபல்யத்தைத் தேடாது இருந்ததில் அவர் வாழ்க்கைத் துணுக்குகள் குடும்பத்தைச் சார்ந்ததுடன் சரி; திரு கல்கி, திரு வாசன், திரு துமிலன் போன்ற அத்தியந்த நண்பர்களுடன் பகிர்ந்துகொண்டதுடன் சரி. அவற்றைப் பற்றி விவரித்துக் கூறுவது பொதுஜனங்களுக்கு ருசிக்காது. அவர் வாழ்நாளிலேயே விரும்பாததைச் செய்ய எனக்கும் அவ்வளவு விருப்பமில்லை. ஆனால் அவர் கதைகளையும், கட்டுரைகளையும் படித்தவர்கள் "நீங்கள் ஏன் தகப்பனாரைப் பற்றி எழுதக் கூடாது" என்று சொன்னதின் பேரிலும், 'கல்கி' நிர்வாகஸ்தர்கள் கேட்டதன் பேரிலும் பொதுவாக ரசிக்கக் கூடிய சில விஷயங்களைப் பற்றியே இங்கு எழுதியிருக்கிறேன். அவருடன் நட்புக் கொண்டவர்கள் இதைப் படித்து அவருடன் அளவளாவிய சம்பவங்களை நினைவூட்டிக் கொள்ளலாம்.

அவரது அறுபதாவது பிறந்த தினத்தின் போது, "இந்து" பத்திரிகை எழுதிய தலையங்கம் அவர் சிறப்பைச் சுருங்கச்சொல்லி விட்டது: "எஸ்.வி.விக்கு இன்று அறுபது வயது பூர்த்தியாகிறது. இதைவிட அவரது மறு பிரதியான திரு எஸ். வி. விஜயராகவாச்சாரியாருக்கு அறுபது வயது பூர்த்தியாகிறது என்று சொல்வதே பொருத்தம். ஏனெனில், எஸ்.வி.விக்குக் கால அளவுகள் ஏதும் கிடையாது. அவர் காலத்தை வென்றவர்."

## இரத்தப் பூக்கள்

சமீபத்தில் சாகித்திய அகாடெமியின் 5000 ரூபாய் பரிசு பெற்றுள்ளார் ஆசிரியர் ஜனாப் ஹயத்துல்லா அன்ஸாரி. இவர் எழுதியிருக்கும் ("லஹூ கே பூல்") இரத்தப் பூக்கள் என்ற உருது நவீனத்துக்குத்தான் பரிசு வழங்கப் பட்டது. இது சரித்திரமும் அரசியலும் புறப் படலமாகக் கொண்ட நவீனமாகும்.

1911ம் ஆண்டில் தொடங்கி 1947ம் ஆண்டு பாரதம் சுதந்திரம் பெற்றது வரையுள்ள காலத்தை வர்ணிப்பதாகும். இந்த நவீனத்தில் ஒரு கதாநாயகன் என்றில்லையாம். தேசம் முழுதுமே கதாநாயகனாக விளங்குகிறதாம். ஜமீன்தார்கள், நவாபுகள், தோட்டிகள், தொண்டர்கள், நகரவாசிகள், கிராமவாசிகள் இப்படி எல்லாருமே முக்கிய பாத்திரங்களாக வருகிறார்களாம். இந்த நவீனத்தின் மொத்த நீளம் 2600 பக்கங்கள். ஐந்து புத்தகங்களாகக் கிடைக்கிறதாம். விலை ரூ. 70-00!


சிங்கக் கழுகு 6
பீட்டர் ஓ டான்னல்
நான் வரும் போது போட்டுக் கொண்டு வந்த ஆடைகள் எங்கே? வாடகைக்கு எடுத்த இந்தச் சரித்திர கால ஆடைகளைக் காக்காமல் திருப்பித் தரவேண்டும்.
மாக்ஸ், இரவு இத்தனை நேரத்துக்குப் பிறகு மறுபடியும் வெளியேபோகிறாயா ?
வேறு வழியில்லை. அல்போரினி டால்ஸோ நின் விற்பனையை ரத்து செய்யலாம் என்று நினைக்கிறேன். அவன் என்ன தந்திரம் செய்யப் போகிறான் என்று தெரிந்து கொள்ள வேண்டும்.
நான் வீடு போய்த் திரும்ப நேரமில்லை என்றதும் இன்று மாலை உன் இல்லத்திலேயே குளித்து உடை மாற்றிக் கொள்ள அனுமதி அளித்ததற்கு நன்றி. போய் வருகிறேன் கவலைப் படாதே!
ஜாக்கிரதையாக இரு, மாக்ஸ்!
1719


மாக்ஸ் சென்று ஒரு மணி நேரத்துக்குப் பிறகு ஃபோன் ஒலிக்கிறது.
ஹலோ ?
அல்போரினி பிரபு பேசுகிறேன். உனக்குத் தொந்தரவு கொடுக்க நேர்ந்ததற்கு வருந்துகிறேன் மாடஸ்டி!
நான் முன்பு ஃபோன் செய்தபோது மாக்ஸ் என்னை வந்து சந்திப்பதாகச் சொன்னான்; இன்னும் காணோமே?
எனக்குப் புரியவில்லையே? உடனே கிளம்பினானே! அங்கு அவன் வந்து ஐம்பது நிமிஷம் ஆகியிருக்கணுமே ?
இது என்ன, வியப்பாயிருக்கிறதே! ஒரு வேளை வழியில் ஏதாவது விபத்து நேர்ந்திருக்குமோ அவனுக்கு ?
1720


மாடஸ்டி உடனே கிளம்புகிறாள். அல்போ ரினி அரண்மனைக்குப் போகும் வழியில் ஒரு குறுகலான கால்வாயில்...
சற்று இரு! அதோ! அந்தப் படிகளுக்குப் பக்கத்தில் ஏதோ கிடக்கிறதே!
கவிழ்ந்த மோட்டார் படகு! கால்வாயில் படகு எப்படிக் கவிழும்? உன் நண்பனுடைய படகு தானா இது?
ஆமாம்.
இதென்ன சோதனை
போலீஸ் தலைமையகத்துக்கு என்னை அழைத்துப் போ!
1720A
மறு நாள் காலை வெனிஸ்ஸில் போலீஸ் தலைமையகம்.
மாக்ஸ்ஸின் கவிழ்ந்த படகை நீ பார்த்த இடத்தைச் சுற்றி நன்றாய்த் தேடினோம். சமீபத்தில் மூழ்கி இறந்த ஒரு மனிதனின் உடலைக் கண்டு பிடித்தோம்.
பிரேதத்தைப் பார்த்து மாக்ஸ் தான் என்று உறுதிப்படுத்தும் வேலை உனக்கு வேண்டாம். அதற்கு அவனது நண்பர்களுள் வேறு யாரையாவது அழைத்து வருகிறோமே.
வேண்டாம்; நானே தயார்.
ஆமாம்; இது மாக்ஸ்தான்!
நன்றி, மேடம்.
1721



சோகக் கதை தான்; என்னுடைய அனுதாபங்களை ஏற்றுக் கொள்.
நன்றி...
...மாக்ஸ் அமைதியாக உறங்கு.
லண்டனிலுள்ள கார்வினுக்கு ஃபோன் செய்கிறாள் மாடஸ்டி.
மாடஸ்டி! உன் குரலைக் கேட்டாலே சந்தோஷமாயிருக்கிறது. எப்படி இருக்கிறாய் நீ?
துயரில் மூழ்கி இருக்கிறேன். என் நண்பன் மாக்ஸ் இறந்து விட்டான். யாரோ அவனுக்கு ஒரு விபத்தை ஏற்பாடு செய்து விட்டார்கள்.
முன்னேற்பாடான விபத்தா? அடகடவுளே! அடுத்த விமானத்தில் ஏறி அங்கு வருகிறேன்.
கார்வின்! நீ வரும் போது சில விசேஷ உபகரணங்களைக் கொண்டு வரவேண்டும். குறித்துக் கொள்.
1722
மாடஸ்டி அல்போரினி அரண்மனைக்குப் போகிறாள்.
அல்போரினி பிரபு வியாபார நிமித்தம் படுவா நகர் போயிருக்கிறார். ஏதாவது தகவல் சொல்ல வேண்டுமா?
இல்லை; மீண்டும் வருகிறேன். ஒரு விஷயங்கள் நேரில் கேட்க வேண்டும்.
இந்தக் கர்சிப் தோட்டத்தில் கிடந்தது; உங்களுடையதுதானே? உங்கள் 'இனிஷியல்ஸ்' இதில் இருக்கிறது.
ஆமாம்; என்னுடையதுதான். விருந்தின் போது நேற்றிரவு கைதவறிப் போட்டு விட்டேன் போலிருக்கிறது.
இது கைதவறி விழுந்ததல்ல. சிறுமி ஃப்ரான்செஸ்காவிடம் நான் தந்தது. அவள் இங்கே வந்திருக்கிறாள், ஆன்ஜெலோவுடன்; தோல் பையுடன்! அதனால்தான் அல்போரினிக்குச் சிங்கக் கழுகு பற்றிய ரகசியம் தெரிந்து விட்டது!
(தொடரும்)




கோத்ரேஜின் புதிய வானிஷிங் கிரீம் ஸிந்தெல், உங்கள் வதனத்திற்கு புத்தம்புது ரோஜா மலரின் மெருகேற்றி, எழிலோங்கச் செய்கிறது. சருமத்தில் போட்டதே தெரியாமல் கரைந்து மறைந்து, பட்டுப் போன்ற பளபளப்பை மட்டும் ஒளிவிடச் செய்கிறது ஸிந்தெல்.

ஸிந்தெல், சருமத்தின் இயற்கையான ஈரத்தன்மையை நிலை நிறுத்தி, நாள் முழுவதும் நலியாத புதுமைச் சிலிர்ப்பினை அளிக்கிறது. அழகுப் படிமானமாகவோ, அப்படியேவோ உபயோகிக்கும்போது, ஸிந்தெல் தரும் தூய ரோஜா சுகந்தம் உங்களைக் கவர்ச்சிக் கன்னியாகக் கனியவைக்கிறது.

**கொஞ்சிடும் அழகு மிஞ்சிட—ஸிந்தெல்**
**கோத்ரேஜின் புதிய வானிஷிங் கிரீம்.**

Godrej

ULKA-GSC-2 TAM




“கார்த்திகை மாதம் முதல் தேதியன்றே சபரிமலை யாத்திரைக்காக மாலை போட்டுக் கொண்டு அதற்கான நியம நிஷ்டைகளை ஆரம்பிப்பதில் உள்ளடக்கமான விஷயம் ஒன்றுண்டு. பாயில் படுக்கக் கூடாது. தலையணை வைத்துக் கொள்ளக் கூடாது. செருப்பு அணிந்து கொள்ளக் கூடாது. ஏறத்தாழ இரண்டு மாத கால அளவுக்குள், மலை ஏறுவதற்கான சிரமத்துக்கு இந்த வழக்கங்கள் அஸ்திவாரமாக அமைந்து விடுகின்றன. தினசரி, பூஜையில் சரணம் சொல்லுவோம். இந்தச் சரணத்தின் உச்சரிப்பு அடிவயிற்றிலிருந்து எழ வேண்டும். இப்படித் தினசரி சொல்லிப் பழகுவது, செங்குத்தான மலைப் பாதையில் ஏறும் போது ‘தம்’ பிடித்து அயர்ச்சி தோன்றாமல் இருக்க உதவுகிறது. இது இரண்டு மூன்று ஆண்டுகளாக நான் அநுபவத்தில் கண்டது” என்கிறார் ராயப்பேட்டையைச் சேர்ந்த ஐயப்ப பக்தர் அன்பர் மோகனவேலு.

ஐம்பத்திரண்டு பேர்கள் சேர்ந்த குழுவில் ஒருவராக இவர் இளம்பினார். சென்னையிலிருந்து போக வர பஸ் ஏற்பாடு செய்து கொண்டு சிதம்பரம், கும்பகோணம், குருவாயூர், கோட்டயம் வழியாகப் புனலூர் போய் அங்கிருந்து எரிமேலி வரை பஸ்ஸில் போனார். எரிமேலியிலிருந்து ஏறத்தாழ நாற்பது மைல் கடினமான மலைப் பாதையில் நடை!

“எரிமேலிப் பக்கத்தில் வாவர் சாமி மசூதி இருக்கிறது. இந்த ஒரு மசூதியிலேதான் விபூதியும் மிளகும் வருகிறவர்களுக்குக் கொடுக்கிறார்கள். இந்த வாவர் சாமிக்கு ஆதி பெயர் பாபர்சாமியென்றும் சொல்லுகிறார்கள். இந்தப் பாபர்சாமி ஐயப்பசாமிக்கு மிகவும் வேண்டியவர் என்று ஐதிகம். இந்த அடிப்படையில்தான் மலைக்கு யாத்திரை புறப்படுமுன் குறைந்த அளவில் இரண்டு பேருக்காவது சக்திக்குத் தகுந்தாற்போல் சாஸ்தாபிரீதியாக அன்னதானம் செய்ய வேண்டும் என்றும் அந்த இருவரில் ஒரு நபர் முஸ்லிமாக இருக்க வேண்டும் என்ற நியதியும் இருக்கிறது. சமூகத்தில் எந்த நிலையில் இருப்பவரும், சாஸ்தாபிரீதிக்காக யாரையும் கூப்பிடலாம். அழைக்கப் பட்டவர் வர மறுக்கக் கூடாது.

“இந்தச் சபரிமலைப் பகுதியில் வீசும் காற்றுக்கே ஒரு தனி சக்தி உண்டு. மலை ஏறும் போது களைப்பினால் நின்றால் இரண்டே நிமிடங்களில் அந்தக் களைப்பைப் போக்கும் சக்தி இந்தக் காற்றுக்கு உண்டு” என்கிறார் மோகனவேலு.

எரிமேலியிலிருந்து பம்பை வரை கடினமான மலைப் பாதை. ஒரே காடு. கூட்டம் கூட்டமாய்ச் செல்வதால் பய உணர்ச்சி தோன்றுவதில்லையாம். பம்பையிலிருந்து சபரிமலை சுமார் பத்து மைல். செங்குத்தான பாதை. இந்தப் பாதையில் சமீபத்தில் மின்சார விளக்குகள் போட்டிருக்கிறார்கள்.

மகர சங்கராந்திக்கு இரண்டு நாட்கள் முன்னதாகவே பக்தகோடிகள் பம்பையில் வந்து சேர்ந்து விடுவார்கள். தாற்காலிக தங்குமிடங்கள் நிறைய உண்டு. முதல் தட்வையாக வருபவர்கள் இங்கே ஓடும் பம்பை நதியில் மெழுகுவத்திகளையும் அகல் விளக்குகளையும் ஏற்றி மிதக்கவிட வேண்டும். இந்த இரவுகளில் பம்பை ஆறு கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும். ஊரெங்கும் பஜனை கோஷங்களும் கதாப் பிரசங்கங்களும் இரவு முழுதும் எதிரொலித்துக் கொண்டிருக்கும்.

மகர சங்கராந்திக்கு முதல் நாள் சபரிமலைக்கு ஏறி விடுவார்கள். அன்று இரவு லட்சக்கணக்கில் பக்தர்கள் அங்கேதான் தங்கியிருப்பார்கள். மறுநாள் மகர சங்கராந்தியன்றுதான் ஐயப்பனுக்கு விசேஷ நாள். அன்று மாலை தெய்வீகமாக **விமானத்தில்,** சந்நிதிக்கு எதிரே தோன்றும் மகரஜோதியைப் பார்த்து விட்டுப் பம்பைக்கு இறங்கி வந்து விடுவார்கள்.

அன்பர் மோகனவேலுவின் கோஷ்டி பம்பைக்கு அடுத்த சானக்காயம் என்ற ஊருக்குத் தங்கள் பஸ்ஸை வரவழைத்துத் திருவனந்தபுரம், கன்யாகுமரி வழியாகச் சென்னைக்குத் திரும்பியது.

“நாங்கள் பம்பையிலிருக்கும் போது ஒரு நாள் இரவு காட்டு யானைகள் ஊருக்குள் வந்து விட்டன. ‘பட்டாசைக் கொளுத்திப்

போடுங்கள். பயந்து திரும்பி விடும்' என்று சிலர் சொன்னார்கள். ஆனால் நாங்கள் அப்படிச் செய்யவில்லை. அவை மிரண்டு ஜனங்கள் நிறைந்த வேறு பகுதிக்குள் புகுந்து விடுமோ என்ற பயம். ஐயப்பன் கருணையில் அந்த யானைகள் வந்த வழியே ஒரு தீங்கும் விளைவிக்காமல் திரும்பி விட்டன'' என்கிறார் மோகனவேலு.

ஹைதராபாத்திலிருந்து ஐயப்ப தரிசனத்துக்காகச் சபரிமலைக்கு வந்தவர் அன்பர் சிவசுப்பிரமணியன். இவரும் எரிமேலி போய் அங்கிருந்து நடந்தவர். ஏற்கனவே இந்தப் பாதையில் நடந்த பழக்கம் இவருக்கு உண்டு.

மகர சங்கராந்திக்கு முதல் நாள் இவர் சபரிமலையில் உள்ள சத்திரத்தின் அறை ஒன்றில் போய்த் தங்கியிருக்கிறார். முதல் நாள் மாலை அந்த ஜனக் கூட்டத்தில் அறைச் சாவியை எங்கோ தொலைத்து விட்டார். மறு நாள் பூஜைக்கான சாமான்களும் இவரது உடைமைகளும் அறைக்குள் இருக்கின்றன. இவருக்கு அந்த நேரத்தில் என்ன செய்வதென்றே தெரியவில்லை. நேராக ஐயப்பன் சந்நிதிக்குப் போய் அங்கே அங்கப் பிரதட்சிணம் செய்து விட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்தார். வழியிலேயே அவர் தொலைத்த சாவி அகப்பட்டு விட்டது.

சபரிமலைக்குப் போகும் மலைப் பாதையில் ஒரு டீக்கடைக்காரர், இவரையும் இவர் நண்பர்களையும் ஏதாவது கட்டணம் வாங்கிக் கொண்டு அங்கேயே தங்க வைக்கத் திட்டமிட்டார். ரத்தக் கறை படிந்த சட்டையைக் காண்பித்து, 'சற்று முன்தான் ஒரு நபரை ஓநாய் அடித்து விட்டது. அவருடைய சட்டை இது' என்றாராம். சிவசுப்பிரமணியமும் அவர் நண்பர்களும், 'பரவாயில்லை! நாங்கள் நடக்கிறோம்' என்று கிளம்பி விட்டார்களாம். ''அந்தச் சட்டையில் ரத்தக் கறை அச்சுப் போட்டாற் போல் வட்டமாகப் படிந்திருக்கிறது. ஓநாய் கடித்தால் இப்படி ஒழுங்காகவா கறை படியும்! இது டீக்கடைக் காரரின் தந்திரம்'' என்றாராம்.

தரிசனத்தை முடித்துக் கொண்டு இவர் புனலூர் மதுரை வழியாகப் பழனிக்குப் புறப்பட்டார். கூட ரயிலில் வந்த நண்பருக்கு மதுரையில் ஜுரம் வந்துவிட்டது. உடலில் கைவைக்க முடியாத சூடு. கடுமையான ஜுர வேகம். மதுரையிலிருந்து பழனிவரை அந்த நண்பர் பக்கத்தில் அமர்ந்து ஐயப்ப நாம சரணம் சொல்லிக் கொண்டே வந்திருக்கிறார். பழனி ரயில் நிலையத்தை அணுகும் வேளையில் நண்பரின் உடலில் ஜுரம் அடித்த அறிகுறியே இல்லை. ஒன்றுமே நடக்காதது போல் அந்த நண்பர் எழுந்து உட்கார்ந்து விட்டார்.

புரசவாக்கத்திலிருந்து சபரிமலை யாத்திரை மேற்கொண்ட அன்பர் ஜெயராமனுக்கு இந்தத் தடவை புதிய அனுபவங்கள் கிடைத்தன. அவர் ஏற்கெனவே இந்த யாத்திரையில் அனுபவம் பெற்றவர்தான். இவர் தமது பதினொரு வயதுத் தம்பி கோபாலகிருஷ்ணனையும் முதல் தடவையாக அழைத்துச் சென்றார். அந்தச் சிறுவனும் நாற்பது மைல் மலைப் பாதையில் உற்சாகத்துடன் நடந்து சென்றிருக்கிறான். முதல் தடவையாக இந்த யாத்திரையை மேற்கொள்கிறவர்களை 'கன்னி ஐயப்பன்' என்று குறிப்பிடுகிறார்கள். பட்டினத்தில் படு சுட்டி என்று பெயரெடுத்த சிறுவன் கோபாலகிருஷ்ணன் பரமசாதுவாக இந்த யாத்திரையில் பங்கெடுத்துக் கொண்டு போய் வந்திருக்கிறான்.

''இவனைவிட வயதில் சிறிய பாலகர்கள் எத்தனையோ பேர் வந்தார்கள். அவர்களைப் பற்றிக் கவலைப் படாமல் இருக்க ஐயப்பன் அருள் புரிகிறான்'' என்கிறார் ஜெயராமன்.

''எங்கள் பிரயாண வேளையில் எந்தவித மிருகத் தொந்தரவும் ஏற்படவில்லை. நாங்கள் திரிவேணி வழியாகத் திரும்பும்போது, 'சிறுத்தை அடித்துவிட்டது' என்று ஓர் ஆசாமியைத் தூக்கிக் கொண்டு போனார்கள்'' என்றார் ஜெயராமன்.

இந்த ஆண்டு யாத்திரிகர்களுக்கான ஏற்பாடுகளை மிகவும் சிறப்பாகச் செய்திருந்தார்கள். இருபது லட்சத்துக்கு மேலாகக் கூடிய பக்தர்களுக்கு மகர சங்கராந்தியன்று பதினெட்டுப் படி வழியாகப் போய் ஐயப்ப தரிசனம் செய்ய நல்ல வசதி இருந்தது. அன்று மாலை ஆறு மணி சுமாருக்கு ஐயப்பனுக்கு ஆபரணங்கள் சாத்தித் தீபாராதனை எடுக்கும்போது எதிர்ப்பக்கத்தில் விமானத்தில் தெய்வீகமாக ஒளி வீசும் ஜோதியை மகரஜோதி என்கிறார்கள். அந்த ஜோதி தரிசனம் ஆனபிறகு பக்தர்கள் மலையிலிருந்து பம்பையை நோக்கித் திரும்ப ஆரம்பித்து விடுவார்கள். அந்த ஜோதி சில நிமிடங்கள் தான் தெரியும்.



மலைப் பாதைகளில் விரித்துப் படுக்க ஓலைப் பாய், தண்ணீர் கொண்டு போக பிளாஸ்டிக் ஜாடிகள், இவற்றுக்கு இந்த யாத்திரைக் காலத்தில் பிரமாதமான வியாபாரம்.

இங்கிருந்து யாத்திரையின் அடிப்படையாகத் தேங்காய்க் கண் வழியாக நிரப்பிக் கொண்டு போய் ஐயப்பனுக்கு அபிஷேகம் செய்த நெய்யில் ஒரு பகுதியைப் பக்தர்கள் திருப்பிக் கொண்டு வருகிறார்கள். அந்த நெய் விசேஷ மகிமை வாய்ந்தது. அதை மீண்டும் நெருப்பில் காண்பித்து உருக்கக் கூடாது. வெய்யிலிலோ வெந்நீரிலோ வைத்துத்தான் உருக்க வேண்டும். அது எந்த நோயையும் தீர்க்கும் அற்புத சக்தி வாய்ந்தது என்று சொல்கிறார்கள்.

ஜெயராமன் குழுவினரை அழைத்துச் சென்ற குருஸ்வாமியின் பெயரும் ஜெயராமன்தான். இதற்கு முன் பன்னிரண்டு தடவை சபரிமலை யாத்திரை மேற்கொண்ட அனுபவம் இவருக்கு உண்டு. ஒவ்வொரு குழுவினரையும் முன்னின்று அனுபவத்தின் அடிப்படையில் அழைத்துச் செல்பவரைக் குருசுவாமி என்று குறிப்பிடுகிறார்கள்.

சாதாரணமாக ஒரு யாத்திரீகருக்கு இருநூறிலிருந்து இருநூற்றைம்பது வரை செலவாகும் என்று சென்னையிலிருந்து போய் வருபவர்கள் கூறுகிறார்கள்.

போகும்போது தொடங்கிய நியம நிஷ்டைகளை யாத்திரை முடிந்து திரும்பிய பிறகும் ஒரு வார காலம் அனுஷ்டித்துவிட்டுத்தான் பழைய வாழ்க்கையில் நுழைய வேண்டும்.

''இந்த யாத்திரையை மேற்கொண்டுவிட்டால், பசி தாகம் எல்லாவற்றையும் மறந்து விடுகிறோம். எந்த விதத் தேவைகளும் எங்களைப் பாதிப்பதில்லை. ஐயப்ப தரிசனம், மகர ஜோதி தரிசனம் இவைதாம் எங்கள் குறிக்கோள். கவலைகளை மறக்கிறோம். திரும்பி வந்த பிறகுதான் எல்லாம் இருக்கவே இருக்கின்றன'' என்கிறார் மோகனவேலு.

அவரை அப்படியே ஆமோதிக்கிறார்கள் சிவசுப்பிரமணியனும் ஜெயராமனும்.

ஐயப்பன் மகிமையை நினைத்து நாமும் மெய் சிலிர்க்கிறோம்.

சுவாமியே சரணம் ஐயப்பா!

— பட்டினத்தார்

---




## அப்போலோ -11

''அதோ, மாட்டு வண்டி! இதோ குதிரை வண்டி!'' என்று குழந்தைகள் சொல்லிக் குதூகலித்த காலம் மலையேறி விட்டது. போயிங் 707க்கும் 747க்கும்; வி. ஸி. 10க்கும் டிரைடெண்ட்டுக்கும் உள்ள வித்தியாசங்களைக்கூட இன்று பல சிறுவர்கள் அறிவார்கள். ராக்கெட் பொம்மைகள் கடைகளில் ஏராளமாக விற்கப்படுகின்றன. இச்சூழ்நிலையில் சரித்திரப் பிரசித்தி பெற்ற அப்போலோ-11 பயணம் பற்றியும் முதன் முதலாகச் சந்திரனில் அடியெடுத்து வைத்த மனிதர்களைப் பற்றியும், சந்திர மண்டலத்தின் தன்மைகள் பற்றியும் விவரமாகத் தெரிந்து வைத்துக் கொள்வது பெற்றோர்களுக்கு அவசியமாகிறது. 'இல்லாவிட்டால் மானம் போய்விடும்; ஜாக்கிரதை!' என்றுகூட எச்சரிக்கலாம்!

பெரியவர்களும் இளைஞர்களும் மேற்கூறிய விவரங்கள் அனைத்தையும் இந்த நூலைப் படிப்பதன் மூலம் நன்கு அறியலாம். ஆங்கிலத்தில் எழுதப்பட்ட பல கட்டுரைகளை ஆதாரமாகக் கொண்டு திரு எஸ். சுப்பிரமணியம் எளிய தமிழில் தவறுகள் அதிகமின்றி எழுதியிருக்கிறார். ஒருசில இடங்களில் மேலும் சிலாக்கியமான வார்த்தைகளைக் கையாண்டு வாக்கியங்களைச் சரியான அர்த்தம் தொனிக்கும்படி அமைத்திருக்கலாம் என்று தோன்றுகிறது. உதாரணம், பக்கம் 44: ஆனால் விண்வெளி வீரர்கள் தம் எஞ்ஜின் புகைபோக்கி நிலாவை நோக்கி இருக்குமாறு எஞ்சினை இயக்குகிறார். பக்கம் 146: அந்த சிதோஷ்ண நிலையில் எனது சூபர்சானிக் ஜெட் விமானம் மணிக்குச் சராசரி 3 மைலுக்கு மேல் பறக்கவில்லை என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

இன்னும் கொஞ்சம் கருத்துச் செலுத்தி இது போன்ற வாக்கியங்களைச் சீர்ப்படுத்தி இருக்கலாம். இல்லாது போனால் தவறாக அர்த்தம் செய்து கொள்ளப்பட்டுப் படிப்பவர்களை முட்டாளாக்கிவிடும். விஞ்ஞான விஷயங்கள் அல்லவா? இம்மி அளவும் பிசகலாமோ?

இளங்கோ பதிப்பகம், 14, உஸ்மான் ரோடு, சென்னை -- 17; விலை: 3. 25.

## ஆலய தரிசனம்

கிராமத்து அவிபக்த குடும்ப வாழ்வைக் கொண்டு பின்னப்பட்ட இந்த நவீனத்தில் மூன்று உடன் பிறந்தவர்கள் பிரிவதையும் பிரிந்த பின் ஒன்றுகூட வைக்கும் சூழ்நிலையையும் திறமையோடு சித்திரிக்கிறார் ஸ்ரீ எம்.வி. வெங்கட்ராம். பெண் பாத்திரங்களின் குண இயல்புகளைச் செப்பமாக எடுத்துக் காட்டும் இந்தக் கதையிலே, நொண்டி நாகராஜன் என்னும் பாத்திரம் கிராமத்திலே விழிப்புணர்வை ஏற்படுத்தும் முறை நன்றாக இருக்கிறது. ஆனால்...

''இன்று இந்த ஒரு வீட்டைப் பிரிக்கும் சுவர் இடிபடுவதுபோல் கிராமத்தைப் பிரிக்கும் அந்தரங்கச் சுவர்களையெல்லாம் உடைக்கும் காலம் ஒன்றுவரும். கிராமம் முழுதும் ஒரு குடும்பம் ஆகும். கிராமம் முழுதுக்கும் நிலம் சொந்தமாகும். எல்லோருக்கும் போதுமான உணவும் உடையும் ஓய்வும் கிடைக்கும்'' என்ற நாகராஜனின் கூற்றுக்குச் சாமி முதலியார் கேட்கும் ஐயக் கேள்வி:

''நடக்கக் கூடிய காரியமா?''

கதையைப் படிக்கும் வாசகர்களுக்கும் இன்றைய நாட்டுச் சூழ்நிலையிலே இதே எண்ணம்தான் உதிக்கும்.

வேற்று மொழியைத் தழுவி எழுதப்பட்டதாகக் கூறப்படும் இந்த நவீனத்திலே, கதையின் கட்டுக்கோப்பு அவ்வளவாகக் கவனத்தை ஈர்க்கவில்லை. ஆனால் அச்சுப் பிழையில் காணும் அசிரத்தை நன்றாகக் கவனத்தை ஈர்க்கிறது.

பிரசுரம்: வானதி பதிப்பகம், தியாகராய நகர், சென்னை—17. விலை: ரூ. 5-00.




ர.சு.நல்லபெருமாள்

### 30. சோக இலக்கியம்

வாசலில் சாரதாவும், பேராசிரியரும் பதற்றத்துடன் நின்று கொண்டிருந்தார்கள். அவர்களுடைய முகங்களில் தென்பட்ட கலவரத்தையும், பீதியையும் கண்டு முரளி திகைத்தான். தன்னைப் பற்றிய கவலையில் சிக்குண்டவனுக்கு அவர்களுடைய வரவு மாறுதலா யிருந்தது.

சாரதாவின் உடல் இலேசாக நடுங்கிக் கொண்டிருந்தது. பேராசிரியர் அமைதியின்றித் தவித்துக் கொண்டிருந்தார். முரளி ஒன்றும் புரியாமல் அவர்கள் இருவரையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தான்.

"கம்யூனிஸ்ட் கட்சி எங்களையும் விட்டு வைக்காது போலிருக்கிறதே!" என்றார் பேராசிரியர் பதற்றத்துடன்.

"ஏன்? என்ன நடந்தது?" — முரளி பரபரப்படைந்தான்.

"சாரதாவை இரண்டு மூன்று நாட்களாக யாரோ ஒருவன் தொடர்ந்து கொண்டே யிருக்கிறான். நேற்று எவனோ ஒருவன் நாங்கள் இல்லாத சமயம் வீட்டில் வந்து வேலைக்காரனிடம் விசாரித்திருக்கிறான்."

"என்ன விசாரித்தானாம்?"

"இவள் வழக்கமாக எப்போது வருவாள்; வெளியே எங்கே சந்திக்கலாம். லேடீஸ் கிளப்புக்குப் போவாளா என்றெல்லாம் விசாரித்திருக்கிறான்.... வந்தவன் தன்னைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லையாம்" என்றார் பேராசிரியர் கமலசாமி.

முரளி கவலையுடன் கேட்டுக் கொண்டிருந்தான். வெறுப்பினால் முகத்தைச் சுளித்தான்.

"இன்று இரவு ஏழு மணிக்கு லேடீஸ் கிளப்பிலிருந்து இவளும், இவளுடைய சிநேகிதியும் திரும்பி வரும் போது, ஒருவன் இவளைக் கண்டதும் சற்றுத் தூரத்தில் ஒரு மரத்தின் பின்புறம் ஒளிந்து கொள்வதைப் பார்த்திருக்கிறாள். நல்ல வேளை! ஆபத்தொன்றும் இல்லாமல் வீடு வந்து சேர்ந்து விட்டாள்" என்று கூறிப் பெருமூச்சு விட்டார் கமலசாமி.

"எல்லாம் உன் மனப் பிரமையாக இருக்கும். சிவராமனின் மரணத்தினால் பேதலித்த உன் மனம், இப்படியெல்லாம் கற்பனைகளில் இறங்குகிறதோ என்னமோ?" என்று சாரதாவைப் பார்த்துக் கேட்டான் முரளி.

பேராசிரியர் சொன்னார்: "அதெல்லாம் ஒன்றுமில்லை, இவளைக் கொல்லத்தான் எவனோ ஒருவன் தொடர்ந்து வந்து கொண்டேயிருக்கிறான். இல்லாவிட்டால் இந்த அகால வேளையில் கிளம்பி வருவோமா? இப்போதுகூடச் சுமார் ஒரு மணிக்குச் சன்னல் வழியாக இவள் அறைக்குள் ஒருவன் எட்டிப் பார்த்திருக்கிறான். நல்ல வேளை இவள் தூங்கவில்லை. சன்னல் பக்கத்தில் ஓர் உருவம் இருட்டோடு இருட்டாகத் தெரிந்ததும் மெதுவாக எழுந்து ஸ்விச்சைப் போடச் சுவரின் பக்கம் போயிருக்கிறாள். அதற்குள் அவன் ஓடி விட்டிருக்கிறான்." பேராசிரியர் கமலசாமிக்கு மூச்சு வாங்கியது. முகமெல்லாம் வியர்த்துக் கொட்டியது. முரளி திரும்பிச் சாரதாவைப் பார்த்தான். பயத்தினால் அவள் கண்கள் மருண்டிருந்தன. உடல் நடுங்கிக் கொண்டிருந்தது.

"சந்தேகமே இல்லை. கட்சியின் சதிதான். சிவராமனோடு சேர்ந்து கட்சியின் லட்சியங்களை மாற்ற நானும் முயற்சி எடுத்ததால் வந்த வினை இது" என்றாள். அவள் குரல் பயத்தினால் கரகரத்தது. முகத்தில் வியர்வைத் துளிகள் முத்து முத்தாக நின்றன.

"அந்த ஆள் யார்? கட்சியைச் சேர்ந்தவனா?" — முரளி கேட்டான்.

"தெரியவில்லை. இருட்டில் அடையாளம் தெரியவில்லை. இது நிச்சயமாகக் கட்சியின் வேலைதான். சிவராமனோடு என்னையும் ஒழித்துவிட நினைக்கிறார்கள். அதுவும் ஒரு வகைக்கு நல்லதுதான். என் மனமும் சாந்தியடையும்" என்று கூறிவிட்டு விம்மி விம்மி அழுதாள் சாரதா.




முரளி கூறினான்: ''உன்னுடைய இந்த அசட்டு ஆசை நிறைவேறும் என்று எனக்குத் தோன்றவில்லை சாரதா! உன்னைக் கொஞ்சம் பயமுறுத்தி வைக்கலாம் என்று அவர்கள் திட்டம் போட்டிருக்கிறார்களே ஒழிய உன்னையும் கொலை செய்துவிட எண்ணமாட்டார்கள். ஏனென்றால் ஒன்று, அவர்கள் பேரில் சந்தேகம் வலுப்படும்; இரண்டாவது உன்னைக் கொல்வதால் அவர்களுக்கு விசேஷ லாபம் ஏதும் இல்லை. சிவராமனைப் போல் அவ்வளவு செல்வாக்கும் சக்தியும் படைத்தவள் அல்லவே நீ?''

''போலீஸில் ரிப்போர்ட் கொடுத்தால் என்ன?'' — பேராசிரியர் கமலசாமி கேட்டார்.

''என்ன பலன், சிவராமன் விஷயத்திலேயே அவர்களால் நடவடிக்கை எடுக்க முடியாமல் இருக்கும் போது? எதற்கும் கொஞ்ச நாட்களுக்குச்

ஆறு மாதங்களுக் கெல்லாம் பங்ஸ்ரீ வீடெங்கிலும் தவழ ஆரம்பித்து விட்டான். அவன் எப்போதுமே சுறுசுறுப்பு; உற்சாகம் துள்ளும் முகத்திலோ வியப்-பான மலர்ச்சி. அவனுடைய எடை திருப்திகரமாகவே இருந்துள்ளது. பங்ஸ்ரீயின் கட்டும் விழிச்சுடர் தாய்மார்களுக்கு ஒரு அரிய செய்தியை விடுக்கின்றது. துள்ளும் ஆரோக்கியம். பங்ஸ்ரீயின் இரகசியம்: ஒரு விசேஷ குழந்தை உணவு.

## முத்தான குழந்தை



## முத்தான குழந்தை உணவு

அறிமுகப் படுத்திய இரண்டாண்டுகளுக்குள் அமுல்ஸ்ப்ரே விற்பனையில் மற்றெந்த பாலுணவையும் மிஞ்சி, குழந்தை உணவுகளிலே முதலிடத்தைப் பிடித்துக் கொண்டு விட்டது. விசேஷமான ஊட்டத்தை அளிப்பதற்காக, அது ஒரு விசேஷ செய்முறைப்படி விசேஷமான ஆக்க முறையில் (ஸ்ப்ரே-ட்ரையிங்) தயாரிக்கப் படுகிறது. ஆம், உங்களுடைய அருமைக் குழந்தைக்காக, சீரணிக்க எளிதான அமுல்ஸ்ப்ரே சமவிகித ஊட்டச்சத்தை வாரி வழங்குகிறது: அவசியமான வைட்டமின்களும், கனிப் பொருள்களும்; மூளையும் உடலும் நன்கு வளர்வதற்காக அதிகமான தரம் மிகுந்த புரதம்.




# அமுல்ஸ்ப்ரே

தாய்ப் பாலுக்குப் பதிலாகப் புகட்டச் சிறந்தது.

ASP/AS-14

சாரதா தலைமறைவாயிருக்கட்டுமே?'' என்றான் முரளி.

'' எங்கே போவது ?'' பரிதாபமாகக் கேட்டார் கமலசாமி.

''யாருக்கும் தெரியாமல் என்னோடு இந்த வீட்டிலேயே தலைமறைவாயிருக்கட்டும். யாராவது கேட்டால், பெங்களூருக்கோ, கோயமுத்தூருக்கோ போயிருப்பதாகச் சொல்லி விடுங்கள். நாலைந்து நாட்கள் கழித்துத் தில்லிக்கு அழைத்துக் கொண்டு போய்விடுகிறேன்.''

'' அதற்குப் பிறகு?''

'' பிறகு யோசித்துக் கொள்ளலாம். இப்போது தலைமறைவாய் இருக்கட்டும்'' என்றான் முரளி.

சாரதாவும் இந்த ஏற்பாட்டுக்குச் சம்மதிக்கவே, சாரதாவை முரளியின் வீட்டில் விட்டு விட்டுப் பேராசிரியர் கமலசாமி சென்றார்.

முரளியிடம் சாரதாவை ஒப்படைத்து விட்டதில் பேராசிரியருக்கு மிகுந்த திருப்தி. போகும் போது சொன்னார்:

''தில்லியில் எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் தங்குங்கள். அவசரப்பட்டு வந்துவிட வேண்டாம். எல்லாச் செலவையும் நான் ஏற்றுக் கொள்கிறேன்.''

''அவளுக்கு ஆகும் செலவை மட்டும் நீங்கள் ஏற்றுக் கொண்டால் போதும்'' என்றான் முரளி.

பேராசிரியரின் முகம் வாடிவிட்டது. முரளியை உற்றுப் பார்த்தார். ''எனக்கு அவளும் நீயும் ஒன்றுதான். ஏன் இப்படிப் பிரித்துப் பேசுகிறாய்?'' என்று கேட்ட போது, கமலசாமியின் குரல் கம்மியது.

''தில்லிக்கு என்னுடைய சொந்த வேலையாகப் போகிறேன். அதோடு இவளையும் கூட அழைத்துப் போகிறேன். அதனால்தான் சொன்னேன்'' என்றான் முரளி.

காரில் ஏறப் போகும்போது பேராசிரியர் மிகுந்த மன நிறைவுடன் சொன்னார்: ''கடைசியில் சாரதாவை உன்னிடம் ஒப்படைத்துவிட்டேன்.''

''தைரியமாயிருங்கள். அவளைப் பத்திரமாகத் திரும்ப உங்களிடமே ஒப்படைக்கிறேன்''' என்றான் முரளி, சிரித்துக் கொண்டே.

இதைக் கேட்டுக் கமலசாமியின் முகம் வாடியதை முரளி கவனிக்கவில்லை.

'' இவள் இனி உன்னுடைய பொருள்தான் '' என்று கமலசாமி




''உங்கள் உணர்ச்சிகள் எங்களுக்குப் புரிகிறது. உங்களுக்கு அநீதி இழைக்கப்பட்டுள்ளது என்பதையும் நாங்கள் அறிவோம். ஆயினும் நீங்களும் கொதித்து எழுந்து மற்றவர்களுடன் ராஜிநாமாச் செய்து விட்டீர்களே! நீங்கள் இப்பொழுது எந்தப் பதவியில் இருக்கிறீர்கள், ராஜிநாமாச் செய்ய?''

யின் உதடுகள் முணுமுணுத்தன. ஆனால் முரளியின் காதுகளுக்கு அது எட்டவில்லை.

முரளி தங்கியிருந்த மாடியினுள் சாரதா, சிறைப்பட்டிருந்தாள். அவளை உள்ளே வைத்து வாசற்கதவைப் பூட்டிவிட்டுத்தான் முரளி வெளியே சென்றிருந்தான். சாரதாவைப் பற்றிய தகவல் ஏதும் கம்யூனிஸ்ட் கட்சிக்குத் தெரியக் கூடாது என்பதற்காகத்தான் அந்த ஏற்பாடு. அவளைப் பற்றி விசாரிப்பவர்களிடம் அவள் பெங்களூர் போயிருப்பதாகக் கூறப்பட்டது.

அந்தச் சிறை வாழ்க்கை அவளுக்கு வேதனையையும், எரிச்சலையும் கொடுத்தது. முரளி இல்லாத போது பூட்டிக் கிடக்கும் வீட்டுக்குள் பதுங்கியிருப்பது அவளுக்குச் சங்கடமாகத்தானிருந்தது. அந்த வாழ்க்கை அவளுக்குப் புது அனுபவம். முரளியோடு தனித்து இருப்பதற்குக் கூசினாள். இரவில் ஒரே வீட்டுக்குள் தனிமையில் முரளியோடு தங்குவது அவளுக்குப் பயத்தை அளித்தது. ஆனால் முரளியின் பெருந்தன்மையும், அவன் காட்டிய பரிவும் அவளுக்குத் தைரியம் அளித்தன.

நாலைந்து நாட்களுக்குப் பிறகு ஒரு நாள் மாலையில், முரளியின் மேஜையில் ஏதாவது புத்தகம் இருக்கிறதா

என்று தேடிப் பார்த்தபோது, அவனுடைய டைரிகள் அகப்பட்டன. மற்றவர்களுடைய டைரிகளைப் படிப்பது நாகரிகமற்ற செயல் என்று சாரதாவின் அறிவு உணர்த்தினாலும், ஆவல் முந்திக் கொண்டது.

அவனுடைய கல்லூரி வாழ்க்கையின் போது எழுதப்பட்ட டைரிகளைப் படித்த போது சாரதா திடுக்கிட்டாள். டைரிகளின் பக்கங்களைப் புரட்டப் புரட்டச் சாரதாவின் இதயமும் புரளத் தொடங்கி விட்டது. நெஞ்சில் இனம் புரியாத வேதனையும், பச்சாத்தாபமும் நிறைந்து அவளை அலைக்கழித்தன. அவளையும் மீறிக் கண்களிலிருந்து நீர் வழிந்தது.

அப்படி ஓர் இரகசியத்தை முரளி தன்னுள்ளே போட்டுப் புதைத்து மறுகுவான் என்று அவள் எதிர்பார்க்கவே இல்லை.

அந்தக் காலத்தில் அவள் அவனை எதிர்க்க எதிர்க்க, அவன் ஒட்டி ஒட்டிப் பழகியதன் காரணத்தை இப்போது உணர்ந்த போது, சாரதாவின் உள் மனம் தேம்பியது.

எவ்வளவு பெருந்தன்மையுடன் உணர்வுகளை அடக்கியிருக்கிறான்! ஒரு சமயமாவது உள்ளத்தில் உள்ளதை அவள் உணர்ந்து கொள்ளும்படி காட்டியிருப்பானா? அவனுடைய கண்ணியத்தையும், நேர்மையையும் எண்ணிச் சாரதா உடல் சிலிர்த்தாள்.

சாரதாவோடு அவனுக்கு ஏற்பட்ட முதல் சந்திப்பிலிருந்து சிவராமனை அவள் காதலிக்கிறாள் என்ற உண்மையை அவன் அறிந்து கொண்டது வரையுள்ள பகுதியை டைரியில் வாசித்த போது சாரதா, தேம்பித் தேம்பி அழுதாள்.

டைரியில் அவன் ஒரு காவியத்தையே வரைந்திருந்தான். அதிலிருந்த பாசத் தவிப்பையும், ஏமாற்றத்தின் பெருமூச்சையும், வேதனைகள் அனைத்தையும் உள்ளடக்கிய பாங்கையும் படித்துப் படித்துப் பரிதவித்தாள். அது ஒரு சோக இலக்கியம்.

டைரியில் எழுதப்பட்டிருந்த ஒரு சம்பவத்தைப் படித்த போது அவளுடைய இருதயமே விம்மி வெடித்து விடுவது போலிருந்தது.

எம். ஏ. பட்டப் பரீட்சையில் அவள் முதன்மையாகத் தேற வேண்டும் என்பதற்காகத் தோல்வியை வலிய அவன் ஏற்றுக் கொண்டதைப் பற்றிய இரகசியத்தை டைரியில் படித்தபோது சாரதாவுக்குத் தன் மீதே கோபம் ஏற்பட்டது. தன்னுடைய வெற்றியைப் பற்றி அத்தனை நாட்கள் கொண்டிருந்த பெருமிதம், எவ்வளவு பெரிய தவறு!

....எல்லாவற்றையும்விட முரளியின் தியாகந்தான் அவளைத் தியாகத் தகித்தது.

முரளியைப் புரிந்து கொண்டுவிட்ட சாரதா, அமைதியின்றித் தவித்தாள். அவனை நிமிர்ந்து பார்க்கக்கூடத் தெம்பில்லாமல் வேதனையுற்றாள்.

தில்லிக்குப் புறப்படுவதற்கு முந்தின நாள் இரவு, சாரதாசொன்னாள்: ''உங்களுக்கு ஏன் இவ்வளவு சிரமம்? என்னால் நீங்கள் சங்கடப்பட வேண்டாம்.''

முரளி திகைப்புடன் சாரதாவை உற்றுப் பார்த்தான். ''உன்னை ஆபத்து சூழ்ந்திருக்கும் போது இதெல்லாம் ஒரு சங்கடமா? பேராசிரியர் உன்னை என்னிடம் ஒப்படைத்திருக்கிறாரே!'' என்றான், முரளி.

''அப்படியானால் அப்பாவுக்காகத்தான் நீங்கள் இந்தப் பொறுப்பை ஏற்றிருக்கிறீர்களா?'' என்று கேட்டுவிட்டு அவனைக் கூர்ந்து பார்த்துச் சிரித்தாள் சாரதா.

''பேராசிரியருக்காகத்தான் உன்னோடு நட்பு கொண்டிருக்கிறேன் என்று நீ எண்ணினால் அப்படியே வைத்துக் கொள்ளேன்'' என்றான் முரளி.

அவனுடைய வார்த்தைகள் சாரதாவின் இதயத்தில் ஓங்கி அடித்தன. அந்த அதிர்ச்சியிலிருந்து விடுபட்டுச் சிரிக்க முயன்றாள். சிரிப்பில் உணர்ச்சியும் இல்லை, கவர்ச்சியும் இல்லை.

மறுநாள் இரவு, ஆகாய விமானத்தில் இருவரும் தில்லிக்குப் புறப்பட்டார்கள். விமானத்திலிருந்த போது சாரதாவின் மனத்தில் அமைதி இல்லை. சிந்தனை, காலங்களுக்குள் புகுந்து திரிந்து கொண்டிருந்தது.

விமானத்தில் ஆட்டமோ, குலுக்கலோ இல்லை. ஆனால் சாரதாவின் சிந்தனையில்தான் எத்தனை அதிர்ச்சிகள்! எத்தனை மேடு பள்ளங்கள்! அவளைக் குலுக்கி அணு அணுவாகச் சிதைத்தன. அவ்வளவு வேதனையிலும் நேசக் கரம் நீட்டி ஆறுதல் அளிக்கப் பக்கத்தில் முரளி இருக்கிறான் என்ற நினைவு, சற்றுத் தெம்பைக் கொடுத்தது.

தில்லி விமான நிலையத்தில் பரபரப்பு அதிகமாயிருந்தது. இந்திய எல்லையில் சீனர்கள் தாக்குவது பற்றித்தான் எல்லோரும் பேசிக் கொண்டிருந்தார்கள். எல்லோருடைய முகங்களிலும் கவலைக் குறி தென்பட்டது.

ஒரு ஹோட்டலில் முரளியும் சாரதாவும் தங்கினார்கள். சாரதாவைப் பத்திரமாக அறைக் கதவைத் தாழிட்டுக் கொண்டு உள்ளே இருக்கும்படி



# துறைமுகத் தொகுதிக்கு

காங்கிரஸ் வேட்பாளராகிய

# ஜி. உமாபதி

அவர்களை ஆதரித்து

**1-3-71 அன்று**

ராட்டைச் சின்னத்தில்

வோட் அளிக்க வேண்டுகிறோம்

காமராஜ் வாலிபர் சங்கம்



---

# தஞ்சாவூர் பர்மனேனெண்ட் பாங்க் லிமிடெட்

பதிவு அலுவலகம் :
1087, மிஷன் தெரு, தஞ்சாவூர்

**11-1-71 முதல் டிபாசிட்டுகளுக்கு வட்டி விகிதங்கள்**

| Period | Rate | |
|---|---|---|
| 15 நாட்கள் முதல் 45 நாட்கள் வரை ... | 2 % | p. a. |
| 46 நாட்கள் முதல் 90 நாட்கள் வரை ... | 3 % | ,, |
| 91 நாட்கள முதல் 6 மாதங்களுக்குள் ... | $4\frac{3}{4}$% | ,, |
| 6 மாதங்கள் முதல் 9 மாதங்களுக்குள் ... | $5\frac{1}{4}$% | ,, |
| 9 மாதங்கள் முதல் 12 மாதங்களுக்குள் ... | $5\frac{3}{4}$% | ,, |
| 1 வருடம் முதல் 2 வருடத்திற்குள் ... | $6\frac{1}{2}$% | ,, |
| 2 வருடம் முதல் 3 வருடம் வரை ... | 7 % | ,, |
| 3 வருடங்களுக்குமேல் 5 வருடம் வரை ... | $7\frac{1}{2}$% | ,, |
| 5 வருடங்களுக்குமேல் ... ... ... | $7\frac{3}{4}$% | ,, |

தர்ம ஸ்தாபனங்கள் மற்றும் அறநிலைய ஸ்தாபனங்களுக்கும் $\frac{1}{2}$% அதிகம்
(மேற்கண்ட வட்டி விகிதங்களைவிட)

சேவிங்ஸ் கணக்குகளுக்கு $4\frac{1}{2}$% p. a. தினசரி நிலுவையின் பேரில்

D. லெக்ஷ்மி நாராயண், சேர்மன் B. K. மாதவன், செக்ரட்டரி


பிரின்ஸ்
பிளேடு
இறகின்
மென்மைபோல்
முக க்ஷவரம்
செய்யும்
பிளேடு!
THE SYMBOL OF QUALITY
Prince
BLUE RAZOR BLADES
BLUE PRINCE BLADE
MADE IN INDIA
ஃப்ளூரோ கார்பன் முனை கொண்ட
பிரின்ஸ்
ப்ளூ பிளேடுகளை உபயோகியுங்கள்

கல்கி பிப்ரவரி 28 சிறுகதைச் சிறப்பிதழ்

**நானும் என் எழுத்தும்**
— ஜெயவந்த் தள்வி – (மராட்டி)

**பிழைக்கத் தெரிந்தவர்**
— ஹரிமாம்சு ஜோஷி – (ஹிந்தி)

**சிட்டுக்குருவிகளும் பிச்சைக்காரர்களும்**
— ஏ. எஸ். ராபர்ட் – (மலையாளம்)

---

கூறிவிட்டு முரளி, நாடாளும் மன்றத்துக்கு விரைந்தான்.

நாடாளு மன்றக் கட்டடத்தின் வராந்தாவில் அங்கத்தினர்கள் கும்பலாக நின்று பேசிக் கொண்டிருந்தார்கள். முரளி ஒரு கும்பலை நெருங்கிப் பேச்சுக் கொடுத்தான்.

''எல்லைப் பிரச்னை ஆபத்தான கட்டத்தை நெருங்கி யிருக்கும்போது பிரதமர் வெளிநாடு செல்வது அவ்வளவு உசிதமா?'' என்று கேட்டான் முரளி, இந்தி மொழியில். காந்திக் குல்லாய் அணிந்திருந்த ஒரு வட நாட்டு அங்கத்தினர் கோபத்துடன் முரளியை முறைத்துப் பார்த்தார். ஆனால் அவனுக்குப் பதில் சொல்ல வேறு பலர் தயாராக இருந்தார்கள். ''நன்றாகக் கேளும்! அந்த ஒரு தவறு மட்டுமா! சீனாக்காரன் பின்னாலிருந்து குத்திவிட்ட விஷயத்தை வருஷக் கணக்காக மக்களிட மிருந்து மறைத்து வைத்தது குற்றமில்லையா? பாதுகாப்பு விஷயத்தில் அசட்டையாக இருந்தது குற்றமில்லையா? கம்யூனிஸ்ட் மனப்பான்மை கொண்டவரைப் பாதுகாப்பு மந்திரியாக நியமித்திருப்பது குற்றமில்லையா? பாதுகாப்புச் சாதனங்களை உற்பத்தி செய்யும் தொழிற்சாலையில் ''டீ கெட்டில்'' செய்து கொண்டிருந்தார்களே, இதெல்லாம் குற்றமில்லையா?'' — குற்றச்சாட்டை மளமளவென்று அடுக்கிக் கொண்டே போனார் ஒருவர்.

இப்படி அவர்கள் பேசிக் கொண்டிருக்கையிலேயே மன்றம் கூடும் நேரம் வந்துவிடவே அங்கத்தினர்கள் எல்லோரும் மன்றத்துக்குள் விரைந்தார்கள். முரளி, பத்திரிகை நிருபர்களுக்கான இடத்தை நோக்கி விரைந்தான்.

மூன்று நாட்களுக்குப் பிறகு இந்தியப் பிரதமர் ஜவாஹர்லால் நேரு கொழும்புக்குப் புறப்பட்டார். விமான நிலையத்தில் நிருபர்கள் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். நேருவின் முகத்தில் எப்போதும் குடிகொண்டிருக்கும் மலர்ச்சி இல்லை. பார்வையில் கடுகடுப்பு இருந்தது. பெரும் பிரச்னையின் அழுத்தம் அவரைச் சோர்வடையச் செய்திருந்தது.

''இந்தச் சமயத்தில் இலங்கை செல்வதற்கு முக்கிய காரணம் ஏதாவது உண்டா?'' என்று கேட்டார் ஓர் அமெரிக்க நிருபர்.

''நண்பனைக் காணப் போவதற்கு என்ன காரணம் தேவை?'' என்று கேட்டார் நேரு.

''பகைவனின் பயமுறுத்தல் ஏற்படும்போது துணை நாடிச் செல்வதாகக் கொள்ளலாமா?!'' என்று ஒரு பெண் நிருபர் கேட்டாள். அந்த நிருபரைக் கவனித்ததும் முரளி திடுக்கிட்டான்.

காந்தாமணி அங்கு எங்கு வந்தாள்? எந்தப் பத்திரிகையின் நிருபராக வந்திருக்கிறாள்...? ஒருவேளை சாரதாவைப் பின்தொடர்ந்து வந்திருப்பாளோ?

முரளியின் சிந்தனை அலைக்கழிந்தது. நேருவின் குரல் கேட்கவே கவனத்தை அவர் மீது செலுத்தினான்.

''இந்தியா யாரையும் பகைவனாகக் கருதவில்லை'' என்றார் நேரு.

''எல்லையில் தாக்கும் சீனாவைக் கூடவா?'' என்று கேட்டார் அமெரிக்க நிருபர், வியப்புடன்.

''இந்தியாவும் சீனாவும் இரண்டாயிரம் வருடங்களாகவே நண்பர்கள். இப்போதுள்ள பூசல்கள் சீக்கிரமே மறைந்து மீண்டும் அமைதியும் நட்புறவும் கௌரவமான முறையில் ஏற்பட வேண்டும் என்றுதான் விரும்புகிறோம்'' என்றார் நேரு.

அடுத்த அன்பளிப்புக் கல்கி

ரோம் முதல் சிங்கப்பூர் வரை

கே.எம்.ஜார்ஜ்

இதழுடனேயே இணைந்திருக்கும்

"சீனாவின் தாக்குதலைச் சமாளிக்க என்ன ஏற்பாடு செய்திருக்கிறோம்?" என்று கேட்டாள் காந்தாமணி.

"நேஃபாப் பகுதியைச் சீனர்களிட மிருந்து மீட்கும்படி நம்முடைய படைகளுக்கு உத்தரவு கொடுத்தாகி விட்டது" என்றார் நேரு. அவருடைய முகத்தில் மீண்டும் வேதனையின் சாயல் படர்ந்தது.

ஜவாஹர்லால் நேரு விமானத்தில் ஏறிய பிறகு நிருபர்கள் கலைந்து சென்றார்கள். விமான நிலையத்தின் வாசலில் முரளிக்காகக் காந்தாமணி காத்துக் கொண்டிருந்தாள்.

"உங்களை எங்கெல்லாம் தேடுவது? 'பாரதமணி' காரியாலயத்தில் முந்தா நாள் உங்களைப் பார்க்கச் சென்றேன்" என்றாள்.

முரளி திடுக்கிட்டு அவளைப் பார்த்தான்.

"கம்யூனிஸ்ட் கட்சியில் உள்ள இந்தத் தீவிரவாதிக்கு என்னால் ஆகவேண்டியது என்னவோ?" என்று கேட்டான்.

"வாருங்கள், காண்டீனுக்குப்போய்ப் பேசலாம்" என்று கூறிவிட்டுக் காந்தாமணி நடந்தாள். முரளி அவளைத் தொடர்ந்தான்.

"நீங்கள் இங்கே எங்கே தங்கியிருக்கிறீர்கள்?" — காந்தாமணி கேட்டாள்.

"என்னுடைய உறவினர் வீட்டில்" என்று பொய் சொன்னான். பிறகு கேட்டான்: "நீங்கள் எந்தப் பத்திரிகையின் நிருபரோ ?"

"கல்கத்தாவி லிருந்து வெளியாகிறதே, எங்கள் கட்சிப் பத்திரிகை; அதன் சார்பில் வந்தேன். கிராண்ட் ஹோட்டலில் தங்கி யிருக்கிறேன்" என்றாள் காந்தாமணி.

காண்டீனுக்குள் சென்று ஒதுங்கிய இடத்தில் இருவரும் அமர்ந்தனர்.

"ஒரு முக்கியமான விஷயமாக உங்களைத் தேடி வந்தேன். நீங்கள் தில்லிக்கு வந்திருப்பதாகப் 'பாரதமணி'யில் சொன்னார்கள்" என்றாள் காந்தாமணி.

"என்ன விஷயம்?" என்று முரளி கேட்டான்.

"சிவராமன் ஒரு சிறந்த தொண்டர். அவருடைய மறைவு கட்சிக்குப் பெரிய நஷ்டம். இன்னும் எங்கள் தலைவர் இந்த அதிர்ச்சியி லிருந்து மீளவில்லை. சிவராமன் ஒரு மனக் கஷ்டத்தில் தற்கொலை செய்து கொண்டார். நீங்கள் இந்த விஷயத்தில் தலையிட்டுப் பெரிது படுத்தி...."

"தற்கொலை செய்து கொண்டான் என்று என்னையும் நம்பச் சொல்கிறீர்களா?" என்று கேட்டான் முரளி, மிகுந்த கோபத்துடன்.

"தற்கொலைதான். அதில் சந்தேகமே இல்லை."

"ஒரு பொய்யைத் திரும்பத் திரும்ப அழுத்திச் சொல்வது உங்கள் கட்சிப் பிரசாரத்துக்கு ஏற்றதா யிருக்கலாம்."

"நீங்கள் சந்தேகப்படுவதற்கு ஆதாரமே இல்லை. கொலைக்கு என்ன காரணம் இருக்க முடியும்?" என்று குறுக்கிட்டுக் கேட்டாள், காந்தாமணி.

"ட்ராட்ஸ்கியின் கொலைக்கு என்ன காரணம்? பெரியாவின் கொலைக்கு என்ன காரணம்?" என்றான் முரளி. அவளைக் கூர்ந்து பார்த்தான். அவள், அவனுடைய பார்வையை எதிர்க்க முடியாமல் சன்னல் பக்கம் நோக்கினாள்.

"உங்களுடைய சந்தேகம் வீண். நீங்கள் வீணாகச் சிவராமனின் மரணத்தைக் கொலை என்று கூறிக் கொண்டிருக்கிறீர்கள்" என்றாள்.

"அது நிச்சயமாகக் கொலைதான்" என்று அழுத்தமாகச் சொன்னான் முரளி.

"எது எப்படி இருந்தாலும், இந்தப் பிரச்னையில் நீங்கள் தலையிட்டுப் பத்திரிகையில் எழுதாமல் இருந்தால்..."

"ஓ....! கொலையை மறைக்கச் சொல்கிறீர்களா? என் நண்பனின் கொலைக்கு நீதி வழங்கும்படி செய்வது என் கடமை."

"இது கொலையே இல்லை."

"கொலைதான்" என்றான் முரளி அழுத்தமாக.

"உங்களோடு வாதாடுவதில் பயனில்லை" என்று அலுத்துக் கொண்டாள் காந்தாமணி.

அவளிடமிருந்து விடைபெற்றுக் கொண்டு விமான நிலையத்தி லிருந்து முரளி ஒரு டாக்ஸியில் தான் தங்கியிருந்த ஹோட்டலுக்குச் சென்றபோது தன்னைத் தொடர்ந்து இன்னொரு டாக்ஸி வந்து கொண்டிருந்ததை அவன் அறியவில்லை.

(தொடரும்)

(ஸ்தாபிதம் : 1947)

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு

## பிரைவேட் லிமிடெட்

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்
"பாலுஸேரி பில்டிங்ஸ்", 3, சிங்கராச்சாரி தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-5.

தந்தி : 'EVERMANS', போன் : 85834 • தபால்பெட்டி : 414

மதராஸ் சிட் பண்டு 1961 ஆக்ட்படி மேற்காணும் சீட்டுகள் நடத்தப்படுகின்றன
(மதராஸ் ஆக்ட் நெ. 24 OF 1961)

### நீண்ட காலச் சீட்டுகள்

50 மாதங்கள் — 50 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTM | ரூ. 200/- | ரூ. 10,000/- |
| LTN | ரூ. 100/- | ரூ. 5,000/- |
| LTO | ரூ. 50/- | ரூ. 2,500/- |
| LTP | ரூ. 20/- | ரூ. 1,000/- |

40 மாதங்கள் — 40 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTA | ரூ. 500/- | ரூ. 20,000/- |
| LTB | ரூ. 250/- | ரூ. 10,000/- |
| LTC | ரூ. 125/- | ரூ. 5,000/- |

### குறுகிய காலச் சீட்டுகள்

25 மாதங்கள் — 25 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| A | ரூ. 200/- | ரூ. 5,000 | D | ரூ. 25/- | ரூ. 625/- |
| B | ரூ. 100/- | ரூ. 2,500 | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250 | F | ரூ. 15/- | ரூ. 375/- |

சேரும் குருப்பை விவரித்து எங்கள் விதிகளுக்கு எழுதவும்

கிளைகள் : புது டில்லி – பம்பாய் – பெங்களூர் – கல்கத்தா

25 YEARS

எமது வெள்ளி விழா ஆண்டு

எங்கள் சேவை உங்களுக்குத் தேவை

**பா**ப்பி தம்பரைப் பிள்ளையின் பக்கம் நகர்த்தியவாறே, "என்னடா, உன் அக்காக் காரி சௌக்கியம்தானே?" என்று அலட்சிய மாகக் கேட்டாள் அலமு.

"ஓ! சௌக்கியம்தான்..." என்று இழுத்த பாபு கொஞ்சம் தாழ்ந்த குரலில், "அம்மா! அக்கா வேலைக்குப் போகிறாள்" என்றான்.

"நிஜம்தானா?" நம்பாமல் வினவினாள் அலமு.

"ஆமாம்மா. அத்திம்பேரின் ஆபீஸி லேயே ஸ்டெனோவாக இருக்கிறாள். மூந் நூறு ரூபாய் சம்பளம்..."

"எத்தனை மாதமாய்ப் போகிறாளோ?"

"ஏழெட்டு மாதங்களாகப் போகிறாள் போலிருக்கிறது."

"தேவலையே..."

"அக்கா இப்பொழுது பூசினாற் போல் ஜோராக இருக்கிறாள்."

"அது போகட்டும். இந்தச் சமாசாரத்தை நீ அப்பாவிடம் சொல்லி வைக்காதே." மக னின் காதைக் கடித்தாள் அலமு.

"தெரியும், அதனால்தான் நானே உன் னிடம் தனியாகச் சொன்னேன்."

"நல்லதாகப் போச்சு. அவர் காதில் விழுந் தால், பாவம், ரொம்ப வருத்தப்படுவார்.

# அப்பாவிடம்

## கே. ஜெயலக்ஷ்மி



அவராகத் தெரிந்து கொள்கிற போது தெரிந்து கொள்ளட்டும். நாமாகச் சொல்ல வேண்டாம்."

"என்னடா, உன் அக்கா என்ன சமாசாரம் சொல்லி அனுப்பினாள்?" என்று விசா ரித்தபடியே சங்கரராமும் அவ் விடம் வந்து உட்கார்ந்தார்.

"என்னைக் கண்டிப்பாகக் கல் லூரியில் சேரச் சொன்னாள். அதற்கான செலவை அவளே ஏற்றுக் கொள்கிறாளாம்" என்று கூறினான் பாபு.

"உதவி செய்யக் கூடிய காலத்தில் செய்து கிழித்து விட்டாள். இனிமேல்தான் செய்து கிழிக்கப் போகிறாள். என்னமோ போயேன். பெண்ணாவது மண்ணாங்கட்டியாவது! எல் லாம் வெறும் தண்டம்" என்று பொரிந்து கொட்டிப் பெண்மீது தமக்கிருந்த வெறுப் பைக் காண்பித்துக் கொண்டார் சங்கரராம்.

"பெண்ணிடம் எதிர்பார்ப்பது சரியென்று எனக்குத் தோன்றவில்லை. என்ன இருந்தா லும் அவள் இன்னொருவருக்குக் கட்டுப் பட்டவள்தானே?"

"இன்னொருவருக்குக் கட்டுப்படாமலிருந்த போது செய்திருக்கலாமல்லவா?"

"தாராளமாக..."

"இந்தக் காலத்தில் இருபத்தைந்து வயது வரையில் கூடப் பெண்கள் கல்யாணத்தைப் பற்றிய நினைப்பே இல்லாமல் குடும்பத்துக்குச் சம்பாதித்துப் போட்டுக் கொண்டிருக் கிறார்கள். இவள் என்னடான்னா பத்தொன் பது வயதில் கூட வேலைக்குப் போக முடியாது என்று வெட்டொன்றாகச் சொல்லி விட்டாள். கொஞ்சமும் இரக்கமற்ற கழுதை. இந்த அழகில் டைப்ரைட்டிங், ஷார்ட் ஹாண்ட் எல்லாம் வேறு படித்திருக்கிறாள்." மூச்சு விடாமல் பேசிக் கொண்டே போனார் அவர்.

"சரி, விட்டுத் தள்ளுங்கள். போனதைப் பற்றிப் பேசி என்ன பிரயோசனம்?" கண வரைச் சமாதானப்படுத்த முயன்றாள் அலமு.

"நீ சொல்லி விட்டால் நொடியில் எப்படி விட்டுத் தள்ளுகிறதாம்? மளிகைக் கடையில் கடன், ஜவுளிக் கடையில் கடன், பாத்திரக் கடையில் கடன்... கல்யாணம் ஆனதிலிருந்து அந்தக் கடைகளின் பக்கமே போகாமல் இருக்கிறேன். தெரியுமா உனக்கு?" ஆத்திர மாக வார்த்தைகள் வெளிப்பட்டன.

"தெரியாமல் இருக்க நான் என்ன பச்சைக் குழந்தையா என்ன?" என்றவாறே எழுந்து அப்பால் சென்றாள் அலமு.

என்னதான் தற்கால ரீதியில் அவர் எண் ணத்தில் நியாயம் இருக்கிறது என்றாலும் வாய்க்கு வாய் அவர் சுசீலாவைக் கரித்துக் கொட்டுவதை அவளால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. பெண் தன்னைப் பெற்றவர் களுக்கு உதவக் கடமைப்பட்டவளல்ல என்கிற பழங்காலத்து மனோபாவத்தைச் சேர்ந்தவள் அலமு. அதனால் அவளுக்குச் சுசீலாவின் மேல் கொஞ்சமும் வருத்தமே கிடையாது. என்றாலும் இங்கிருக்கும்போது 'வேலைக்குப் போகவே முடியாது!' என்று நிர்த்தாட் சிண்யமாகக் கூறியவள், இப்போது கல்யாண மாகிப் புருஷன் வீட்டுக்குப் போன பிறகு மட்டும் வேலைக்குப் போய் வரக் காரணம் என்னவாக இருக்கும்?

அப்படி யொன்றும் சுசீலா பொறுப்பற்ற ரகத்தைச் சேர்ந்தவள் அல்ல. எல்லோ ருடைய தேவைகளையும் தன்னுடையதாக இழுத்துப் போட்டுக் கொண்டு ஒவ்வொன் றையும் செய்து கொடுப்பாள். தன் அம் மாவை ஒரு நிமிடம் வேலை செய்ய விடமாட் டாள். வீட்டு வேலைகள் முழுதும் தானே செய்வாள். வெளியே போய்ச் சாமான்கள் வாங்கி வருவாள். மார்க்கெட்டுக்குப் போய்க் காய்கறிகள் வாங்கி வருவாள். வேலைக்காரி யையும் வேண்டாம் என்று சொல்லி விட்டு அந்த வேலைகளையும் தானே செய்வாள். இரண்டு குழந்தைகளுக்கு டியூஷனும் சொல் லிக் கொடுத்தாள். ஆனால் இவைகளெல்லாம் செலவைக் குறைக்கத்தான் உதவிற்றே தவிர வருவாயை அதிகரிக்க உதவவில்லையே!

**மு**தல் இரண்டு பெண்களுக்குக் கல்யாணம் செய்து கொடுத்துச் சளைத்துப் போன குடும் பம் அது. பிள்ளைகள் இருவரும் கடைசியாகப் பிறந்திருந்ததால் அவர்கள் இன்னமும் சம் பாதிக்கிற வயதை அடையவில்லை. மூன்றாவ

தாகப் பிறந்திருந்தாள் சுசீலா. அவளை உயர்நிலைப் பள்ளிக்கு மேல் படிக்க வைக்கச் சங்கரராமால் முடியவில்லை. அவளும் கல்லூரிப் படிப்பை விரும்பவில்லை.

வீட்டில் இருந்தபடியே ஷார்ட் ஹாண்ட், டைப்ரைட்டிங் இரண்டிலும் உயர்ந்த முறையில் தேர்ச்சி பெற்றிருந்தாள். அதனால் அவளை வேலைக்குப் போகும்படி ரொம்பவும் வற்புறுத்தினார் சங்கரராம். அவருடைய குறைந்த வருவாயில் குடும்பத்தை நடத்திச் செல்வதே அசுர சாதனையாக இருந்தது. சுசீலாவும் வேலைக்குச் சென்றால் வருவாய் கணிசமாக உயருமே! கொஞ்சம் தாராளமாக இருக்கலாமென்பதுடன் சுசீலாவின் கல்யாணத்துக்கும் ஏதேனும் சேமித்து வர முடியுமே! எவ்வளவோ சொல்லிப் பார்த்து விட்டார் அவர். சுசீலா ஒரே பிடிவாதமாக வேலைக்குப் போக மறுத்து விட்டாள்.

வயது வந்த பெண்ணை ஒன்று மேலே படிக்க வைக்க வேண்டும்; அல்லது வேலைக்கு அனுப்ப வேண்டும். அதுவுமில்லாவிட்டால்? கல்யாணமாவது செய்து கொடுத்து விட வேண்டுமல்லவா? சும்மா வைத்திருக்கலாமா? மேலே படிக்க வைக்கச் சங்கரராமால் முடியவில்லை. வேலைக்குப் போகவோ சுசீலாவுக்கு விருப்பமில்லை. அதனால் அலமுவின் தொந்தரவு பொறுக்க முடியாமல் சுசீலாவுக்குத் திருமணம் செய்துவிடத் தீர்மானித்தார் சங்கரராம். அவருடைய முதல் மாப்பிள்ளைக்கு உறவில் ஒரு பையன் இருப்பதாகத் தெரிந்தது. சுசீலாவுக்கும் வேளை வந்துவிட்டது. எல்லாக் கடைகளிலும் கடனுக்குப் பொருள் கொடுக்கவும் முன் வந்தார்கள். கல்யாணம் நடந்தேறியது. சுசீலா கணவன் வீடு சென்றுவிட்டாள்.

அடி நாளில் சுசீலா வேலைக்குப் போக மறுத்ததைப் பெரிய குற்றமாக அலமு கருதவில்லை. ஒருவகையில் அது நியாயம் என்பது

# சொல்லாதே!



போலவே அவள் எடுத்துக் கொண்டாள். ஆனால் கல்யாணமாகிக் கணவன் வீட்டுக்குப் போன பிறகு இப்போது சுசீலா வேலைக்குப் போகத் தொடங்கி யிருப்பதுதான் அவனுக்குப் பெரிய ஆச்சரியத்தைக் கொடுத்தது. அப்போது மறுப்பானேன்? இப்போது செல்வானேன்? இப்போது செல்லலாம் என்றால் அப்போது மறுக்கக் காரணம் என்ன? அது தான் அவனுக்குப் புரிபடாததாக இருந்தது. வேலைக்குப் போகிற விஷயம் அவருக்குத் தெரிந்து விட்டால்? வெறும் வாயையே மெல்லுகிறவர் பிறகு சும்மா இருப்பாரா?

தபால்காரர் கொடுத்து விட்டுப் போன ரூபாய்களை எண்ணிப் பார்த்துக் கொண்டிருந்தான் பாபு.

''ஏதுடா பணம்?'' என்றவாறே வந்தார் சங்கரராம்.

''சுசீலா அக்கா அனுப்பியிருக்கிறாள் அப்பா!''

''எத்தனை ரூபாய்கள்?''

''இருநூறு.''

''எதற்காக?''

''கல்லூரி பீஸ் கட்டுவதற்காக.''

''நீ அவளுக்கு எழுதிக் கேட்டிருந்தாயா?''

''இல்லை. அவளாகத்தான் அனுப்பியிருக்கிறாள்.''

''என்ன அதிகப்பிரசங்கித்தனம்? மாப்பிள்ளை ஏதாவது நினைத்துக் கொண்டால்?'' சங்கரராமுக்கு எரிச்சலாக இருந்தது.

''ஒன்றும் நினைத்துக் கொள்ள மாட்டார் அப்பா. அக்காதான் வேலைக்குப் போகிறாளே?'' சொல்லிவிட்டு உதட்டைக் கடித்துக் கொண்டான் பாபு.

''வேலைக்குப் போகிறாளா?'' வியப்பு எல்லை மீறிப் போய்விட்டது அவருக்கு.

''வந்து...வந்து... '' என்று குழறினான் பாபு.

''ஆமாம். சுசீலா வேலைக்குப் போகிறாளாம்'' என்றாள் இதுவரையில் அங்கே மௌனமாக நின்று கொண்டிருந்த அலமு.

''அப்படியா சங்கதி?'' என்றவர் அப்படியே நாற்காலியில் 'தொப்'பென்று விழுந்தார். 'நாம் வேலைக்குப் போகச் சொல்லி வற்புறுத்தினோம். முடியாதென்று கூறிவிட்டாள். இப்போது புருஷன் வீட்டுக்குப் போன பிறகு வேலைக்குப் போகிறாள். பெற்ற தகப்பனுக்குச் சம்பாதித்துக் கொடுக்க விரும்பாதவள் நேற்றைக்கு வந்த கணவனுக்குச் சம்பாதித்துக் கொடுக்கிறாள். என்ன கெட்ட எண்ணம் இருந்தால் இப்படிப் பாரபட்சமாக நடந்து கொள்வாள்? இந்த நன்றிகெட்ட பெண்ணுக்காக நாம் எத்தனை இடங்களில் கடன்பட்டிருக்கிறோம்! சே! சே! இவளும் ஒரு பெண்ணா?' என்று உள்ளம் குமைந்தார்.

''டேய் பாபு!...'' என்று கூச்சலிட்டார்.

''என்னப்பா?'' திரும்பி வந்தான் பாபு.

''அந்தப் பணத்தை அவளுக்கே அனுப்பி விடு. அது அவளுடைய புருஷனுக்கே உபயோகப்படட்டும். நமக்கு வேண்டாம்.''

''சரி, அப்பா!''

''இன்னும் இரண்டு நாட்களில் கல்லூரிக்கு 'பீஸ்' கட்டியாக வேண்டுமே'' என்று இழுத்தாள் அலமு.

''நான் யாரிடமாவது கைமாற்றுக் கேட்டுப் பார்க்கிறேன். கிடைத்தால் பார்ப்போம். கிடைக்கா விட்டால் கல்லூரியில் சேர வேண்டாம்...'' என்று சொல்லிக் கொண்டே எழுந்து வெளியே சென்றார் சங்கரராம்.

சாலையோரம் நடந்து கொண்டிருந்தார் சங்கரராம். அவருக்கு அருகில் 'சர்....ர்' என்ற ஓசையுடன் வந்து நின்றது ஓர் அம்பாஸிடர் கார்.

காரோட்டிக்குப் பக்கத்தில் அமர்ந்திருந்தவர் தம் தலையை வெளியே நீட்டி, ''என்ன சங்கரராம், பெண்ணுக்குக் கல்யாணம் ஆன பிறகு உம்மைக் கடைப் பக்கமே காணோமே?'' என்று விசாரித்தார்.

சங்கரராமுக்கு வெட்கத்தினால் முகம் கருங்கியது. உள்ளத்தில் சுரீர் என்று ஊசி குத்துவது போன்ற வேதனை. பேச்சே எழும்பவில்லை. ''வந்து...வந்து...'' என்று தடுமாறினார். 'கடன் பட்டார் நெஞ்சம் போல் கலங்கினான் இலங்கை வேந்தன்' என்று பெரியோர் வாக்கு பொய்யாகுமா?

''நீர் ரொம்ப அதிருஷ்டக்காரர் சங்கரராம். பொறுப்புணர்ச்சி மிகுந்த பெண்ணை மகளாக அடைந்திருக்கிறீர்...''

ஒன்றும் புரியாமல் தவித்தார் சங்கரராம். 'கலியாணத்துக்கு ஆயிரம் ரூபாய்க்கு மேல் ஜவுளியைக் கடனாக வாங்கி யிருக்கிறோம். இன்னும் ஒரு நயா பைசாக்கூடக் கொடுக்கவில்லை. அதைத் திருப்பித் தரும்படி கேட்காமல்... ஏதேதோ கேட்கிறாரே!'

''நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?''

''நீர் கடைப்பக்கமே வரவில்லை. அதனாலென்ன? உமது பெண் ஒவ்வொரு மாதமும் முதல் தேதியன்று நூற்றைம்பது ரூபாய் அனுப்பிக் கொண்டு வந்தாள். எல்லாக் கடனும் அடைபட்டு விட்டது. இன்னும் நூற்றி ஏழு ரூபாய்தான் பாக்கி. அடுத்த தடவை நூறு ரூபாய் அனுப்பினால் போதும் என்று நேற்றுத்தான் உமது பெண்ணுக்கு எழுதிப் போட்டோம்'' என்று சொல்லிக் கொண்டே போனார் விமலா எம்போரியத்தின் முதலாளி மோகனரங்கம்.

சங்கரராம் பேசவில்லை; அவரால் பேச முடியவில்லை.

''சரி, நான் வருகிறேன்... சங்கரராம், தலைத் தீபாவளிக்கு ஜவுளி எடுக்கக் கட்டாயம் வந்து விடுங்கள்...'' என்று கூறினார் மோகனரங்கம்.

கார் நகர்ந்தது. திரும்பி வீட்டை நோக்கி நடந்தார் சங்கரராம். வீட்டு வாசலில் ஒரு பையன் நின்று கொண்டிருந்தான்.

''யாரப்பா நீ? என்ன வேண்டும் உனக்கு?'' என்று வினவினார் அவனைப் பார்த்து.

''அருககம் ஸ்டோரிலிருந்து வருகிறேன் ஐயா. 'ஏன் சாமான் வாங்க நம்ப வீட்டிலிருந்து யாருமே வரவில்லை?' என்று முதலாளி கேட்டுக் கொண்டு வரச் சொன்னாருங்க!'' என்றான் பையன்.

''பத்து ரூபாய் பாக்கி யிருந்தால்கூட, பத்துப் பேர்களுக்கு முன்னால் கேட்டு மானத்தை வாங்குகிற முதலாளியா எழுநூறு ரூபாய்க் கடனைக் கொடுக்காமலே இருக்கிற என்னிடம் இப்படிக் கேட்டு அனுப்பி

# இப்பொழுது

ஒவ்வொருவரும் விரும்பி கேட்பது

POP POP POP
POP POP POP POP
POP POP POP POP

ஏனெனில்

**POP**

சீனு கிராஸில் தயாரித்த அல்வா, ஜெல்லிகள்
சுவைமிக்கது
ருசியுள்ளது
அது புதி  து
அது
சைவ ஆகாரம்
பவுடராகவும் கிடைக்கிறது



விநியோகஸ்தர்கள்
மெஸர்ஸ் இண்டோகெம் பிரைவேட் லிமிடெட்
பம்பாய் - கலகத்தா - டில்லி - சென்னை - நாகபுரி
செகந்தராபாத் - கான்பூர் - அகமதாபாத்

தயாரிப்பவர்கள்:
மெஸர்ஸ் செல்லுலோஸ் ப்ராடக்ட்ஸ் ஆஃப் இந்தியா லிமிடெட

எல்லா பிரபல] கடைகளிலும் கிடைக்கும்


பனாமா
கொள்ளைக்
கன்னி...
PANAMA
MADE IN INDIA
PANAMA
MADE IN INDIA
PANAMA
MADE IN INDIA
பனாமா பிளேடுகள் ஷேவிங் செய்து கொள்வதை
பொக்கிஷமாகப் போற்றும் வகையில் இன்பமயமாக
ஷேவ் செய்கின்றன. நீங்கள் ஆனந்தமான அருமை ஷேவ்
பெற அச்சாரமளிக்கின்றன.

னூர்?'' ஆச்சரியமும் கேலியுமாகக் கேட்டார் சங்கரராம்.

''கல்யாணத்துக்குச் சாமான் வாங்கின கடன் அடைபட்டுப் போய் இரண்டு மாச மாகப் போவுதுங்களே...''

''கடன் அடைபட்டுப் போச்சா? யார் கொடுத்தது பணம்?''

''எனக்குத் தெரியாதுங்க. முதலாளி சொல்லச் சொன்னதை இங்கிட்டு வந்து சொன்னேன். நான் வரட்டுங்களா?''

''ம்...'' என்று தலையை ஆட்டிவிட்டு உள்ளே போனார் சங்கரராம்.

''கேட்டீர்களா அதிசயத்தை! எவர்சில்வர் கடையில் வாங்கியிருந்த பாத்திரத்துக்குக் கொடுக்க வேண்டிய ஐந்நூறு ரூபாயையும் சுசீலா மாதா மாதம் அனுப்பி அடைத்து விட்டாளாம். கடைக்காரர் பாபுவிடம் சொன்னாராம்...'' என்றாள் எதிரே வந்த அலமு.

''இப்போ பாபு எங்கே?''

''தபாலாபீசுக்குப் போயிருக்கிறான். நீங்க தான் அந்தப் பணத்தை அவளுக்கே திருப்பி அனுப்பிவிடும்படி சொன்னீர்களே!'' என்றாள் அலமு.

சிலையாக நின்று கொண்டிருந்தார் சங்கரராம்.

''ரூபாய் கிடைத்ததா?''

''இல்லே?'' உதட்டைப் பிதுக்கினார் அவர்.

''அப்போ கல்லூரிக்குப் பீஸ் எப்படிக் கட்டுவது?''

''பார்க்கலாம்...'' என்றவர் சோர்வுடன் நாற்காலியில் சாய்ந்து விட்டார்.

தபால்காரர் கொடுத்து விட்டுப் போன கடிதத்தை வாங்கி வந்து தன் கணவரிடம் கொடுத்தாள் அலமு.

பிரித்துப் படித்தார் சங்கரராம்.

அன்புள்ள அப்பா அவர்களுக்கு,

சுசீலா அநேக நமஸ்காரம். நான் பாபுவுக்குக் கல்லூரி பீஸ் கட்டுவதற்காக அனுப்பிய ரூபாய்களைப் பாபு இன்று எனக்கே திருப்பி அனுப்பி விட்டான். நீங்கள்தாம் திருப்பி அனுப்பச் சொன்னீர்களாமே! தங்களுக்கு என்மேல் கோபம் ஏற்பட்டிருப்பது நியாயம்தான். கல்யாணத்துக்கு முன் வேலைக்குப் போக மறுத்த நான் கல்யாணத்துக்குப் பிறகு வேலைக்குப் போக முற்பட்டது தங்களுக்கு ஆச்சரியமாக இருக்கும். அதற்குக் காரணம் ....

திருமணத்துக்கு முன்பு பெண்கள் வேலைக்குப் போய்ச் சம்பாதித்தால் குடும்பத்தின் பற்றாக்குறையும் நீங்கும். அதே சமயம் அந்தப் பெண்ணின் திருமணத்துக்கும் சேமித்து வர முடியும் என்று பலப்பல பெற்றோர்கள் நினைப்பது போலத்தான் தாங்களும் நினைத்தீர்கள். அப்படிப் பெற்றோர்களால் வேலைக்கு அனுப்பப்பட்ட பெண்கள் பலரை நான் தோழிகளாக அடைந்திருந்தேன். அவர்களில் ஒருவருக்குக்கூட இன்னமும் திருமணம் நடைபெறவில்லை. எல்லோருக்கும் இருபத்தைந்து, இருபத்தெட்டு என்று வயது மட்டும் ஏறிக் கொண்டிருக்கின்றன. வாழ வேண்டிய வயதில் வாழ முடியாமல், வெறும் சம்பாதிக்கும் இயந்திரங்களாகி விட்டிருக்கும் அந்தத் தோழிகளின் வரிசையில் நானும் ஒருத்தியாக விரும்பவில்லை. அதனால்தான் நான் அப்போது வேலைக்குச் செல்ல மறுத்தேன்.

வேலைக்குப் போகிற பெண்ணுக்குக் கல்யாணம் செய்து விட்டால் ஒரு கணிசமான வருவாய் நின்று போய்விடுமே என்று என்னும் பெற்றோர்களுள் நீங்களும் ஒருவராக ஆகிவிடுவீர்களோ என்று நான் அஞ்சியது தவறா? சொல்லுங்கள் அப்பா.

என் கல்யாணத்துக்காகத் தாங்கள் பட்ட சிரமங்களை — வாங்கிய கடன்களை என்னால் எப்படி அலட்சியமாகக் கருதி ஒதுக்கி விட முடியும்? சிரமப்பட்டது வேண்டுமானால் உங்களுடைய பெற்ற கடமையாக இருக்கலாம். ஆனால் சக்திக்கு மீறி உங்களைக் கடன் வாங்க வைத்தது ஓர் இரக்கமற்ற சம்பிரதாயத்தினால் ஏற்பட்டது அல்லவா? அதை நானே போக்கி விடத் தீர்மானித்தேன்.

ஆண்டவன் எனக்கு ஒரு கருணைப் பெட்டகத்தைக் கணவனாகத் தந்தான். வேலைக்குப் போகத் தொடங்கினேன். என் குடியிருந்த கோயிலுக்கு என்னால் ஏற்பட்ட இன்னல்களை நானே நீக்கிவிடுகிற முயற்சியில் ஈடுபட்டேன். ஓரளவுக்கு நீக்கியும் வருகிறேன். அவை முடிவுக் கட்டத்தை அடைந்து விட்டதால் பாபுவின் படிப்புக்கு உதவ முற்பட்டேன்.

பாபுவும் முரளியும் படிப்பை முடித்துக் கொண்டு சம்பாதிக்கத் தொடங்குகிற வரையில் இந்த என் உதவிகளைத் தாங்கள் ஏற்றுக் கொள்ள வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறேன். 'பெண்களும் பெற்றவர்களுக்குச் செய்யக் கடமைப்பட்டவர்கள் தான். ஆனால் அதற்காக அவர்கள் தங்களையோ — தங்களுடைய இளமையையோ அழித்துக் கொள்ள வேண்டியதில்லை' என்கிற எனது கொள்கையைத் தாங்களும் ஒப்புக் கொள்வீர்கள் என்று நம்புகிறேன்.

பாபுவின் கல்லூரிக்கு நானே இங்கிருந்தபடியே பீஸ் அனுப்பி விட்டேன். தொடர்ந்து அப்படியே அனுப்பி விடுகிறேன். அது தவறு என்றால் அதற்காகத் தாங்கள் என்னை மன்னித்து விடுங்கள்.

அன்புள்ள, **சுசீலா**''

கடிதத்தை மடித்தார் சங்கரராம்.

''என்ன எழுதியிருக்கிறாள்?'' என்று கேட்டாள் அலமு.

கடிதத்தை மௌனமாக மனைவியிடம் கொடுத்து விட்டுத் தம் கண்களைத் துடைத்துக்கொண்டார் சங்கரராம்.

---

## ஒரு நாள் - பத்துக் கோடி

கல்கத்தா நகரில் கலவரங்கள் காரணமாக அடிக்கடி கடைகளும் தொழிற்சாலைகளும் மூடப்படுகின்றன அல்லவா? ஒரு நாள் அவை மூடப்படுவதால் 10 கோடி ரூபாய் நஷ்டம் ஏற்படுகிறதாம்! வியாபாரம், உற்பத்தி ஆகியவை குறைவதாலும் தொழிலாளர்களுக்குச் சம்பளம் கிடைக்காததாலும் இவ்வளவு நஷ்டம்! ஆதாரம்: 'ஹிந்துஸ்தான் டைம்ஸ்'

தகவல்: ''ஸரோ''

---

# எல்லா உறுப்புகளும் ஒன்றாகத் தோன்றலாம்

## ஆனால் போலி உறுப்புகள் உங்கள் உயிருக்கே ஆபத்தானவை!

**CD-TVS கம்பெனி மட்டுமே ..புல் ஏர்/ஏர் அஸிஸ்ட் பிரேக்குகளின் உண்மையான உறுப்புகளைத் தயாரிக்கிறது.**

கம்ப்ரெஸ்ஸரை உதாரணமாக எடுத்துக்கொள்வோம்.

ஏர்பிரேக் பொருத்தப் பட்டுள்ள வண்டிக்கு இது ஓர் இன்றியமையாத உறுப்பு. இது உண்டாக்கும் காற்றழுத்தமே, வண்டியின் பிரேக்கினை இயக்குகிறது இந்த கம்ப்ரெஸ்ஸர்கள் ஒன்று அல்லது இரண்டு சிலிண்டர் வடிவங்களில் தயாராகின்றன.

சாலை பாதுகாப்பைக் கெடுக்க ஒரே ஒரு போலி உறுப்பு போதும். போலி உறுப்புகள் உயிருக்கு அபாயம் ஏற்படுத்தலாம்.

எப்போதும் CD-TVS தயாரிக்கும் அசல் உறுப்புகளையே கேட்டு வாங்குங்கள்.



CD TVS

சுந்தரம்-க்ளேட்டன் லிமிடெட
(டிவிஎஸ் தொகுப்பைச் சேர்ந்த நிறுவனங்களில் ஒன்று)
பாடி, சென்னை-50



வண்டிகளின் விநியோகஸ்தர்களிடமும் எங்களுடைய பிராந்திய விநியோகஸ்தர்களிடமும் கிடைக்கிறது.

தமிழ்நாடு, மைசூர், கேரளா, ஆந்திரப்பிரதேசம், பாண்டிச்சேரி மற்றும் கோவா பிரதேசங்களுக்கு விநியோகஸ்தர்கள் :

**மதராஸ் ஆட்டோ சர்வீஸ் ப்ரைவேட் லிமிடெட்**
**31, மவுண்ட் ரோடு, சென்னை - 6**

**அ**ந்த ஆங்கிலப் படத்துக்கு ஐந்தே முக் காலிலிருந்து கால் கடுக்க நின்றதுதான் மிச்சம்; டிக்கெட் கிடைக்கவில்லை. 'இன்னொரு நாள் பார்ப்போம்' என்று எண்ணிக் கொண்டே தியேட்டரை விட்டகன்று வெளியே வந்தேன். என்னை அறியாமல் என் பார்வை அங்கிருந்த கேப்டீரியாவில் பதிந்தது. சற்று வயிற்றுக்கு எதையாவது போட்டு வைக்கலாம் என்று உள்ளே நுழைந்தேன்.

நான் உள்ளே நுழைவதற்கும் கௌண்டரில் உட்கார்ந்திருப்பவர், "நாசமாய்ப் போச்சு...இன்னிக்கும் வரும் போலிருக்கே!" என்று அலுத்துக் கொள்ளுவதற்கும் சரியாக இருந்தது. 'என்னய்யா இது... உள்ளே நுழைவதற்குள் என்னை இப்படி வாழ்த்துகிறீரே?" என்று வாய் கேட்க யோசிக்கும் போதே அவர் என்னைப் பார்த்து ஒரு மாதிரியாகச் சிரித்தார்.

"ஹி...ஹி... மழை வரும் போலிருக்கு ஸார்.... அதைச் சொன்னேன் ஸார்.... வாங்க, வாங்க! என்ன வேணும் சார், உங்களுக்கு?"



# பட்டாணி சுண்டல் பத்து பைசா!

• நிர்மல் •



கௌண்டருக்கு வந்தேன். அதற்குள் பலத்த காற்று; இலேசான இடி; பளிச்சென மின்னல்; தடதடவென மழை.

ஒரு சிலர் தரதர வெனச் சைக்கிள்களுடன் ஓடி வந்து கேப்டீரியாவுக்குள் தஞ்சம் புகுந்தனர். "ஏழெட்டு நாட்களாக இதே ரோதனை சார்...மணி ஆறேகால் ஆகியும் போதும். நல்ல பாழாய்ப் போன மழை ஸார்.... வாங்க, ஸார்.... இப்படி உள்ளே வந்து நில்லுங்கள். பரவாயில்லே. ஸார்... என்ன வேணும், உங்களுக்கு?"

"ஸார்! முதலில் எனக்கு ஒரு போண்டா, ஒரு டீ வேணும். டோக்கன் கொடுங்கள்" என்றேன், கௌண்டரில் ஒரு ரூபாயை நீட்டி.

பதில் பேசாமல் நான் கேட்டவை என்னிடம் வந்தன. போண்டாவைக் கையில் ஏந்திக் கொண்டு ஒரு தனி இடம் வந்து அமர்ந்த போது இன்னும் ஒரு சிலர் தடதடவென ஓட்டத்துடன் கேப்டீரியா வாசலுக்குள் வந்து நின்றனர். 'டப்' என்று ஒரு பெரிய தகர டப்பாவின் ஓசை கேட்டது. நிமிர்ந்து பார்த்தேன். கடைசியாக வந்த ஆள் கையில் துணி போட்டு மூடி மறைக்கப்பட்ட சிறு கூடை ஒன்றுடன் இங்கே வந்து விட்டான். சட்டென்று அந்த ஆளை முதல் நாள் பஸ் ஒன்றில் பார்த்த ஞாபகம் வந்தது. அவன் ஒரு கடற்கரை சுண்டல் வியாபாரி. அட, பாவமே! இன்றைய மழையில் அவனது வியாபாரம் அவ்வளவுதான்!

போண்டாவைத் தின்றுவிட்டுத் தேநீருக்காகக் கூப்பனைக் கொடுத்துச் சற்று நின்றேன்.

வெளியே மழை அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது. பெரும் காற்று. பளீர், பளீர் என மின்னல். கேப்டீரியா வாசல் முழுவதும் ஒரே ஜனக் கூட்டம். சுண்டல் வியாபாரி இப்போது உள்ளே முண்டியேறிக் கொண்டிருந்தான்.

"யோவ்! உனக்குக் கண் தெரியலே! புதுப் பேண்ட் மேலே உன் புட்டுக் கூடையைக் கொண்டு வந்து இடிக்கிறியே...!" என்று கத்தினான் ஒருவன்.

"தெரியாமல் பட்டுட்டேனுங்க....!" என்று சுண்டல்காரன் மன்னிப்புடன் தகர டின்னை நகர்த்தினான்.

"யோவ்.... வாய்யா சார்! என்று ஆள்யா நீ?" என்றான் இன்னோர் இளைஞன்.

"இது என்னய்யா, இந்த புள்ளே....?"

"ஏக ரோதனைங்க...."

"பத்தும் கூடையிலே......"

''பட்டாணி கண்டலுங்க......''

''பெரிய பிஸினஸ்மேன்'' என்று யாரோ ஓர் இளவட்டம் சொல்லிச் சிரித்தது. அவனுக்கு 'ஆமாம்' போடுவது போல் நான்கைந்து பேர்களும் கூடவே சிரித்தார்கள்.

தேநீரைக் குடித்துவிட்டு எழுந்தேன். எழுந்தவன் மீண்டும் அதே நாற்காலியில் அமர்ந்தேன். வெளியில் எங்கே, எப்படிப் போவது ? சரியான மழை......

போயிற்று ! இனி சினிமா அவ்வளவு தான் ! சீக்கிரம் வீடு திரும்பினால் போதும் ! அந்தப் பாழாய்ப் போன பூந்தமல்லி பஸ்ஸை நினைத்தாலே சங்கடமாயிருக்கிறது ! மழை என்றும் பாராமல் பி.ஆர். அண்ட் ஸன்ஸ் பஸ் ஸ்டாண்டுக்கு ஓடிப் போய்விடலாமா என்ற எண்ணத்தில் ஒரு பெருத்த இடியாக விழுந்தது. உண்மையிலேயே வெளியே விழுந்த ஓர் இடி.

'' ஐயோ, அர்ச்சுனா....'' என்று மூலையிலிருந்து ஒரு குரல் கேட்டது. போண்டாவைத் தின்று கொண்டே ஒரு கிழவன் அப்படிக் கூறியிருக்கிறான். விநோதமாக இருந்தது குரல்.

இனி மழை நிற்கும் வரையில் போரடிக்க வேண்டும். எப்படி, எங்கே, யாரிடம் என்று சொல்லத் தேவையில்லை. சுற்றிலுமுள்ளவர்களைப் பார்த்துக் கொண்டே பொழுதைப் போக்கியாக வேண்டும். அந்தக் கண்டல் காரனை ஒரு வயதானவர் விசாரித்துக் கொண்டிருந்தார். என்னை முந்திவிட்டார் அவர். யார் பேசினால் என்ன? எல்லாம் ஒன்றுதான்.

'' இது எவ்வளவு அப்பா?'' என்றார் பெரியவர்.

'' கண்டல் பத்து பைசாங்க....''

''அது....? கை முறுக்கு....?''

''அந்த பைசாவுக்கும் இருக்கு. பத்து பைசாவுக்கும் இருக்குங்க....!''

''இது எவ்வளவு ரூபாய்ச் சரக்கு ?''

''மூணே முக்கால் ரூபாய்ச் சரக்குங்க !''

''கண்டல் தினசரி போடறதா ?''

''ஆமாங்க, கண்டல் தினசரி போடறது தானுங்க. முறுக்கு இரண்டு மூன்று நாட்களுக்கு ஒரு தடவை தயார் பண்ணறது.''

''இன்னிக்கு ஒரே அடை மழை பெய்யுதே, அப்பா ! இனி எப்ப நீ பீச்சுக்குப் போய் வியாபாரம் செய்யறதாம்.....?''

''அதை நினைச்சாலே வயிறு பகீர்னு ஆகுதுங்க. நான் இன்னிக்கு இந்த வழியிலே வர வேண்டியதே இல்லீங்க.... !''

கண்டல்காரன் ஒரு கைப் பிடியாகச் கண்டல் எடுத்துப் பெரியவரிடம் நீட்டினான்.

பெரியவர் முதலில் சிரிப்புடன் மறுத்து விட்டார்.

''வேணாம்பா... வேணாம்....!''

''நீங்க என்னங்க ஒண்ணு... சும்மா 'டேஸ்ட்' பண்ணிப் பாருங்கய்யா... நான் இங்கே வியாபாரமா பண்ணப் போறேன் ?'' என்று கண்டல்காரன் பெரியவரைப் பேச விடாமல் கண்டலை அவர் கையில் திணித்தான்.

இரண்டு மூன்று பிடி உள்ளே போனதும் பெரியவர் பாராட்டினார்.



# ஓட்டு வேட்டுகள்

கே.வி.முரளி



தலைவர் சொன்னார்: என் கட்சியை விரும்புவதற்குச் சிறந்த காரணம் சொல்பவருக்கு என் மோதிரத்தைத் தருவேன். பலர் பல சொன்னார்கள். ஆனால் பரிசைப் பெற்றவன் சொன்னது:

''எனக்கு இப்போது அந்த மோதிரம் வேண்டும்!''

ஓர் அமைச்சரிடம் ஒருவர் கூறினார்: ''பணம் சம்பாதிப்பதற்கு ஆயிரம் வழிகள் உள்ளன. ஆனால் நேர்மையான வழி ஒன்றே ஒன்றுதான் உள்ளது.''

''அது என்ன?'' என்றார் மந்திரி.

அவர் கூறினார்: ''உங்களுக்கு அது தெரியாதென்று நான் நிச்சயமாக எதிர்பார்த்தேன்!''



ஒரு பழமை அரசியல் வாதி கூறினார்: ''அரசியலிலிருந்து விலகுவது நல்லது என்று விலகிவிட்டேன்.''

''யாருக்கு நல்லதென்று?''



வோட்டுக் கேட்க வந்த வேட்பாளரிடம் தொகுதியைச் சேர்ந்த ஒரு விவசாயி மிகுச் சாமர்த்தியமாகச் சொன்னான்: ''ஐந்தே வருடங்களில் ரொம்பவும் மாறிவிட்டிருக்கிறீர்களே!''

''நல்லாத்தாம்பா இருக்கு. யாரு தயார் செய்யறது? நீயேவா ?''

''நாங்க நாலு பேரு வியாபாரமுங்க. எல்லாருக்கும் பொதுவா எங்க அத்தையம்மா பண்ணிக் கொடுக்குதுங்க...இதுக்கு முன்னாலே மதுரையிலே சொக்கிக் குளத்திலே இருந்தோமுங்க...'' என்றான்.

பெரியவரும் கண்டல்காரனும் இப்போது ஆறஅமர பேசிக் கொண்டிருந்தார்கள். சுற்று முற்றும் பார்த்தேன். எதிரே ஒரு ரேஸ் பிரியர். பெங்களூர் ரேஸ் ஒன்றுக்காக ஏதோ மனத்துக்குள் பேசிக் கொள்கிறார். 'ஒரிஜினல் வேல்' புத்தகம் ஒன்று கீழே விழுகிறது காற்றில். 'கண்டல்' அதை எடுத்துக் கொடுத்தது அவரிடம்.

''தேங்க் யூ !'' என்கிறார் ரேஸ்பிரியர்.

அவரைப் பாராமலேயே என்னைப் பார்த்துச் சொல்கிறான்.

'' ஸார் ! நிச்சயம் நாளைக்கு டெர்பியில் 'ராக் ஹேவன்' அடிக்கிறது ஸார்... நீங்களே பாருங்கள் !''

ரேஸ் பிரியர் திடீரென்று கண்டல்காரனை ஆர்வத்துடன் பார்க்கிறார். 'இங்கே வா' என்று அவனைக் கை ஜாடையாக அழைக்கிறார்.

'' நிச்சயமாகத் தெரியுமா? ஏதாவது 'விசேஷத் தகவலா...?'' என்று கேட்கிறார் மெல்லிய குரலில்.

''ஆமாங்க.... நம்ப தம்பி பெங்களூர் ஸைட் பாய்ங்க... ஜாக்கி 'தகவல்' கொடுத்திருக்குங்க....''

அடுத்த சில விநாடிகளில் அந்த மேஜையைச் சுற்றி நான்கைந்து ரேஸ் 'அபிமானி'கள் சூழ்ந்து கொள்கின்றனர்.

திடீரென்று முதலில் பேசிய ரேஸ்காரர், '' இந்தா, ஒரு ரெண்டு பொட்டலம் கண்டல் இப்படிப் போடு. மழை நிக்கிற வரையில் பொழுது போக வேண்டும்!'' என்கிறார், கண்டல்காரனிடம். அவன் தயங்குகிறான்.

''என்னய்யா, பொட்டலம் எடேன் !''

''இல்லீங்க... இதுவே ஒரு ஹோட்டலுங்க.... நான் இங்கே விக்கலாமோ, விக்கப்படாதுங்களோ.....?''

ரேஸ் பிரியர் திடீரென்று கௌண்டரில் இருப்பவரை அர்த்தபுஷ்டியுடன் பார்க்கிறார். கௌண்டரில் இருப்பவர் ஒன்றும் ஆட்சேபித்ததாகத் தோன்றவில்லை. சட்டென்று ரேஸ் பிரியரே எழுந்து வந்து இரண்டு கண்டல் பொட்டலங்களை எடுத்துக் கொள்கிறார்.

''எவ்வளவுய்யா, காசு தரணும்?''

''இருபது பைசா சார்.......!''

''இந்தா நாலணா... அஞ்சு பைசா பாக்கித் தரவேணும்... நீயே வைச்சுக்கோ!... ஆமா, நிச்சயமாச் சொல்லு. ராக்ஹேவன் 'வின்' பண்ணுமா?...தகவலை நம்பலாமா?''

''கண்டிப்பா, வெற்றி பெறுகிறது ஸார்! இந்தாங்க, அஞ்சு பைசா !''

''வேணாம்யா ! நீயே வைச்சுக்கோ!''

''இல்லே ஸார்.....!''

ரேஸ் பிரியர் கண்டலை மென்று கொண்டே ரேஸ் புத்தகத்தில் இறங்கி விட்டார்.















நான்கைந்து இளவட்டங்கள் இப்போது கண்டலேத் தீவிரமாகப் பார்க்கிறார்கள்.

''என்ன ஸார், 'மெக்கனஸ் கோல்ட்' பார்த்துட்டு வர்றீங்க போலிருக்கே, ஸார்!'' என்கிறான் கண்டல்காரன்.

'இவனுடன் என்ன பேச்சு' என்ற பாவனையில் ஓரிருவர் முகத்தைத் திருப்பிக் கொள்கின்றனர்.

''என்ன 'காமிரா' ஸார்! பிரமாதம் போங்கள்...அப்படியே குதிரை மேலே போற மாதிரியே படம் பிடிச்சிருக்கான், ஸார்!''

இன்னொரு நான்கைந்து பதினைந்து வயதுச் சிறுவர்கள் இவனைச் சூழ்கின்றனர்.

'' பார்த்துட்டியாய்யா....?''

''பார்த்துட்டேன், தம்பி! படம் பிரமாதம்! சும்மா ஒரு காட்சியிலே... அதை விடு...ரெண்டு பேரும் நீச்சல் அடிப்பாங்க... அவ...வில்லன்காரி கொலே பண்ண வருவா நீச்சல் பண்ணிக்கிட்டே....''

''நிஜம்மாவா?''

''நிஜம்மா தாம்பா....''

''எங்கேப்பா.... படம் பார்க்கணும்னு டிக்கெட்டே கிடைக்க மாட்டேங்குதே!''

''கவலேப்படாதே, தம்பி.... மாட்டினி காட்சிக்கு மட்டும் என்னுலே டிக்கெட் வாங்கித் தர முடியும். என் மச்சான் இருக்கான்... நாளைக்கு வாங்க... என்னைப் பாருங்க...''

''அங்கேகூடச் கண்டல் விப்பியா?'' என்கிறான் ஒரு சிறுவன்.

கொல்லென்று சிரிப்பு எழுகிறது. கண்டல்காரனும் சிரிப்பில் கலந்து கொள்கிறான். குத்தலாகக் கேட்ட பையனுக்கு என்ன தோன்றியதோ, ஒரு பத்து பைசாவை நீட்டிக் கண்டல் பொட்டலம் கேட்கிறான்.

இப்போது முதலில் அவனைக் குசலம் விசாரித்த பெரியவர் கேட்கிறார்.

'' இந்தா! ஒரு நாலு பொட்டலம் பெரிசாக் கட்டிக் கொடு. இந்தா, துட்டு!''

''சரிங்க!''

குதிரைப் பந்தயத்தைப் பற்றி விவாதித்துக் கொண்டிருந்தவர்களில் இருவர் விரைந்தனர். ''நாலு பொட்டலம் தனியாகக் கட்டுப்பா!'' என்றனர்.

பொட்டலங்களைக் கட்டிக் கொண்டே உள்ளே மகனும் தந்தையுமாக உட்கார்ந்திருக்கும் இருவரை நெருங்குகிறான் கண்டல்காரன்.

இது என்ன அதிசயம்! உள்ளே போய்ச் கண்டல் விநியோகம் செய்து விடுவானே இவன்! தந்தையும் மகனும் ஏதோ கல்லூரி அட்மிஷனைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தது என் காதில் பட்டது. இவனுக்கென்ன அதில் அக்கறை!

''ஸார்! நீங்க ஆர். எஸ். வி. கல்லூரியிலேதானே, ஸார், இடம் தேடறீங்க?....'' என்று கண்டல்காரன் ஆரம்பித்தான்.

''ஆமாம்! உனக்கெனப்பா, அந்தக் கஷ்ட காலம்?'' என்று தந்தை அலுத்துக் கொண்டார்.

'' அதுக்கில்லீங்க, ஸார்! நீங்க தப்பா நினைக்கக் கூடாதுங்க...எல்லாக் கல்லூரியிலேயும் மாறுதல் வாங்கத்தானுங்க செய்வாங்க.''

''ஸார் இல்லேன்னுங்க! நான் தருவ தற்குத் தயார்.... ஸார் [illegible]....''

''நீங்க விடுங்க... நாளைக்கே போய் அங்கே லேபரட்டரி அட்டெண்டர் ரங்கையாவைப் புடியுங்க..... அவன் என் சித்தப்பா மவனுங்க...... அருணாசலம் அனுப்பிச்சான்னு சொல்லி வையுங்க. நிச்சயம் ஏதாவது வாங்கிக்கிட்டுச் செய்வானுங்க. நீங்க அவ்வளவு நேரமாப் பேசிக்கிட்டிருந்ததைக் கேட்டுக்கிட்டே இருந்தேனுங்க. எனக்கு மனசே கேட்கல்லே.... ஏதோ பையன் நல்லாப் படிச்சு முன்னேறணும்!''

அவ்வளவுதான்! அதற்குப் பின்னல் கண்டல்காரனைச் சுற்றி, 'ஸேடலைட்' போல வந்து கொண்டிருந்தார் பையனின் தந்தை. பேச்சின் முடிவில் பையனும், தந்தையுமாக ஆளுக்கு இரு கண்டல் பொட்டலங்கள் வாங்கித் தின்றனர்.

இப்போது அநேகமாக அங்கிருந்த அனைவருமே அவனிடம் குறைந்தது ஒரு கண்டல் பொட்டலமாவது வாங்கித் தின்று விட்டனர். நானும், கேப்டீரியா ஊழியர்கள் மட்டுமே அவன் கண்டலே இதுவரையில் வாங்கவில்லே. அதற்கும் முத்தாய்ப்பு வைப்பது போல் ஆகி விட்டது. ஊழியர்கள் கண்டலேப் பற்றிச் சில வார்த்தைகள் பேசத் தொடங்கினர்.

''நிஜமாத்தான் சொல்றேன்! பட்டாணி கண்டல் வாசனேயே தனி வாசனே!''

''ரொம்ப சரி!''

''நாளைக்கு நம்ம 'மெனு'வில் போடலாமா?'' என்றான் ஒருவன்.

அதன்பின் ஒரே சிரிப்பு. கண்டல்காரன் இப்போது அவர்கள் அனைவரையும் தயக்கத்துடன் பார்த்தான்.

கௌண்டரில் இருப்பவர் என்னைப் பார்த்துச் சிரித்தார். சரேலென்று கண்டல்காரன் கையில் இரு பொட்டலங்களுடன் கௌண்டர் அருகே சென்றான்.

''என்னய்யா! எங்ககிட்டேயே விற்க வர்றியா?'' என்று கேலியாகக் கேட்டார் கௌண்டரில் இருந்தவர்.

சற்றுப் பயந்து சமாளித்துக் கொண்டான் கண்டல்காரன்.

''இல்லீங்க... இல்லீங்க.... நீங்க தப்பா நினைக்காதீங்க. சும்மா 'டேஸ்ட்' பண்ணுங்க ஸார்.... சாப்பிட்டுப் பாருங்க ஸார்.... எனக்காக.....!''

இரண்டு பொட்டலங்களே அவரிடம் நீட்டியபடியே என்னைப் பார்த்தான். நான் சிரிப்பை அடக்க முடியாமல் எழுந்தேன். நல்ல வேளே வெளியே மழை சற்று ஓயவே சரேலென்று வெளியே வந்து விட்டேன்.

கொஞ்ச தூரம் இலேசான தூறலில் 'விர்'ரென்று நடந்துகொண்டே இருந்தேன். ''ஸார் ஸார்!'' என்று பின்னுலேயே குரல் கொடுத்துக் கொண்டு கண்டல்காரன் ஓடி வந்தான்.

''ஒரு பொட்டலத்தை நீங்க எடுத்துக்குங்க, ஸார்......!''

''வேணும்ப்பா... நீயே எடுத்துக்க அதை. இல்லாக்காட்டி இதோ பி. ஆர். அண்ட் ஸன்ஸ் பஸ் ஸ்டாண்டிலே எங்கேயாவது வித்துடு'' என்று சொல்லிக் கொண்டே மேலே நடந்தேன்.

''ஸார்! தயவுசெஞ்சு எனக்காக எடுத்துக்குங்க, ஸார்! இன்னிக்கு என் கண்டலே [illegible]!''

ஜீவாமருதம்

அருணா

பாலப்ராஸ்

குழந்தைகள் டானிக்

ரக்தசோக்கா

சிறந்த ரத்தசுத்தி ஔஷதம்

சயவனப்ராசனம்

இருமலுக்கு

ஆயுர்வேதாஸ்ரமம்

பிரைவேட் லிமிடெட்

மூல நோயை

முற்றவிடாமல்

நம்பிக்கையான

ஹெடன்ஸா

உபயோகித்து

நிவாரணம்

அடையுங்கள்;

— ரண

சிகிச்சையையும்

தடுங்கள்

# அடிக்கடி சிறுநீர் கழிப்பது

அடிக்கடி சிறுநீர் கழிப்பது ஒரு கொடிய வியாதி. அது, பாதிக்கப்பட்டவரை நாளுக்கு நாள் மரணப் பாதையை நோக்கி இட்டுச் செல்லும்.

இவ்வியாதியால் அல்லல்படுவோருக்கு அதிக தாகம், பசி, உடல் பூராவும் வலி ஏற்படும்; உடலால் உழைக்கவோ, அல்லது மூளையை உபயோகப்படுத்தி வேலை செய்யவோ உற்சாகமிராது. நாளுக்கு நாள் உடல் எடை குறையும். உடலில் ஒருவித நமைச்சல் ஏற்படும், சரும வியாதியால் அவதியுறுவர். கல்லீரல் மந்தமாகி, மூத்திரக் காய்கள் பலவீனமடைந்து, சரிவர இயங்காது. இந்த வியாதியை உடனடியாகக் கவனிக்காவிடில், கீல் வாயு, பார்வைக் குறைவு, தூக்கமின்மை, அதிகக் களைப்பு, உடலில் கட்டிகள் ஏற்படுவது போன்றவைகளால் கஷ்டப்பட நேரிடும்.

பழையகாலத்திலிருந்து அனுசரிக்கப்பட்ட யூனனி முறைப்படி அபூர்வ மூலிகைகளினால் தயாரிக்கப்பட்ட "யூரிடோன்" மாத்திரைகள் இந்தக் கொடிய வியாதியை குணப்படுத்தும்.

"யூரிடோன்" மாத்திரைகளை உபயோகப்படுத்தி, ஆயிரக்கணக்கானவர்கள் பயன் அடைந்துள்ளனர். அடிக்கடி சிறுநீர் போவது கட்டுப்படுத்தப்பட்டு, ஒரு சில நாட்களிலேயே வியாதியின் அல்லல்களிலிருந்து நிவாரணம் அடைந்து மன நிம்மதியைப் பெறுகின்றனர்.

"யூரிடோன்" சிக்கனமானது, பத்திரமானது, எளிதில் எடுத்துச் செல்லக் கூடியது. உணவு உட்கொள்ளுவதில் விசேஷ கட்டுப்பாடுகள் ஏதும் இல்லை. சாதாரண உடல்நலமுள்ளவர்களும் நல்ல ஆரோக்கியமாக இருக்க இதை உட்கொள்ளலாம். விவரங்கள் அடங்கிய இலவச பிரசுரத்துக்கு எழுதவும்.

40 மாத்திரைகள் கொண்ட பாட்டில் விலை ரூ. 10. பாக்கிங் தபால் செலவு ரூ. 2 தனி.

ஒரே தடவையில் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட பாட்டில்களுக்கு ஆர்டர் அனுப்புபவர்களுக்கு பாக்கிங் மற்றும் தபால் செலவு இலவசம்.

**Barrys Remedies Laboratories**

(K. L)

G. P. O BOX 874

CALCUTTA-1

# தவறான விவரத்தின்

## விளைவு என்ன தெரியுமா?

எச்சரிக்கை : தவறான வருமான விவரம் காட்டுதல்; வருமான வரி, சொத்து வரி, வெகுமதி வரிச் சட்டங்களின்படி கடுமையான தண்டனைக் குட்படுத்தக்கூரியது. இதற்கான அபராதம் குறிப்பிடாமல் விட்ட வருமானத்தை விடக் கூட அதிகமானதாக இருக்கலாம்.

வருமான வரிச் சட்டத்தின்படி வருமான வரி ஃபாரத்தில் காட்டாமல் விட்ட வருமானத்தைப் போன்றதொரு தொகையோ அல்லது அதைப் போன்ற இரு மடங்கோ அபராதமாகக் கட்ட வேண்டி வரலாம். இதைத் தவிர ஆறு மாதங்களுக்குக் குறையாமல் இரண்டு வருடங்கள் வரை கடும் சிறைத் தண்டனையும் விதிக்கப்படலாம்.

சரியான சொத்து விவரம் கொடுக்காமலிருத்தல், உள்ள சொத்தின் மதிப்பைக் குறைத்துக் காட்டுதல் ஆகியவை சொத்து வரிச் சட்டத்தின் படி கடும் தண்டனைக்குரியது. விவரம் காட்டாமல் விட்ட சொத்தின் மதிப்பு, அல்லது மதிப்பைக் குறைத்துக் காட்டியிருக்கும் சொத்தின் உண்மையான மதிப்புத் தொகைக்கொத்த தொகையை அபராதமாகக் கட்ட நேரலாம். உள்ள கடனை அதிகமாக்கிக் காட்டியிருந்தால், எவ்வளவு தொகை உபரியாகக் காட்டப்பட்டிருக்கிறதோ அவ்வளவு தொகையை அபராதமாகச் செலுத்த நேரலாம். இவ்வபராதம் நீங்கள் காட்டாமல் விட்ட சொத்தின் மதிப்பைவிட இரு மடங்காகக் கூட இருக்கலாம். இதைத் தவிர, ஆறு மாதத்திற்குக் குறையாமல் இரண்டு வருடங்கள் வரை கடும் சிறைத் தண்டனையும் விதிக்கப்படலாம்.

வெகுமதியைப் பற்றி சரியான விவரங்கள் கொடுக்காவிடில், அதற்கான வரியில் 20 சதவிகிதம் அல்லது அதைப்போன்று 1½ மடங்கு அதிகமான தொகை அபராதம் விதிக்கப்படும். இதைத் தவிர, ஒரு வருட காலம் வரையில் சாதாரண சிறைத் தண்டனையோ அல்லது 1000 ரூபாய் வரையில் அபராதமோ அல்லது இரண்டுமேயோ விதிக்கப்படலாம்.

**ஞாபகமிருக்கட்டும்**
**வருமான வரி**
**கட்டாமல் இருத்தல்**
**குற்றம்**

ஏற்கனவே காட்டியுள்ள வருமான விவரங்கள் சரியானதல்லவென்றால், சரியான விவரங்கள் அடங்கிய குறிப்பை இப்பொழுதும் அனுப்பி, தவறான வருமான விவரங்களினால் விளையும் தீமையைத் தவிர்க்கலாம்.

சென்ட்ரல் போர்டு ஆஃப் டைரக்ட் டாக்ஸஸ்
(டிபார்ட்மெண்ட் ஆஃப் ரெவின்யூ அண்ட் இன்ஷுரன்ஸ்) மினிஸ்ட்ரி ஆஃப் பைனான்ஸ்,
கவர்ன்மெண்ட் ஆஃப் இந்தியா.

davp 70/530

''ஸ்ஸ் ! தொந்தரவு பண்ணாதே ! என்னாலே உன் கண்டலை வாங்க முடியாது !''

''உங்களை யார் சார், வாங்கச் சொல்லுங்க...... சும்மா 'ப்ரீ'யாச் சாப்பிடுங்க, ஸார் !''

''உனக்கு ஒரு பத்து பைசா நஷ்டம் ஆகும்பா.... வேணும்.... ஏற்கனவேயே இன்னிக்கு மழையினாலே உன் தொழில் ரொம்ப 'டல்'லாக இருந்திருக்கும்... இல்லையா?'' என்று மெல்ல அவன் வாயைக் கிண்டினேன்.

''நீங்க ஒண்ணு ஸார்.... இன்னிக்கு நான் முதலிலே பயந்தது உண்மைதானுங்க..... ஆனால் வாஸ்தவமா இப்போ... இந்த மழை நேரத்திலே அந்த ஹோட்டல்லே வைச்சே முழு வியாபாரத்தையும் நடத்திப்பிட்டேனுங்க. மூணே முக்கால் ரூபா சரக்கு. ஐம்பது பொட்டலமா வித்து அஞ்சு ரூபா சம்பாரிச்சாச்சு சார்.....கடைசிப் பொட்டலம். உங்களுக்காகவே காபந்து பண்ணிக் கொண்டாறேன், ஸார் ......!''

''பொய் சொல்லாமல் சொல்.... அப்பத்தான் உன் கண்டலைத் தின்பேன்.... நிஜமாக ராக் ஹேவன் ஜெயிக்குமா டெர்பியிலே....''

''டெர்பியாவது, பர்பியாவது... நான் சும்மா கப்ஸா விட்டேன் ஸார்... எனக்குக் குதிரைப் பந்தயம் பத்தியே ஒண்ணும் தெரியாது....''

''மெக்கனஸ் கோல்டுக்கு மாட்டினி காட்சிக்கு மட்டும் உன்னாலே டிக்கெட் வாங்கித் தர முடியும். அப்படித்தானே....?''

''ஸார்... அது... வந்து....''

''ஆர். எஸ். வி. கல்லூரியிலே லாபரடரி அட்டெண்டர் ரங்கையா உன் சித்தப்பா மகனா...... ?''

''ஸார் ! நீங்க என்னை விடுங்க ஸார் ! அதெல்லாம் ஒரு வியாபார தந்திரம் ஸார். உங்களுக்குப் புரியாததல்ல ஸார்....'' என்றான் கண்டல்காரன், சிரிப்புடன்.

''கை முறுக்கை இன்னும் நாலு நாளைக்கு வச்சிக்கிட்டு விற்கலாம், ஸார் ! கண்டலை அந்த மாதிரி வைச்சுக்க முடியாதே, ஸார் ! ஊசிப் போயிடுமே ஸார்... இந்தாங்க, ஸார், கண்டல் பொட்டலம்... எனக்கு இதோ பஸ் வந்துடுச்சு ஸார்... நான் வரேன்...!''

பஸ் ஒன்றில் தாவி ஏறிப் போய்விட்டான் கண்டல்காரன். சந்தேகமே இல்லை. முதல் தரமான விற்பனையாளன்தான் இந்தக் கண்டல்காரன். அவன் கண்டலும் நிச்சயம் முதல் தரமாகத்தான் இருக்கும் என்ற எண்ணத்தில் பொட்டலத்தைப் பிரித்துப் பெரிதாக ஒரு பிடி அள்ளிப் போட்டுக் கொண்டேன் வாயில். அவ்வளவுதான் !

அடுத்தகணமே கொபுக்கென்று வாயைத் திறந்து அத்தனையையும் உமிழ்ந்தேன். ஒரே உப்பு. பின்னே கடைசியாக மீந்த கண்டல். உப்புக் கரிக்காமல் எப்படி இருக்குமாம்? என் நப்பாசையை முதலிலேயே தீர்த்துக் கொண்டிருக்கலாம். ஹூம்......

போய் எங்கேயாவது தண்ணீர், சோடா குடிக்கலாம் என்றால்.... அதோ பாறாய்ப் போன பூந்தமல்லி பஸ் !

''ஏறு, ஏறு.... சைதாப்பேட்டை...... மௌண்ட்..... பூந்தமல்லி.... ஏறு சார்...''

ஏறிவிட்டேன் பஸ்ஸில்.

# கொசுவோ கொசு!

தேர்தல் வேட்பாளர் : (வீட்டுக்கு வந்து) ஐயா ! 'விலைவாசியைக் குறைப்போம் ; ஏழைமையைப் போக்குவோம்' எங்களுக்கே நீங்க ஓட்டு போட வேணும் !

வீட்டுக்காரர் : உங்களாலே கொசுவையே ஒழிக்கவோ,குறைக்கவோ முடியலை. விலைவாசியை எங்கே குறைக்கப் போறீங்க?





''என்ன சார்! மந்திரி ஒரு மணிவரை ஒருநாள் விடாமல் எலெக்ஷன் மீட்டிங்குக்குப் போயிடறீங்களா ! அதிசயமாயிருக்கே !''

''வீட்டிலே கொசு உபத்திரவம் தாங்க முடியலிங்க!''



மாம்பலம் கொசு : ''நீ எந்தக் கட்சி ?''

சைதாப்பேட்டைக் கொசு : வரலாறு காணாத வகையிலே நம்மை வாழ வச்சிருக்காங்களே நாம நன்றி மறக்கலாமா ?''

''சே! என்ன கொசு ! குழந்தையிலிருந்து கிழவர் வரை ஒருத்தரையும் விடாமக் கடிக்குதே !''

''அது சோஷலிஸக் கொசு !''





ஒரு கொசு : ''இன்னைக்குச் சிவராத்திரி போலிருக்கே. ஒருத்தருமே தூங்கக் காணுமே !''

மற்றொரு கொசு : ''ஹி.... ஹி... ! கொசுராத்திரின்னு சொல்லு ! நாம தூங்கவிட்டால்தானே?''



''கூவத்திலே கலந்த சாக்கடையை யெல்லாம் அடைச்சுட்டதாலேதான் சென்னையில் கொசு உபத்திரவம் அதிகமாயிட்டதாமே ?''

''காரணம் என்னவோ தெரியாது : ஆனா வீட்டு வரியை உயர்த்தினதற்குப் பிரதியாக நமக்கு ஏதாவது தரவேண்டாமா ? அதுக்காகத்தான் கொசுக்களை ஏராளமா நம்ம வீடுகளுக்கு அனுப்பி வைச்சிருக்காங்கன்னு நினைக்கத் தோணுது !''

- பி. எஸ். எம்.

இந்தியாவின்
உன்னத
சோப்புகளைத்
தயாரிக்கும்

# டாடா

இப்போது
வழங்குவது




# மலபார்
# சந்தன
# சோப்

*மேனியழகை சோபிக்கச் செய்யும் பாரம்பரையான சோப்*

நீங்கள் மலபார் சந்தன சோப் உபயோகித்து நீராடுங்கள். இதன் மென்மையான தொட்டுணர்ச்சியால் உங்கள் சருமம் புத்துணர்வு பெற்றுக் கிளுகிளுக்கும். உங்கள் மேனி மாசு மறுவற்ற அழகு பெற்று மினுமினுக்கும்; ஓர் இன்ப உணர்ச்சி பொங்கி வரும். மலபார் சந்தன சோப், தூய்மையான சந்தன எண்ணெயிலிருந்து தயாரிக்கப் படுகிறது. இதை உபயோகித்தால், உங்கள் சருமம் இயற்கை எழிலுடன் ஒளி வீசும். இதன் மென்னயமான நறுமணமோ மணிக்கணக்கிலே நீடித்து நிலைக்கும்.

**டாடா தயாரிப்பு**



Bensons-4301 TM

# பெருந்துப் பாவேந்தர்

**கோமதி சுவாமிநாதன்**

**தலைவர் தங்கசாமி (தலைமை உரை)**



வரவேற்புச் சொல்லுகிறேன் வந்திருப்போர் அனைவருக்கும்
சிரம்தாழ்த்தி வணங்கிவிட்டுச் செப்புகிறேன் என் உரையை.

செக்கில் சுழன்ற ஜோடி. 'சீக்ரெட்' தெரியாது.
சீமான் வாங்கி விட்டார், செவலை மயிலை என்று.
வில்வண்டி பூட்டி வெகு அழகாய் உட்கார்ந்தார்
சொல்லாமல் மாடு சுற்றியே வந்ததென்று
கதை ஒன்று கேட்டதுண்டு. 'கன்வின்ஸ்' ஆனதில்லை.

நடைபாதை பஸ் ஸ்டாப்பில் ஒரு நண்பர் பழக்கமானார்.
படைவீரர் பாங்குடனே நடைபோட்டுக் காத்திருப்பார்
ஏனென்று கேட்டதற்கு எடுத்துரைத்தார் காரணத்தை.
தான் நின்றுவிட்டால் அங்கு பஸ் நிற்காதாம் !
ஒரு பர்லாங் முன்னே பின்னே ஓடத்தான் வேண்டுமாம்.



தேகப் பயிற்சிக்குத் தேவை வாய்ப்பளித்து
சோம்பலை விரட்டிச் சுறுசுறுப்பேற்றி
நண்பரை முன்னுக்கு முன்னே நடக்க வைக்கும்
நகரப் பேருந்துகளை நான் வாழ்த்துகிறேன்.
அவர் கதையை நம்புகிறேன்.



பாவேந்தர் மூவர் இங்கு
பாட வந்திருக்கின்றார். புகழ்
பாடட்டும். நம் கவிதை பஸ் நிற்காமல் ஓடட்டும்.
இரட்டை பிகில் ஒலிக்கட்டும்,
சிரத்தையுடன் கேட்டு மகிழ்ந்திடுவோம்.

**கவிஞர் கோட்டைவிட்ட பெருமாள்**
**தலைப்பு : பிரயாணிகள் – அப்பாவிப் பிராணிகள்**

மாலைப் பொழுது. மௌண்ட் ரோட்டின் ஜனநெரிசல்.
மனிதக் கடல் பொங்கி உடல் நுரையாய்ப் பூரித்து
வழிந்தோடித் தேங்கும் வண்ணக் கலவைகள்
கிழிந்த துணிக் கரை போல் நீண்டு நிற்கும் காட்சி.

மாலைப் பசிக் கிறக்கம். மணிபர்சின் உடல் இளைப்பு.
வாராதா பஸ் என்று வழி மேல் விழி வைத்து
வேலைக் களைப்போடு வீட்டின் நினைவிணைந்து
ஏறத் துடிப்போடு நின்தவத்தில் ஆழ்கின்றார்.



பதினொன்று வருகிறது. பகைவனின் கோட்டையா அது ?
பாய்கின்றார் நூறுபேர். ஆனால் கைநுழைய இடம் காணோம்.
பிடி கிடைத்தவர் படியில்ஏறப் பாவை ஒருத்தி மேலாடைவிலக
இடுக்கியில் சிக்கிய எலிபோல இடர்ப்பட்டுத் தவிக்கின்றாள்.

யார் வந்தால் எனக்கென்ன? யார் விழுந்தால் எனக்கென்ன?
பார்க்காமலே கண்டக்டர் விசிலடிக்கப் புற்றீசலாய் மனிதர்
கார்ப் படிகளிலே தொங்கிக் கையாடக் காலாட
வேர்க்க விறுவிறுக்க விழாமல் பறப்பதுவும் பழகிவிட்ட காட்சி.



இருபத்தி ஐந்து வரும். கூட 'ஏ' போட்டும் வரும்
எத்தனையோ கூடவரும். இருந்தாலும் ஏறுவது இரண்டோ
மூன்றோ?

ஒவ்வொன்றும் போனவுடன் ஒரு யுத்தகள ஏமாற்றம்
ஓங்கி வளர்வதுண்டு மக்கள் ஒடுங்கிப் போய்ச் சோர்வதுண்டு



எட்டு மணி அளவில் கொட்டாவி விடுவோர்க்குச்
சொட்டுக் கருணை சிந்தும் சில பஸ்கள்.
எட்டிவிடுவோம் வீட்டை என்ற இன்ப நினைப்பினிலே
இடிபட்ட மிதிபட்ட கோபமெல்லாம் கரைவதுவும் சகஜம்.

அந்தரத்தில் ஃபுட்போர்டில் அடைக்கலம்தான் நிரந்தரமா?
மந்திரி என்ன மௌண்ட் ரோட்டிலா நிற்கிறார்!
'க்யூ'விழுந்த கூட்டத்தில்?
மூன்றுபடி வேண்டாம். பஸ்ஸில் முக்கால் அடி போதும் நிற்க
நன்றாய்த் திட்டமிட்டு அரசு மக்கள் நலம் காக்காதோ?

**கவிஞர் ஒளிக் கண்ணனார்**
**தலைப்பு: டிரைவர் – ஒரு டாக்டர்**

உடம்பில் வலி உண்டா?
ஒரு மருந்தும் உதவாமல்
உபத்திரவம் தொடர்கிறதா?
அருமருந்து நாம் சொல்வோம்
அஞ்சாதீர்! குணம் கிடைக்கும்.

ஓடிப்போய் நகரப் பேருந்துப் பின்வழியாய்
உள்ளே நுழைந்துவிடும்.
உட்கார நினையாதீர்
உயரே வார் தொங்குபிடி
உமக்காகக் காத்திருக்கும்.

கிளம்பிவிட்ட பஸ்ஸில்
'கிரீச்' என்ற சத்தம்.
நின்ற இடம்விட்டு
நீர் முன்னேற்றம் பெறுகின்றீர்
ஐந்தடி முன்னால் போய்
அப்பாவி முதுகொன்றில்
அபயம் பெறுகின்றீர்.
'அப்பாடா' என்று அலட்டுகிறீர்.

ஐயா! பாதி வலி போயிற்று
அப்போது தெரியாது.

திருப்பத்தில் ஓடும் பஸ்
கிலேடித்தாற்போல் நிற்க
கண் இமைக்கும் நேரத்தில் – நீர்
காரோட்டி சீட் அருகே
கால் மடங்கி வீழ்கின்றீர்.
எட்டடி தூரம் எப்படி முன்வந்தோம்
என்று உமக்குத் தெரியாது; புரியாது.
எவர் உதவி கொண்டோ
எழுந்திருக்கப் பாரும்
மீதி வலி போயிருக்கும்

மெள்ளத்தான் அது புரியும்
சடன்பிரேக் மருத்துவம்
சகலவலி நிவாரணம்
உயர்ந்த ரக 'ஏர் பிரேக்'
உடலுக்கே இதமளிக்கும்
முன்னுக்கும் பின்னுக்கும்
மூன்றுமுறை விழுந்தெழுந்தால்
முற்றிவிட்ட உடல் வலியும்
மாயமாய்ப் பறந்துவிடும்
இது எங்கள் ஊர் வைத்தியம்
எளிதில் கிடைக்கும் வைத்தியம்!

**கவிஞர் கற்பூரசாமி**
**தலைப்பு : கண்டக்டர் – ஒரு கடமை வீரர்**

புகைவண்டி பிடிக்க ஏன்
புழுவாய்த் துடிக்கின்றீர்?
எழும்பூரில் இறங்குகையில்
எத்தனையோ ரயில் இருக்கும்.
பாண்டியன் போய்விட்டால்
பாசஞ்சர் காத்திருக்கும்
அதுவும் போய்விட்டால்
அடுத்த நாள் விடியாதோ?
காரணம் தேடிக் கழுத்தை வளைக்காதீர்
கண்டக்டர் புதிது!
கவனமாய்க் காசு வாங்கிப்
புதுப் பாதை 'ஸ்டேஜு'கள்
புரிந்தபின் விசில் கொடுப்பார்.

புகைந்து மனம் பதறாதீர்
வேலை கற்க வேளை
வேறு கிடையாதாவென்று.
வேதனை நீர் படலாம்.
சாதனை வேண்டுமென்றால்
சாடி நடை போடும்
எங்கள் கண்டக்டர்
என்றுதான் 'எக்ஸ்பெர்ட்' ஆவார்?






SANKAR IC CEMENT
மலிவு விலை
நகர்ப்புற வீடு
உறுதியானது. நிலையானது ஆனாலும் மலிவானது
சங்கர்
சிமெண்ட்
IS:269
பாறை போன்று உறுதி நிலைத்திருக்கக் கூடியது
ISI மார்க்குடன் உத்தரவாதம் உள்ளது
இந்தியா சிமெண்ட்ஸ் லிமிடெட், தன் பில்டிங், சென்னை-2
23 ஆண்டுகள் நிலைத்து — இன்னும் வளர்ந்துகொண்டே போகிறது!
இலவச தொழில் நுட்ப ஆலோசனைக்கு: சிமெண்ட் சர்வீஸ் பீரோ, 'குரோவ்', சென்னை-18
IC-1444TH

# ஐயா 371223 4910 8319 !

:முகுந்தன்.

> நாட்டு மக்கள் ஒவ்வொருவருக்கும் பதினன்கு ஸ்தானங்கள் கொண்ட அடையாள எண் ஒன்று கொடுத்து விடுவதென்று, ஜப்பானிய அரசாங்கம் முடிவு செய்திருப்பதாக ஒரு பத்திரிகையில் செய்தி வெளியாகி யிருக்கிறது சமீபத்தில். அதே முறையைப் பின்பற்றி நம் நாட்டிலும் ஆளுக்கு ஓர் எண் வீதம் கொடுத்து விட்டோமானல் என்ன நடக்கும் என்று ஒரு கற்பனை.

250911 3218 543 0, பி. ஏ., பி. எல்., அட்வகேட்.

பெறுபவர்: 371223 4910 8319, பி. ஏ.,
மூக்காத்தாள் தெரு, சென்னை — 7.



ஐயா, இப்பவும் நீர் எனது கட்சிக்காரரான 221702 2816 389 0 விடமிருந்து புரோ நோட்டு மீது ரூ. 2000 பெற்றுக் கொண்டு, மூன்று வருடக் காலா வதிக் கெடுவுக்குள் மேற்படி பணத்தைத் திருப்பிக் கொடுக்க மறுப்பதாக அறிகிறேன். இந்த நோட்டீஸ் கண்டவுடன் என் கட்சிக்காரரான 221702 2816 389 0 வுக்குச் சேர வேண்டிய பணத்தைத் திருப்பிக் கொடுக்காவிடில், உம் மீது சட்டப்படி நடவடிக்கை எடுக்கப்படும் என்பதை அறியவும்.

இப்படிக்கு, 250911 3218 543 0
221702 2816 389 0 வின் வக்கீல்.

✻ ✻ ✻



திரு 25091132185430,
அட்வகேட், சென்னை — 6

ஐயா, தங்கள் கடிதம் கிடைத்தது. நான் தெரிவித்துக் கொள்ள விரும்புவது யாதெனில்,

1. தங்கள் கட்சிக்காரரான 221702 2816 389 0 நான் சத்தியமாக — விட்டேன்! அறியேன்.
2. எனவே, அவரிடம் நான் பணம் ஏதும் வாங்கியிருக்க நியாயமில்லை என்பதை உணர்வீர்கள்.
3. தங்களது நோட்டீஸை என் வீட்டு வாசலில் இருக்கும் குப்பைத் தொட்டியில் வீசி விட்டேன். ஆச்சரிய மாக — என்றைக்குமில்லாத திருநாளாக — அந்தத் தொட்டி இன்று சுத்தம் செய்யப்பட்டு, உங்கள் கடிதம் குப்பை மேட்டுக்குப் போய்ச் சேர்ந்து விட்டது என்பதை அறியவும். இனி தங்களிடமிருந்து வரும் கடிதங்களையும் அதே இடத்துக்கு அனுப்ப உத்தேசித் துள்ளேன் என்பதையும் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

இப்படிக்கு,
371223 4910 831 9

✻ ✻ ✻

ஐயா, 371223 4910 831 9 அவர்களே!

உம்முடைய முரட்டுத்தனமான கடிதம் கிடைக்கப் பெற்றேன். என் கட்சிக்காரரான 221702 2816 3890 உம்மைப் பற்றி என்னிடம் நிறையச் சொல்லியிருக்கிறார். அவரிடம் மட்டுமின்றி 421710 9872 244 8, 332108 2980 487 3, 361211 6978 2547 இவர்களிடமும் நீர் கடன் வாங்கிவிட்டு ஏமாற்றியிருக்கிறீர் என்று தெரிவித்திருக்கிறார். அத்துடன் நீர் முழு பலாப் பழத்தைப் புருட் சாலாட்டில் மறைத்து விடக்கூடிய சாமர்த்தியசாலி என்றும் எச்சரித்திருக்கிறார். எனவே, என்னிடம் உம்முடைய கதை செல்லாது. தமிழ் சினிமாப் படங்களில் இரட்டை அர்த்தம் தொனிப்பது எத்தனை உண்மையோ அதேபோல நீர் 221702 2816 389 0 விடம் பணம் வாங்கியிருப்பதும் உண்மை. மரியாதையாக உண்மையை ஒப்புக் கொண்டு, பணத்தைக் கக்கும்; இல்லையேல் நீதிபதி அடித்து உண்மையைக் கக்க வைப்பார்.



இப்படிக்கு, 250911 3218 543 0
221702 2816 389 0 வுக்காக.

திரு 250911 3218 543 0 அவர்களுக்கு,

ஒரு வக்கீலின் கடிதமாகத் தெரியவில்லை உம்முடைய சமீபத்திய கடிதம் என்பதைத் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன். நீதிபதிகள் குஸ்திப் பயில்வான்கள் என்பது உம்முடைய எண்ணமோ? 'அடிப்பார் ; கக்க வைப்பார்' என்றெல்லாம் மிரட்டுகிறீர்களே?.... இந்த மிரட்டலுக்கெல்லாம் அஞ்சுகிறவன் நானல்ல. கல்லூரி ஹாஸ்டலில் தங்கிப் படிக்கும்போது ஈச்மன் என்று புனைபெயர் பெற்ற ஹாஸ்டல் வார்டன் 182309 4312 294 7 வின் கன்னங்கரிய தோற்றத்துக்கும் மிரட்டலுக்கும் பயப்படாமல் ஆறு மாதங்கள்வரையில் ஹாஸ்டல் பில் கட்டாமலே கழன்று கொண்டவனாயிற்றே, நான் ! உம்முடைய காகிதப் பயமுறுத்தலுக்கா அஞ்சுவேன் ?

மீண்டும் சொல்கிறேன். தங்கள் கட்சிக்காரரான 221702 2816 389 0 வை நான் அறியேன். அவரிடமிருந்து பொடி போடுவதற்கென்று கூட (அந்தக் கெட்ட பழக்கம் என்னிடம் இல்லையென்றாலும்) நான் நயா பைசாவும் வாங்கியதில்லை. அவ்வளவுதான்; ஆளைவிடுங்கள் !

இப்படிக்கு, 371223 4910 831 9



✿ ✿ ✿

ஐயா, 371223 4910 831 9!

திரும்பத் திரும்ப ஒரு பொய்யைச் சொன்னால் அது உண்மையாகிவிடும் என்ற அசட்டுத் தனமான எண்ணம் உம்முடைய மனசில் எங்கேயாவது ஒட்டிக் கொண்டிருக்குமானால் அதைத் துடைத்தெறியுங்கள் முதலில். நீர் ஆயிரம் சத்தியம் செய்தாலும் சரி, நாம் உம்மை நம்பவே மாட்டேன். மரியாதையாக என் கட்சிக்காரரான 221702 2816 389 0 வுக்குச் சேர வேண்டிய பாக்கித் தொகையான இரண்டாயிரத்தையும் (வட்டியுள்பட) கொண்டு வந்து கொடுத்துவிடவும்.



நீர் சொன்னபடி செய்யாவிடில் உம்மீது 'டிக்ரி' வாங்கி உம்மைச் சிறைக்கு அனுப்பலாமென்று ஓர் எண்ணமும் என் கட்சிக்காரர் 221702 2816 389 0 வுக்கு உண்டு என்பதை அறியவும்.

இப்படிக்கு, 250911 3218 543 0

✿ ✿ ✿

ஓய், 250911 3218 543 0!

என்ன 'டிக்ரி கிக்ரி' என்று பயமுறுத்துகிறீர்?..... என் அப்பாவிடம் மேற்படி விஷயத்தைச் சொன்னேன். 'உனக்குத்தான் சர்வகலாசாலையில் தலை கீழாக நின்றாலும் டிகிரி எதுவும் கொடுக்க மாட்டேன் என்று சொல்லி விட்டார்களே! பேசாமல் இவர் கொடுப்பதையாவது வாங்கி வைத்துக் கொள்!' என்று சமய சந்தர்ப்பம் தெரியாமல் 'ஜோக்' அடிக்கிறார் அவர். நான் என்ன செய்யட்டும்?

எனக்கு என்ன தோன்றுகிறதென்றால் நாம் இருவரும் நேரில் பேசினால் நம்மிடையே இருக்கும் குழப்பம் தீர்ந்து போய்விடும். எனவே, நாளை புதன்கிழமை காலை எட்டு மணிக்கு நான் உங்கள் வீட்டுக்கு வருகிறேன். தயவு செய்து வீட்டிலேயே இருக்கும்படி பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன்.

இப்படிக்கு, 371223 4910 831 9



✿ ✿ ✿

இடம்: 250911 3218 543 0 வின் வீடு.
நேரம்: புதன்கிழமை, காலை; எட்டு மணி.

371223 4910 831 9 வந்து கதவைத் தட்டுகிறான். பெரியவர் ஒருவர் கதவைத் திறக்கிறார்.

''250911 3218 5430 இருக்கிறாரா?''

''இல்லையே ! நீங்கள் யார் ?''

''நான் 371223 4910 8319.. 250911 3218 543 0 வைப் பார்க்கலாம் என்று வந்தேன்......''

''அப்படியா? நான் 221311 8917 397 0...250911 3218 543 0வின் தகப்பனார்.... ஆமாம், என்ன விஷயமாக வந்தீர்கள் ?''

''ஒரு கேஸ் விஷயமாகத்தான்.....''

''ஓ! நீங்கள்தான் 371223 4910 831 9 அவர்களா......?''

''ஆமாம்! எப்போது வருவார் அவர்?.... ரொம்ப நேரமாகுமோ...?''

''இதோ வந்தாகி விட்டது !....''

(உள்ளே நுழைகிறாள் அழகிய இளம்பெண் ஒருத்தி...)

''அம்மா 250911 3218 543 0! இவர் 371223 4910 831 9. உன்னைப் பார்க்க வேண்டும் என்று வந்திருக்கிறார்....''

''எஸ் மேடம்.... நீங்கள்தான் 250911 3218 543 0வா...? ரொம்ப சந்தோஷம். அந்த 221702 2816 389 0 விஷயமாக வந்தேன்......''

''ஓ! அதுவா!..... வாருங்கள் என் அறைக்கு..... எஸ், இப்படி உட்காருங்கள்....' உம், என்ன சொல்ல வேண்டும் உங்களுக்கு?''

''அம்மணி, அந்த 221702 2816 389 0 வை எனக்கு முன்னேபின்னே தெரியவே தெரியாது..... அப்படியிருக்க நான் அவரிடம் கடன் வாங்கியதாக நோட்டீஸ் விட்டிருக்கிறீர்களே, நியாயமா இது?.....''

''இருங்கள், ஒரு நிமிடம்!... 221702 2816 389 0 வை என்னுடைய சீனியர் 312311 9872 346 2தான் அனுப்பினார்.... அப்புறம் இன்னொரு வக்கீல் 298993 3685 427 6 கூட இதைப் பற்றி என்னிடம் பிரஸ்தாபித்தார்... ஆ, இதோ இருக்கிறது 221702 2816 389 0 என்னிடம் எழுதிக் கொடுத்த விவரங்கள்.... படிக்கிறேன். கேளுங்கள்: கடன் தொகை இரண்டாயிரம்; புரோநோட் மீது; வாங்கியிருப்பவர் 372123 4910 831 9.... நோட்டீஸ் விட வேண்டும்.''

''எங்கே, இன்னொரு முறை அந்த எண்ணைப் படியுங்கள்!''

''372123 4910 831 9....''

''கரெக்ட்! அம்மணி, அது என் நம்பரே இல்லை... என் நம்பர் 371223 4910 8319.''

''உண்மையாகவா ?.......''

''சத்தியமாக ?.......''

''அட பாவமே! ஒரு வேளை அந்த டைப்பிஸ்ட்தான் நம்பரைத் தப்பாக அடித்து விட்டாரோ என்னவோ ?.... அதிருக்கட்டும், விலாசம் ?....... அது மட்டும் எப்படிச் சரியாக இருக்கிறது.....?''

''அம்மணி! நான் அங்கே குடியேறுவதற்குமுன் அந்த 372123 4910 831 9 அங்கே குடியிருந்திருக்கலாம்.... உங்கள் டைப்பிஸ்ட் தப்பாக டைப் செய்த மாதிரி எங்கள் தபால்காரர் 292810 9876 332 8ம் எண்ணைச் சரியாகப் பார்க்காமல் கடிதத்தை 'டெலிவரி' செய்திருக்கலாமில்லையா?....''

''வாஸ்தவம்தான். என்னை மன்னித்துவிடுங்கள் மிஸ்டர் 371223 4910 831 9! ஐ ஆம் ரிய(ல்)லி ஸாரி!....''





''பரவாயில்லை மிஸ் 250911 3218 5430. தவறு நேர்வது இயற்கைதானே !.....''

221211 8917 297 0—அதாவது 250911 3218 543 0வின் தந்தை வருகிறார்.

''என்ன மிஸ்டர், 371223 4910 831 9! உங்கள் சந்தேகம் தீர்ந்ததா ?''

(250911 3218 543 0 குறுக்கிடுகிறாள்.)

''தவறு முழுவதும் என்மீது தானப்பா... நம்ம டைப்பிஸ்ட் 332610 2989 413 4 இருக்கிறாரல்லவா?... அவர் தப்பாக டைப் பண்ணி, கூத்தடித்திருக்கிறார். அதற்குத்தான் மன்னிப்புக் கேட்டுக் கொண்டிருந்தேன்....''

''அதிருக்கட்டும் 371223 4910 831 9, உனக்குக் கல்யாணம் ஆகிவிட்டதோ ?''

''இல்லை, சார்.....''

''உனக்கு எந்த ஊர்? அப்பாவின் நம்பர் என்ன? சொல்லேன், கேட்போம்....''

''சொந்த ஊர் தஞ்சாவூர்... அப்பா 192312 9684 257 7 எனக்கு 311429 8537 297 6 என்று ஒரே ஒரு அண்ணன் மட்டும்தான் உண்டு. அவனுக்குக் கல்யாணம் ஆகிவிட்டது... கும்பகோணம் மிராசுதார் 204262 3816 249 9 தான் பெண் கொடுத்திருக்கிறார்...''

பேச்சு இப்படியே தொடர்கிறது. கடைசியில் கல்யாணப் பந்தலில்தான் இது போய் முடியும் என்று ஊகித்திருப்பீர்கள்.

பார்த்தீர்களா!... ஒரே ஒரு எண் புரண்டு போனதால் சந்தோஷமாக இருந்த ஒரு பிரமசாரியின் சுதந்திரம் பறிபோய், அவன் வாழ்க்கை, திருமணம் என்கிற கூண்டுக்குள் அடைபட்டு விட்டது. இது போல இன்னும் எத்தனை குளறுபடிகள் நேருமோ !....

நமக்கு வேண்டாம் சாமி அடையாள எண்கள் !




# தொண்டைக்கு என்ன?

விக்ஸ் முதல் மாத்திரை சாப்பிட்டவுடனே, உங்களால் உணர முடியும்,
அதிலுள்ள ஆறு மருந்துகள் எவ்வளவு ஆறுதல் அளிக்கிறது என்பதை!
விக்ஸ் வேபொரப்பின் இதமளிக்கும் மருந்துகள் ஒவ்வொரு விக்ஸ்
மாத்திரையிலும் அடங்கியுள்ளன; அவை
இருமலையும் தொண்டைக் கரகரப்பையும்
விரைவில் தணிக்கின்றன.




வாங்குங்கள் விக்ஸ்--
கைக்கடக்கமான
4 மாத்திரைகள் அடங்கிய
ஜிகினாத் தாளுறையிலும்
கிடைக்கிறது விக்ஸ்.

**விரைவிலே இதமளிக்கும் இருமல் மாத்திரை**

லின்டாஸ்-VKS. IA-140 TM


பப்ளிக்ப்ராவிடண்ட்
ஃபண்டின் மூலம்
5%
வரியில்லாத
வட்டி
பெறுங்கள்
மற்ற
சலுகைகள்
• கடன் பணம் எடுக்கும் வசதிகள்
• இந்நிதியிலுள்ள டெபாசிட் தொகையை கோர்ட் மூலம் அட்டாச் செய்ய முடியாது
• இதிலுள்ள டெபாசிட் தொகை வரிக்குட்படும் வருமானத் தொகையிலிருந்து நீக்கம் பெறும்.
விவரங்களுக்கு ஸ்டேட் பாங்க் ஆஃப் இந்தியாவை அணுகுங்கள்.
தேசிய சேமிப்பு நிறுவனம்
davp 70/372




★ இக் குறியிட்ட கடிதம் ரூ. 15/- பரிசு பெறுகிறது.

★ சென்ற சில தினங்களாக மதிப்புக்குரிய முதலமைச்சர் அவர்கள் தமது தேர்தல் பிரசாரங்களில் மூதறிஞர் ராஜாஜி அவர்கள் தர்மம் பற்றியே பேசிக் கொண்டு அதர்மமாகவும் நன்றி மறந்தவராகவும் இருப்பதாகக் குற்றச்சாட்டுகளைக் கூறி வருகிறார்.

திரு சி. ஆர். நரசிம்மன் அவர்களை நகர சபை அங்கத்தினராக ஆக்கியதாகவும் திரு மாரிசாமி அவர்களை ராஜ்ய சபை அங்கத்தினராக ஆக்க இரவும் பகலும் உழைத்ததாகவும் கூறியுள்ளார். அவருக்கு 1967 தேர்தலை நினைவூட்ட விரும்புகிறேன். தமது அந்தஸ்து, மரியாதை, சுயகௌரவம் இவற்றைப் பொருட்படுத்தாது அன்றைய காங்கிரஸின் ஆட்சியை ஒழிப்பதற்காகத் தி. மு. க.வினருடன் மனப்பூர்வமாகப் பாடுபட்டார் ராஜாஜி. அது பற்றி ராஜாஜி அபிமானிகளே குறைப்பட்டனர். ஆனாலும் அதனை ராஜாஜி அவர்கள் பொருட்படுத்தாது தமது தள்ளாடும் வயதிலும் வலுவாகப் பிரசாரம் செய்து தி. மு. க. கூட்டணி வெற்றி பெறச் செய்தார். ஆனால் வெற்றி பெற்றவுடன் ராஜாஜியைக் கலந்தாலோசிக்காமல் தமது கட்சியினரை மட்டும் கொண்ட மந்திரி சபையை அமைத்தார்கள். அப்போது ராஜாஜி அவர்கள் இவர்களைப் போல் செய் நன்றி மறந்துவிட்டதாகச் சொல்லவில்லை.

அடுத்து சபாநாயகர் தேர்தல் சமயம் ராஜாஜியின் கருத்தைப் புறக்கணித்துத் தங்கள் கட்சிக்காரரைச் சபாநாயகராகத் தேர்ந்தெடுத்தார்கள். அப்போதும் ராஜாஜி நன்றிக்கடன் மறந்தவர்கள் எனச் சொல்லவில்லை.

அரசியல் தர்மம் பற்றிப் பேசுபவர்கள், 'அரசு வேலைகளில் கட்சித் தொண்டர்கள் குறுக்கிடு கூடாது' என்று ராஜாஜி சொன்னபோது இந்தக் காதில் வாங்கி அந்தக் காதால் விட்டு விட்டார்களே தவிர சொன்னபடி கேட்கவில்லை.

இன்னும் மது உற்பத்தி செய்தல், நில உச்சவரம்பு குறைத்தல் போன்ற விஷயங்களில் ராஜாஜியின் கருத்துக்களைத் தி. மு. க. ஏற்கவில்லை. அதனால் ராஜாஜி, நன்றியற்றவர்கள் என்ற சொல்லை இவர்களிடம் பிரயோகிக்கவில்லை.

அரசியலில் செய் நன்றி என்பது எதிர்பார்க்க முடியாத ஒன்று. எப்படியெனில், சுதந்திரம் வாங்கித் தந்தோம், நன்றி மறவாதீர் என்று கூறிக் கொண்டு காங்கிரஸ் என்றும் ஆட்சிப் பொறுப்பைத் தன்னிடம் வைத்துக் கொள்ள முடியாது. காலப்போக்கில் காணப்படும் மாற்றங்களை வைத்துத்தான் அரசியலை நிர்ணயிக்க முடியும்.

விருதுநகர்
2–2–71

'விருதை வாணன்'

சென்ற 7–2–71 கல்கி இதழில் 'வட்ட மேஜை' பகுதியில் சென்னை–61ச் சேர்ந்த அன்பர் 'ஜெயப்பிரியன்' என்பவர் எழுதிய கடிதத்தைக் கண்டு நான் அதிர்ச்சியும், ஆச்சரியமும் அடைந்தேன். ஜனவரி 4ந் தேதி சென்னை வண்ணாரப்பேட்டை ஜி. ஏ. ரோட்டில் இருக்கும் என் நண்பர் வீட்டுக்கு வந்திருந்தேன். அதே இடத்தில் இருக்கும் நெ. 1 என்னுள்ள ஸ்ரீ காமாட்சி அம்மன் கோயிலில் ஸ்ரீ ஐயப்பன் பூஜை நடந்து கொண்டிருந்தது. விழா நிகழ்ச்சி நிரலில் திரு என். வி. என். அவர்கள் கலந்து கொள்வதாகவும் கண்டிருந்தது. சரியாகப் பத்து மணிக்குத் திரு என். வி. என். அவர்கள் வந்தார். பூரண கும்ப மரியாதையுடன் அமைச்சரை வரவேற்று, பரிவட்டமும் கட்டினார்கள். பிறகு, அங்கு வாழைப் பட்டையில் அழகாகக் கோயில் போல் கட்டி அதில் ஐயப்பன் படத்தையும் வைத்திருந்தார்கள். திரு என். வி. என். அவர்கள் ஐயப்பன் படத்துக்கு புஷ்பாஞ்சலியும் செலுத்தினார்.

பழவந்தாங்கல் என்ற ஊரில் ''வெளி மாநிலத்துச் சாமிகளை வேறு இறக்குமதி செய்து கொள்கிறார்கள்'' என்று பேசிவிட்டு இங்கு வந்து இப்படிச் செய்திருக்கிறார். ஊருக்குத் தகுந்தாற்போல் இரட்டை வேடம் போடும் என். வி. என். போன்றவர்களை இன்னும் எத்தனை நாட்களுக்குத்தான் மக்கள் நம்பப் போகிறார்களோ, தெரியவில்லை!

திருப்பதி
4–2–71

ச. ஆறுமுகம்

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எழுபத்தோராம் ஆண்டு இந்தியாவுக்கு ஒரு தலைக் குனிவை ஏற்படுத்திய வருடம் என்றே சொல்ல வேண்டும். அப்படிக் கூறுவதற்குக் காரணம் நமது இந்திய விமானத்தைப் பாகிஸ்தானுக்கு இரண்டு பேர், விமானி ஓட்டியை மிரட்டிக் கொண்டு போனதேயாகும். இச்செயல் நம் இந்திய நாட்டில் இருக்கிற ஒவ்வொரு மனிதனுக்கும் தலைக் குனிவை ஏற்படுத்தியிருக்கிறது. மேலும், அவ்விமானத்தை எவ்வளவு கோரிக்கைகள் விடுத்தும் நம் நாட்டுக்குத் திருப்பி அனுப்பாமல் தகர்த்தெறிந்த செய்தி மேலும் மனக் கொதிப்பை உண்டாக்கியுள்ளது. இந் நிகழ்ச்சி நம் நாட்டின் பலவீனத்தைத் தான் குறிக்கின்றது. நம் பிரதமர் இந்திரா காந்தி அவர்கள் தேர்தலில் உள்ள கவனத்தைத் திறமையான நிர்வாகத்தின் பேரில் திருப்பியிருந்தால் தக்க நடவடிக்கை எடுத்து இந்த மாதிரி நிகழ்ச்சிகள் நடைபெறாமல் தவிர்த்திருக்கலாம்.

திண்டிவனம்
3–2–71

ந. ஸ்ரீதரன்

ஐந்தே
காசு
போதும்
உங்கள்
குடும்பம்
பெருகாமல்
தடுக்க!



நிரோத்
உபயோகியுங்கள்

உயர்தர ரப்பரினாலான கருத்தடைச் சாதனம்

குடும்பக் கட்டுப்பாட்டிற்கு

15 காசுக்கு 3

அரசாங்க ஆதரவினால்
குறைந்த விலை

வேண்டுமென்றபோது
மட்டுமே பேறு...

வேண்டுமென்றபோது மட்டுமே இன்று மக்கட்பேற்றை ஏற்படுத்திக் கொள்ளலாம். இதற்கு நிரோத் உதவும்.

சுலபமாகத் தள்ளிப் போடலாம்

நிரோத் (காண்டோம்) உயர்தர ரப்பரினாலான கருத்தடைச் சாதனம் ஆண்களுக்கானது. எளிமையான, தீமையற்ற நிரோத் உலகமெங்கும் உபயோகிக்கப்படுகிறது. இதை உபயோகிப்போரின் தேகநலம் பாதிக்கப்படுவதில்லை. நிரோத் எங்கும் கிடைக்கும்

தாய் சேய் இருவரின் தேகநலம்...

குழந்தைகள் சரியான வளர்ச்சி பெற, முதல் மூன்று நான்கு வருடங்கள் அவர்களுக்கு விசேஷமான பராமரிப்பு தேவை என்று வைத்தியர்கள் கூறுகின்றனர். பேற்றில் இழந்த தேக வலுவை மீண்டும் பெற தாய்க்கும் சிறிது காலம் பிடிக்கும். நிரோத் உபயோகிப்பதனால், அடுத்த பேற்றைச்

நிரோத், வீட்டுச் சாமான்கள் விற்கும் கடை, மருந்துக் கடை, வெற்றிலைப் பாக்குக் கடை ஆகியவற்றில் கிடைக்கும்.

davp 70/67

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

# பிள்ளைக் கனியமுது

ர. வேங்கடரத்தினம்



## திருடனுக்கு மந்திரம் தெரியுமா ?

பாட்டனுர் அலிபாபா கதையைக்கூறினுர். தொடர்ந்து மூன்று நான்கு நாட்கள் கதாசிரவணம் நடந்தது. கேட்டவள் பேத்தி. கதையெல்லாம் முடிவுற்ற பிறகு, மெதுவாக ஒரு சந்தேகம் கேட்கலானுள். அலிபாபா விறகு வெட்டக் காடு சென்றவன் ஒளிந்திருந்து மரத்தின் மேலேயிருந்து, திருடர் கூட்டத்தின் தலைவன் குகை எதிரே சென்று அதை மந்திரத்தின் உதவியால் கதவு திறக்குமாறு செய்யும் கட்டத்தில் பேத்திக்குப் பெரிய சந்தேகம் வந்து விட்டது.

''ஏன் தாத்தா, திருடனுக்குப் போய் மந்திரமெல்லாம் தெரியுமா? நம்மூரிலெல்லாம் மந்திரங்கள் தெரிந்தவர்கள் பெரிய ரிஷியாகவோ முனிவராகவோ தானே இருப்பார்கள்? எங்கேயாவது திருடன் மந்திர சக்தி உள்ளவனுக இருப்பானு?''

தாத்தா ஒருகணம் ஸ்தம்பித்துப் போனுர். ''அரேபியா தேசத்துக் கதைகளில் இப்படித்தான் வரும்'' என்று கூறிச் சமாளித்தார்.



## ரங்கநாதர் படுக்கப் போட்டு விடுவாரா ?

தீபாவளி மலரில் பழநி ஆண்டவரின் மிக நல்ல படம் ஒன்று வெளியாகியிருந்தது. அதை மலரிலிருந்து வெட்டி எடுத்தேன். அப்படத்துக்குக் கண்ணாடி போட்டு மாட்ட வேண்டும் என்று எனக்கு ஆசை.

என் அன்னை பார்த்துவிட்டார். "என்னடா, என்ன பண்ணப் போகிறாய், அந்தப் படத்தை ?" என்றார். நான் சொன்னேன். உடனே தடுத்து விட்டார். "நான் சொல்கிறேன் என்று நினைக்காதே. இருந்தாலும், ஆண்டிப் பண்டாரத்தின் படத்தை வீட்டில் மாட்ட வேண்டாம். வீட்டையும் துடைத்து விடுவார் அவர். வேறு ஏதாவது முருகப் பெருமானின் படம், வள்ளி தெய்வானையோடு இருப்பது இருந்தால், சட்டம் போட்டு மாட்டு. நான் வேண்டாம் என்று சொல்லவில்லை."

எனக்கு அன்னையின் கூற்றில் நம்பிக்கை இல்லை. ஆயினும், எதிர்த்துச் செயல்பட விருப்பம் இல்லை. வீணில் எடுத்த காரியம் நின்று போயிற்றே என்று வருந்திக் கொண்டிருக்கையில், வாசலிலிருந்து வைதேகி வந்தாள். பேச்சை அவள் கேட்டுக் கொண்டிருந்திருக்க வேண்டும். திடீரென்று அவள் தொடங்கிய பேச்சு யாருக்குமே விளங்கவில்லை. "அப்படிப் பார்த்தால், நாம் ரங்கநாதர் படத்தை மாட்டியிருக்கிறோமே. அது மட்டும் சரியோ ?"

நான் விசாரித்தேன்—"எப்படிப் பார்த்தால் என்று சொல்லு."



"பழனியாண்டவர் நம்மை மொட்டை அடித்துவிடுவார் என்றால், ரங்கநாதர் வீட்டில் இருப்பவர்களைப் படுக்கப் போட்டு விடுவார் என்று சொல்லக் கூடாதோ? அவர் படத்தை மட்டும் வைத்துக் கொள்ளலாமோ?"

அன்னை அப்படியே தூக்கிக் கட்டிக் கொண்டு விட்டாள் வைதேகியை. முருகன் படம் ஆண்டி வேடத்திலேயே சட்டம் போட்டாயிற்று என்பதைக் கூறவும் வேண்டுமா?

## கஸ்தூரிபா தான் பாரதமாதாவா ?

காந்தி ஜயந்தி ஆன புதிது. எங்கோ கஸ்தூரி பாவைப் பற்றியும் கேள்விப்பட்டிருக்கிறாள் மகள். திடீரெனச் சந்தேகம் ஒன்று எழுந்துவிட்



டது. "அப்பா, கஸ்தூரிபா காந்திதான் பாரத மாதா என்கிறதா ?"

நான் திகைத்து நின்றேன். "அப்படி ஒன்றும் இல்லையே!" என்றேன்.

"இல்லே, அப்பா! பாரத மாதாவுக்குத்தான் கஸ்தூரிபா என்று பெயரா ?" என்று அவள் மீண்டும் விளக்கினாள் தன் கேள்வியை.

"இல்லே. கஸ்தூரிபா காந்தி, மகாத்மா காந்தியின் மனைவி....." என்று சற்றே திருத்தினேன்.

"அது தெரியும். அதனால் தான் கேட்கிறேன்" என்று அவள் மிக உறுதியோடு வினவினாள்.

நான் அவள் கேட்டது இன்னது என்று அறியாமல் விழித்தேன். அவள் கூறலானாள்: "காந்தியைத் தேச பிதா என்கிறோம் அல்லவா ? நம்முடைய தேசம் பாரதம் தானே?"

நான் கூர்ந்து அவள் வாதத்தைக் கேட்டேன். "பாரதத்தின் பிதாவுக்கு மனைவியாகத் தானே இருக்க வேண்டும், பாரத மாதா ? நமக்கோ கஸ்தூரிபா காந்தி, காந்திஜியின் மனைவி என்பது தெரியும். அதனாலே, பாரதமாதா என்றால் காந்திஜியின் மனைவி இல்லையா ?"

## கொடுப்பதற்குமுன் எப்படிச் சலவை செய்வார்கள் ?

லாண்டிரி. அழுக்குத் துணிகள் நாலைந்துடன் ஒருவர் உள்ளே சென்றார். கூட அவருடைய சின்னஞ் சிறு புதல்வனும் இருந்தான். சலவைச் சாலை உரிமையாளரிடம் வந்தவர் சலவை விகிதங்களைக் கேட்டார். அதற்குக் கடைக்காரர் சொன்ன பதில் — "ஒரு துணிக்குப் பதினைந்து பைசா வாங்குகிறோம். எட்டு நாட்களில் தந்து விடுவோம். உங்களுக்கு அவசரம் ஆனால், 'அர்ஜெண்டில்' போடுங்கள். உருப்படி ஒன்றுக்கு முப்பது பைசா ஆகும். ஆனால் இரண்டு நாட்கள் முன்னதாகவே தந்து விடுகிறோம்."

இந்தச் சொற்களைச் செவியுற்ற அந்தப் பையன் தன் தந்தையினிடம் வினவினான். "ஏன் அப்பா, அது எப்படி முடியும்?"

"எது? எதைச் சொல்கிறாய் நீ ?"

"முப்பது பைசா கொடுத்தால், இன்றைக்குச் சலவைக்குப் போட்ட துணிகளை முந்தா நேற்றே கொடுத்து விடுவார்களாமே?"

அவரே ஒரு கணம் ஆச்சரியத்தில் ஆழ்ந்தார். "அப்படி எங்கே சொன்னார்கள் ?" என்று மகனைக் கேட்டார்.



"இப்போதுதானே கடைக்காரர் சொன்னார். முப்பது பைசா தந்தால், இரண்டு நாள் முன்பாகக் கொடுப்பதாகச் சொல்லவில்லையா?"

தந்தையார் சிரித்தார் — "நல்ல மூளையடா உனக்கு! இரண்டு நாட்கள் முன்னால் என்றால், துணியைச் சலவைக்குப் போடுவதற்கு முன்னால் அல்லடா. முதலில் சொன்ன அந்த எட்டு நாளில் இரண்டு நாள் முன்னதாக என்று அர்த்தம். புரிந்ததா?"

கடைக்காரர் சிரித்துக் கொண்டே, "நானும் ஆறு நாட்கள் என்று சொல்லியிருக்க வேண்டும்" என்றார்.

## ஈக்கு இந்தி தெரியுமா?

கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸ். சென்ட்ரல் ரயிலடி. நாங்கள் எங்கள் பெட்டியினுள் சென்று, உரிய இடத்தில் அமர்ந்தோம். சிற்றுண்டி



யெல்லாம் பிரம்புக் கூடையில் இருந்தது. சாதப் பொட்டலங்களில் ஈக்கள் உட்கார்ந்திருந்தன. எவ்வளவுதான் ஓட்டினாலும், அவை திரும்பத் திரும்ப மொய்த்துக் கொண்டிருந்தன. நாங்கள் ஓட்டுவதைக் கூட நிறுத்தி விட்டோம். கமலா அந்த ஈக்களையே கூர்ந்து பார்த்துக் கொண்டு வந்தாள்.

மறு நாள். ரயில் வண்டி, தமிழ் நாடு, ஆந்திர தேசம் எல்லாம் தாண்டி மராட்டி— இந்தி வழங்கும் பிரதேசத்தினுள் போய்க் கொண்டிருந்தது. சாதப் பொட்டலங்கள் தீர்ந்து, சப்பாத்திக் கட்டுகளும் தீர்ந்தன. கடைசியில் இலை, காகிதம் எல்லாவற்றையும் சணல் நூலினால் கட்டி வெளியே விட்டெறிந்தோம்.

கமலா உடனே ஒரு கேள்வி கேட்டாள்: "இந்த ஊரெல்லாம் எந்த பாஷை அப்பா, பேசுவார்கள்?"

"இந்தி" என்றேன்.

உடனே அவள், 'பாவம் அப்பா' என்று அனுதாபத்தோடு கூறினாள். "நம் ஊரிலேயிருந்து வந்த ஈயெல்லாம், பாவம், அப்பா! பொட்டலத்தோடு எல்லாம் வெளியிலே இந்த ஊர்க்குள்ளே போயிருக்கின்றன. இங்கேயெல்லாம் உள்ள ஈக்களோடே இந்தி பேசத் தெரியாமல் மிகவும் கஷ்டப்படும், இல்லையாப்பா?"

நான் அவளிடம் 'ஈயானாலும் இந்தி கற்றுக் கொண்டே தீரவேண்டும்' என்று சொல்லவில்லை.

## நரகாசுரன் நல்லவன்தானே?

தீபாவளிக்கு முந்திய இரவு. பட்டாசு வெடியெல்லாம் தெருவை அதிரச் செய்து கொண்டிருந்தன. "எதுக்காக, அப்பா, இப்படிப் பட்டாசு வெடி மத்தாப்பு எல்லாம் வாங்கித் தீபாவளியின் போது கொளுத்துகிறோம்?" என்று கேட்டான் சிறுவன். தகப்பனார் புராணக் கதையைச் சொன்னார். "நரகாசுரன் செத்துப் போகும் போது, நாமெல்லாரும் இப்படி அவன் இறந்த தினத்தைக் கொண்டாட வேண்டும் என்று கேட்டுக் கொண்டான். அதனால்தான் இப்படிச் செய்கிறோம்" என்றார்.

"வருஷா வருஷம் புதுத் துணி வாங்கி உடுத்திக் கொள்ள வேண்டும் என்று அவன் கேட்டானா?"

"ஆமாம்."

"தினுசு தினுசான தின்பண்டங்கள் எல்லாம் பண்ணிச் சாப்பிட வேண்டும் என்றுகூட அவன் கேட்டுக் கொண்டானா?"

"ஆமாம்."

பையனுக்குக் கடைசிச் சந்தேகம்: "இந்த மாதிரி மத்தாப்பு, 'கேப்', சொடச் சொடா எல்லாம் வாங்கி நாம் விட வேண்டும் என்று கூட அவன் வரம் கேட்டானா?"

"ஆமாண்டா, ஆமாம்."

பையன் முடித்தான் — "நல்லவனப்பா நரகாசுரன். அவன் அப்படி யெல்லாம் வரம் கேட்கா விட்டால்,



நீங்கள் எனக்கு வெடியெல்லாம் வாங்கித் தந்திருப்பீர்களா?"

எரிச்சலோடு தகப்பனார் மொழிந்தார்: "ஆமாம், மிகவும் நல்லவன்தான் — நரகாசுரன்!"

"பின்னே அவனைப் போய் ஏன் கிருஷ்ணர் கொன்று போட்டார்?"

பெற்றவர் சமாளித்தார்: "அவனைக் கொன்றால்தானே தீபாவளியே நடக்கும்? இல்லாவிடில், உனக்கேது! பட்டாசு—வெடியெல்லாம்?"

## மின்சாரம் ஆகிறவரை சுற்றுதா?

தலைக்கு மேலே மின்சார விசிறி சுழன்று கொண்டிருந்தது. நண்பருடைய பெண்கள் — பெரியவளுக்கு ஏழு வயது இருக்கலாம்; சிறியவளுக்கு நான்கு ஐந்து வயது இருக்கும் என்று தோன்றியது — வந்தனர்.

"விசிறியை நிறுத்தி விடம்மா. வேண்டாம்" என்று நான் கூறினேன். உடனே பெரியவள் சுவர் மீது பலகையில் இருந்த பித்தானை அழுத்தி நிறுத்தினாள்.



அப்படியும், விசிறி வழக்கம் போல் சிறிது நேரத்துக்குச் சுற்றிக் கொண்டிருந்துவிட்டு மெதுவாக நின்றது. இதைக் கண்ணுற்ற சிறியவள் கேட்டாள் : ''என்னடி இது, நிறுத்தின பிற்பாடும் சுற்றிக் கொண்டிருக்கிறது?''

பெரியவள் ஒரு நிமிஷம் யோசித்திருப்பாளோ, என்னவோ ? 'டக்'கென்று சமாதானம் சொன்னாள் — ''பித்தானை அழுத்தின போது அந்த இடத்திலிருந்து விசிறி வரை கம்பியில் இருந்த மின்சாரம் முழுவதும் ஆடி வரை சுற்றிக் கொண்டுதானே இருக்கும் ?''

சிறியவளுக்குப் புரிந்து விட்டது போலும்; அவள் மேலே ஏதும் கேட்கவில்லை.

## கடவுள் பூஜைக்குப் பழையதை உபயோகிக்கலாமா ?

பூஜை நடந்து கொண்டிருந்தது, நித்தியப்படி. பக்கத்து வீட்டுப் பையன் கண்ணன் வந்தமர்ந்தான். பெரியவர் பூஜை செய்து கொண்டிருந்தார். நாலு ஊதுபத்திகளை விளக்கில் காட்டிப் பற்ற வைத்து அவற்றுக்கான பித்தளை ஸ்டாண்டில் பொருத்தினார். கண்ணன் கவனித்துக் கொண்டே இருந்தவன் மனத்தில் என்ன தோன்றியதோ, தெரியவில்லை. ஊதுபத்திகளைப் பற்ற வைத்துச் செருகியவரைப் பார்த்து ஒரு கேள்வி கேட்டான் :

''என்ன மாமா! தினமும் இதே ஊதுபத்தி ஸ்டாண்டு தானே ? சுவாமி பூஜைக்குப் போய் ஒரு நாள் உபயோகித்ததையே தினமும் உபயோகப் படுத்தலாமா ?''

அவருக்கு அவனது கேள்வி வியப்பை ஊட்டியது. தினந்தோறும் புதுப் புது ஊதுபத்தி ஸ்டாண்டு வாங்கிக் கட்டி வருமா? அவன் உண்மையில் அவருக்குப் புதிர் போட்டான்: ''எங்கள் வீட்டில் தினமும் புது ஊதுபத்தி ஸ்டாண்டுதான் உபயோகிப்போம், மாமா. ஒரு நாள் பூஜையில் வைத்ததையே மறு நாளைக்கும் யாராவது உபயோகிப்பார்களா ?''

அவர் அப்படியே அயர்ந்து விட்டார். பையனுக்கு ஒரே



மகிழ்ச்சி, பெரியவர் விழிப்பதில். ''என்ன மாமா? புரியவில்லையா ?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டான்.

அவருக்கு ஏதும் புரிந்தால் தானே, புரிந்தது என்று கூறுவதற்கு? இன்று நிஜமாகவே பையனிடம் வகையாக மாட்டிக் கொண்டு விட்டோம் என்று எண்ணலானார்.

''வேண்டுமானால் உங்களுக்கு விடை வர வழி ஒன்று சொல்லித் தருகிறேன்'' என்றான் கண்ணன்.

''சரி, சொல்லு.''

'' நாங்கள் அன்றாடம் பூஜை ஆனதும் ஊதுபத்தியெல்லாம் அணைந்தானபின் அந்த ஸ்டாண்டையே சாப்பிட்டு விடுவோம். இப்போதாவது புரிகிறதா, சொல்லுங்கள்.''

பெரியவர் பையனைப் பாராட்டினார். விடை வாழைப்பழம்தான் !

## பெருமாளுக்குத் தன்னையே அளித்து விட்டால் ?

திருப்பதி மலை மேலே திருவேங்கட முடையானின் திருக்கோயில். பிரும்மாண்டமான பிரார்த்தனை உண்டியின் எதிரே நிற்கிறோம்.



பக்தப் பெரு மக்கள் வலம் வந்து தத்தம் காணிக்கைகளைச் செலுத்திக் கொண்டிருந்தனர்.

வைதேகி உண்டியலின் மேற்புற வாயைக் கவனித்தாள்.

''எதுக்கப்பா உண்டியலின் வாயை இவ்வளவு பெரிசாக வைத்திருக்கிறார்கள்?''

''ஆமாம், அப்படி இருந்தால்தான் ஒவ்வொருவர் தங்கள் வீட்டி லிருந்து கொண்டு வரும் உண்டிச் செம்பையே அப்படியே இதில் போட முடியும். இல்லாவிட்டால் நுழையாதே.''

''ஒரு ஆள் நுழையலாம் போல் இருக்கிறதே.''

சிறிது நேரத்துக்குப் பிறகு வைதேகி உண்டியலைப் பற்றி மீண்டும் கேள்வி தொடுக்கலானாள்.

''நாளைக் காலை இந்த உண்டியலைத் திறந்து பார்ப்பார்கள் இல்லையா ?''

''ஆமாம், பார்ப்பார்கள்.''

''அப்போது, நான் சொல்லிருப்போல் நடந்தால் எப்படி இருக்கும், அப்பா?'' என்று அவள் தன் மனக் காட்சியை விரித்தாள். ''திறந்து பார்க்கும் போது, ஓர் ஆள் பட்டை பட்டையாக நாமம் சாத்திக் கொண்டு கைகளைக் கூப்பிய படி உட்கார்ந்திருக்கிறான். அவனை என்ன செய்வார்கள், கோயிலில் ?'' இதுதான் அவள் சந்தேகம்.

'' என்ன செய்வார்கள் ? போலீசிடம் ஒப்படைக்க வேண்டியதுதான் அவனை.''

அவளுக்குக் கோபம் வந்து விட்டது. '' அதெப்படி நீங்கள் சொல்லலாம் ?''

''ஏன் சுவாமி உண்டியலில் ஆளுக்கு என்ன வேலை?''— என்று நான் கேட்டேன்.

''நாலும் நீங்களும் காசு போடுகிறோம். அவனிடம் காசு இல்லை என்று வைத்துக் கொள்ளுங்கள். அவன் வேங்கடாசலபதிக்குத் தன்னையே அர்ப்பணம் செய்து கொண்டவனாக ஏன் இருக்கக் கூடாது?''

எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. எந்தப் பக்தனும் இப்படிக் குதித்துத் தேவஸ்தானத்துக்கு ஒரு பெரிய சோதனையை உண்டாக்காமல் இருக்கட்டும் என்று எண்ணி நடக்கலானேன்.

## 'லைட்' காப்பி குடிக்கச் சொன்னதற்குக் காரணம் சொல்லட்டுமா?

பெரியவர் ஒருவர் வீட்டுக்கு வந்தார். சேம நல விசாரணைகள் யாவும் ஆயின. வீட்டுக்காரர் கூறினார்:— "காப்பி சாப்பிடுகிறீர்களா, கொஞ்சம்?"

"கொஞ்சமாக டிகாக்‌ஷன் விட்டு, 'லைட்' காப்பியாக இருக்கட்டும். நீங்கள் சொல்வதற்காகச்சாப்பிடுகிறேன்."

"ஏன் டாக்டர் கட்டுப்பாடா?"

"ஆமாம், 'லைட்'டாகத் தான் காப்பி குடிக்க வேண்டும் என்று சொல்லியிருக்



கிறார். ஏற்கனவே நரம்பு மண்டலம் மிகவும் ஆட்டம் கண்டு விட்டது."

உள்ளேயிருந்து இந்தப் பேச்சையெல்லாம் கவனித்திருக்கிறாள் ரேவதி. அவளுக்கு ஏழு வயது இருக்கும்.

சிறிது நேரத்தில் வெளுத்த காப்பி வந்தது. கிழவர் டபராவுக்கும் டம்ளருக்குமாக ஆற்றிக் குடிக்கலானார். டம்ளர்க் காப்பியில் அரைக்கால் பகுதி மேலெல்லாம் வழிந்தது. அங்கவஸ்திரத்தினால் துடைத்துக் கொண்டே பருகிவிட்டு, அவர் கூறினார். "வர வரக் கை நடுங்குகிறது. பார்த்தீர்களா, காப்பி மேலேயெல்லாம் சிந்தியதை?"

இவ்விடத்தில் ரேவதி சம்பந்தமே இல்லாமல் அங்கு வந்து நின்றாள். பொத்துப் பொத்தென்று பேசுவாள். "நான் ஒன்று சொல்லட்டுமா?" எனத் தொடங்கினாள்.

"போடி, உள்ளே. பெரிய மனுஷி போலப் பேச வந்து விட்டாள்" என்றார் வீட்டுக்குரியவர்.

கிழவர் "சொல்லட்டுமே, அவள். என்னதான் சொல்கிறாள் என்று கேட்போமே?" என்றார்.

அதற்குள் அவளே ஆரம்பித்தாள். "டாக்டர் இந்தத் தாத்தாவை ஏன் லைட் காப்பி குடிக்கச் சொன்னார் என்று நான் கண்டுபிடித்து விட்டேன். சொல்லட்டுமா?"

வீட்டுக்காரர் வந்தவர் இருவருமே அவளை நோக்கினர்.

"தாத்தாவுக்குக் கையெல்லாம் வயசு ஆகிவிட்டதனால் ஆடுகிறதோ, இல்லையோ?... அதனால்தான் — " இங்கு அவள் நிறுத்தியது புதிர்விடுத்தாற்போல இருந்தது.

அவளே விளக்கினாள் — "காப்பி சட்டை, வேட்டியெல்லாம் கொட்டினால், கறை பிடித்துக் கொள்ளும் இல்லையா? அதனால், வெளுத்த காப்பியாய் இருந்தால், கறை சீக்கிரம் போய் விடும். இல்லாவிட்டால், துணிமணியெல்லாம் வீணாகப் போய்விடும். டாக்டர் அதுக்காகத்தான் லைட் காப்பி குடிக்கச் சொல்லியிருப்பார்."

கிழவர், "பெண் படு சுட்டியாய் இருக்கிறாளே!" என்றதும், அவளது தந்தை 'ஹிஹி' என்று சிரித்தார்.

## நாளைக் கிழிப்பதில்லையா!

அவர் ஒரு பழைய பள்ளி ஆசிரியர். செய்வன திருந்தச் செய்ய வேண்டும் அவருக்கு. தப்புத் தென்பட்டால், உடனுக்குடன் திருத்தியே வழக்கம். திண்ணையில் பேத்தி தன் தோழிகளிடம் என்னவோ பேசிக் கொண்டிருக்கிறாள். பேச்சுவாக்கில் இந்த வாக்கியம் பெரியவர் காதில் வந்து விழுகிறது: "இன்னும் இரண்டு நாள் 'கிழிச்சு' நான் ஊருக்குப் போகப் போகிறேனே." உடனே தம் பேத்தியைக் கூப்பிட்டார். அவள் தோழிகள் புடை சூழ உள்ளே வந்து நின்றாள்.

"நீ எப்போது ஊருக்குப் போகப் போகிறாய்? உன் தோழிகளிடம் சொல்லிக் கொண்டிருந்தாயே."

"உங்களுக்குத்தான் தெரியுமே, தாத்தா? வர புதன் கிழமைதானே நாம் போகிறோம்?"

"அது சரி, நீ என்ன சொல்லிக் கொண்டிருந்தாய்?"

"இன்றைக்குத் திங்கள் இல்லையா? அதனால் ரெண்டு நாள் 'கிழிச்சு' ஊருக்குப் போகிறோம்" என்றேன்.

தந்தை பற்றிக் கொண்டார். 'கிழிச்சு என்று சொல்லக்கூடாது. கழிச்சு (கழித்து) என்று சொல்ல வேண்டும். புரிந்ததா?" அவர் ஒரு பெருமிதப் புன்னகையோடு பேசினார்.

அவள் நகரவில்லை. "சரி, போய் விளையாடு. அதுக்குத்தான் கூப்பிட்டேன்."

அவள் கண்கள் சுவரில் எதிரே தொங்கிய காலண்ட



ரின் மீது சென்றன. தினமும் கிழிக்கும் காலண்டர் அது. சுவாமி படத்துடன் கூடியது. அதைக் கவனித்த பேத்தி விட்டுக் கொடுக்கவில்லை.

"இல்லே தாத்தா, கிழித்து என்றும் சொல்லலாம்...."

பெரியவர் திகைத்தார்.

"பாருங்கள், அந்தக் காலண்டரை. தினமும் ஒரு நாள் கிழிக்கிறோம் இல்லையா? இன்னும் இரண்டு நாள் கழித்துப் போகிறோம் என்றாலும் கிழித்துப் போகிறோம் என்றாலும் ஒன்றுதானே?"

அவர் பேசவில்லை.

## சுவாமி பாவம் இல்லையா?

முருகனின் திருச் சந்நிதி. கோயிலில் அன்று இறைவ

னின் மூர்த்திக்கு விசேஷமான நீராட்டு வைபவம் நடந்தது. அபிஷேகம் என்றால் வெறும் தண்ணீரை ஊற்றுவது மட்டும் அல்லவே? தேன் அபிஷேகம், பால் அபிஷேகம் என்று வரிசையாக ஒவ்வொன்றும் நடைபெற்றுக் கொண்டிருந்தது.

குருக்கள் பக்கத்து அறைக்குச் சென்று இரண்டொரு பாத்திரங்களை ஏந்தி வந்தார். ஒன்றில் கையை விட்டு எதையோ பிசைந்தார். ஆம்! பஞ்சாமிர்தத்தில் மூர்த்தியை



அபிஷேகம் செய்வதற்கான தயாரிப்பு! வாழைக்கனி, நாட்டுச் சர்க்கரை ஏலக்காய், பேரீச்சை, திராட்சை கற்கண்டு ஆகியவற்றை நன்கு கலந்து பக்குவம் செய்து கொண்டார். ''ஆயிற்று, அடுத்தது பஞ்சாமிர்த அபிஷேகம்'' என்ற சின்னஞ்சிறியதோர் அறிவிப்புக் கொடுத்தார். ஒரு பிடிப் பழக் கலவையை எடுத்துத் திருவுருவின் உச்சியில் வைத்தார். இன்னொரு பிடியையும் அதே போல் கிரீடத்தில் பதித்தார். கைப் பாத்திரத்தை அப்படியே எடுத்து இறைவனின் திருவடியில் வைத்தெடுத்தார்.

''நன்றாகத் தரிசனம் பண்ணிக் கொண்டீர்களா ?'' என்று அர்ச்சகர் கட்டளைக் காரரைப் பார்த்துக் கேட்டார்.

'உபய'க்காரர் 'ஆகா, ஆயிற்று' எனத் தலையாட்டினார்.

உடனே குருக்களுக்குத் தான் என்ன அவசரம்? விறு விறு வென்று கிரீடத்தினின்று சிறிது சிறிதாக இறங்கி வந்திருந்த பழக் கலவையை அப்படியே கையினால் மூர்த்தியின் மீது ஒரு பிசிறுகூட இராதவாறு வழித்தெடுத்தார்; பாத்திரத்தில் திணித்தார். பஞ்சாமிர்தப் பாத்திரத்தைச் சற்று எட்டி வைத்து, இரண்டு செம்பு நீரை எடுத்துக் கொட்டினார், தெய்வத்தின் மீது.

'உபய'க்காரர் குடும்பம் பஞ்சாமிர்தப் பிரசாதம் வாங்கிக் கொண்டு கிளம்பிற்று. அக்குடும்பத்தில் ஒரு குழந்தை: — முருகனைப் போலவே, அவன் உயரத்தில் ஓர் அழகிய குழந்தை. அது பஞ்சாமிர்த அபிஷேகத்தைக் கூர்ந்து கவனித்திருக்கவேண்டும். ''பாவம், அப்பா, சுவாமி! இல்லையா?'' என்றது. பெரியவர்களுக்குப் புரியக் காணோம். கடவுளுக்கு அனுதாபம் சொல்கிற குழந்தையின் பேச்சை நான் செவிசாய்த்துக் கேட்கலானேன். ''சுவாமியின் தலை மேலே வைத்த பஞ்சாமிர்தம் கண்ணைத் தாண்டிக் கன்னத்துக்குக்கூட வரவில்லை.... மூக்குக்குக்கூட இறங்கவில்லை. அதுக்குள்ளேயே பஞ்சாமிர்தத்தை அப்படியே எடுத்து விட்டார் குருக்கள். உதடு வரையிலாவது இறங்க விட்டிருக்கக் கூடாதா? பாவம் தான் சுவாமி !''

தெய்வக் குழந்தை பஞ்சாமிர்தத்தின் ருசியைக் கூடப் பார்க்கவில்லையே என்று அந்த மனிதக் குழந்தைக்கு அனுதாபம் !

## ஏன் கரை கட்டக் கூடாது ?

காரியாலயத்துக்குக் குடும்பத் தலைவர் கிளம்பிக் கொண்டிருந்தார். வெள்ளைக் கால் சராயை அணிந்தவர் அதைக் கழற்றினார்.

'' ஏன் ? நேற்றுடன் இரண்டு நாட்கள்தானே ஆகியிருக்கிறது ? அதற்குள் மாற்றுவானேன் ?''— குடும்பத் தலைவியின் வினா இது.

''கீழ் பக்கத்தைப் பார்த்து விட்டுச் சொல்லு. அப்படியே மண்ணாக ஆகிவிட்டதைப் பார்த்தாயா, இரண்டே நாட்களில் ?''

'' ஆமாம், வெள்ளைப் பாண்ட்ஸ் போட்டுக் கொண்டால் அதுதான் கஷ்டம்.''

''பாக்கி இடமெல்லாம் அழுக்கு ஆகாவிட்டாலும், கீழெல்லாம் ஒரே பாழாகி விடுகிறது.''

இந்தப் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த, குடும்பத்தின் கொழுந்து பேசலாயிற்று — ''அப்பா, வெள்ளை பாண்ட்ஸ் இரண்டே நாட்களில் கீழே மட்டும் அழுக்காகி விடுகிறதோ இல்லையோ? அதற்கு நான் ஒரு யோசனை சொல்கிறேன்.''

தலைவர் பெண்ணின் பேச்சை ஆவலோடு செவி மடுத்துக் கேட்டார்.

''பாண்ட்ஸுக்கும் கீழ்ப் பக்கம் கரை போட்டால் என்ன ?''

'' உங்கள் புடவை — பாவாடை போலவா?''

'' ஏன், உங்களுடைய வேட்டி — துண்டைப் போலவும்தான்.''

ஒருகணம் தந்தை அயர்ந்து விட்டார், யோசனையைக் கேட்டு. ''உங்கள் வேட்டிக்குக் கரையிருப்பதால், ரோடு மண்ணெல்லாம் அவ்வளவாகக் கண்ணுக்குத் தெரியாமல் இருக்கிறதல்லவா ? அதே போல் பாண்ட்ஸுக்



கும் கீழ்ப் பக்கத்தில் அழுத்தமான நிறத்தில் ஒரு கரை இருந்தால், அழுக்கு அதிகம் தெரியாமல் இருக்குமே!''

முதலில் யாராவது துணிந்து செய்து, நாகரிகமாக ஆகிவிட்டால் நிச்சயமாகப் பின்பற்றலாம் !

## கோபம் வராதா ?

என் கதை ஒன்று எந்தப் பத்திரிகையிலிருந்தோ எனக்கே திரும்பி வந்திருந்தது. பெண்ணரசி தான் தபாலை வாசலிலிருந்து வாங்கி வந்தாள்.

''என்ன, அப்பா இது. நீங்கள் எழுதின கதை மாதிரி இருக்கிறதே ?''

"என் கதையேதான்."

"திரும்பிவந்துவிட்டதா?"

"ஆமாம்; அவர்களுக்குப் பிடிக்க வில்லை போல் இருக்கிறது....."

அவள் இன்னொரு கேள்வி விட்டாள் — "இப்படி அனுப்பினால் கோபம் வராதா?"

நான்பாட்டில் பதில் கூறினேன் "கோபித்துக்கொண்டு என்ன பலன்? அவர்களுக்குக் கதை நன்றாய் இல்லாவிட்டால், திருப்பித் தானே அனுப்புவார்கள்?"

பெண் கேட்ட கேள்வியைச் செவியுற்று நான் குன்றிப் போனேன். நான் எண்ணியது வேறு, அவள் கேட்டது வேறு. "இல்லை, அப்பா, அதுதான் நானும்



கேட்கிறேன். இந்த மாதிரி நன்றாய் இல்லாத கதையையெல்லாம் அனுப்பினால் அந்தப் பத்திரிகைக்காரர்களுக்குக் கோபம் வராதா உங்கள் மேல் என்று கேட்கிறேன்."

நான் என்ன சொல்வது?

## இராமரா? கிருஷ்ணரா?

"ஏன், அம்மா, கிருஷ்ணருக்கு வெண்ணெய் என்றால் மிகப் பிடிக்கும் இல்லையா?"

"ஆமாம்."

"அதனால்தானே திருடித் திருடித் தின்பார்?"

"ஆமாமடி, ஆமாம்."

"தயிர், பால் எது இருந்தாலும் குடித்து விடுவாராமே?" என் மனைவி வாசலில் தயிர் வாங்கிக் கொண்டிருந்த போது நடந்த இந்த உரையாடல் நன்றாகக் கேட்டது.

"ஆமாமாம். அதற்கு என்ன வந்தது இப்போது?"

"அடுத்தாற் போல, ராமருக்கு என்ன பட்சணம் பிடிக்கும், என்ன சாப்பிடுவார் என்று ராமாயணத்தில் எங்கேயாவது போட்டிருக்கிறதா?"

"உன் அப்பாவிடம் போய்க் கேள் இதெல்லாம்."

பெண் இறுதியில் முத்தாய்ப்பு வைத்தாள்: "நான் கேட்பது எதுக்காக என்றால் அவ்வளவெல்லாம் திருடித் தின்ற கிருஷ்ணரை விட்டு விட்டோம். ஆனால், ஒரு பாவமும் அறியாத, காட்டுக்கெல்லாம் போய்க் கஷ்டப்



பட்ட ராமர் பேரைப் போய்க் கெடுத்தோம்."

தயிர்க்காரி விழித்தாள்.

"யாராவது வயிறுபுடைக்கத் தின்றால், சாப்பாட்டுக் கிருஷ்ணன் என்று சொன்னால் நியாயம். நாமோ சாப்பாட்டு ராமன் என்று சொல்கிறோம். இது சரியா?"

## ஔகாரம் இல்லாவிட்டால் என்ன?

முற்றத்தில் குழந்தைகளின் குரல்கள் கேட்டன. அக்கம் பக்கத்து வீட்டுக் குழந்தைகள் யாவும் இருந்தன. "நீ டிக்டேஷனில் எவ்வளவு மார்க்குடா?"

"பத்துக்கு ஒன்பது."

"எது தப்புப்போட்டாய்?"

"ஔடதம் என்பதை ஓடதம் என்று எழுதிவிட்டேன். அதற்கு ஒரு மார்க்கு குறைத்து விட்டார் வாத்தியார்."

"நிஜமா?"

"பின்னே பொய்யா சொல்கிறேன்?"

"ஏன் கேட்டேன் என்றால் எனக்கும் ஔடதம்தான் தப்பு. பாக்கி எல்லாம் ரைட்டு."

இங்குதான் குழந்தைகள் மகாநாட்டின் சுவையான சர்ச்சை!

"என்னைக் கேட்டால், இந்த 'ஔ'வே வேண்டாம். ஔ என்கிற ஓர் எழுத்து இல்லாவிட்டால் என்ன குறைந்துபோய்விடும்தமிழ்?"

"நானும் அப்படித்தான் சொல்கிறேன். என் அப்பாவைக் கேட்டேன். இங்கிலீஷில்கூட 'ஔ'கிடையாதாம். வீணா நம்மைக் கஷ்டப்படுத்துவதற்குத்தான் இந்த எழுத்து!"

"ஔ இல்லாவிட்டால் ஔடதம் என்று எப்படி எழுதுவாயாம்?" — இது மூன்றாமவன்.

"மருந்து என்று சொல்லிவிட்டால் போச்சு, ஔடதம் என்றுதான் சொல்லித் தீர வேண்டுமா?"

"கௌளி என்று எப்படி எழுதுவாய்?" — நான்காமவன்.

"கௌளி என்றால் என்னடா?"

"பல்லிதான் கௌளி. இதுகூடத் தெரியாதா?"

"ரொம்பச் சரி. பல்லி என்றே சொல்லி விட்டால் போகிறது."

இங்கு சிறிது மௌனம் நிலவுகிறது.

"இந்த நாலைந்து வார்த்தைகளில் 'ஔ' வருகிறது என்பதற்காக ஒரு தனி எழுத்து வேண்டுமா?"

"அப்படிச் சொல்லாதே. பல்லி, மருந்து என்று எழுதித் தப்பிக் கொள்ளலாம் என்று நினைக்கிறாயே. நாய் குரைப்பதை எப்படிச் சொல்வாய்?"

புதியவன் ஒருவன் ஆமோதிக்கிறான் — "ஆமாம், அது சரியான கேள்வி. நாய் வௌ வௌ வென்று குரைத்ததாகத்தானே சொல்ல வேண்டும்?"

"பின்னே, வேறெப்படிக் குரைக்குமாம் நாய்? வெறுமனே குரைத்தது என்று



சொன்னாலே போதாதா? வௌ வௌ வென்று குரைத்தாகச் சொன்னால்தான் புரியுமா?"

"ஆமாம். சில நாய் 'வள் வள்' என்றும் குரைக்குமே? இரண்டுக்கும் வித்தியாசம் தெரிய வேண்டாமா?"

இதற்கு மேல் விவாதம் ஓடவில்லை.

## சொப்பனத்தில் சுவாமி வந்தால்?

பெண் நடுத் தூக்கத்தில் புரண்டாள்; வாய் என்னவோ முணுமுணுத்தது. தானே பேசிக் கொண்டாள். திடீரென்று படுக்கையிலிருந்து எழுந்து நின்றாள்.

அன்னை "படுத்துக் கொள்ளடி" என்று விரட்டினாள்.



சிறிது நேரத்தில் பெண் படுத்து விட்டாள். மீண்டும் வாய் மட்டும் ஓயாமல் பேசிக் கொண்டிருந்தது. மறுநாள் பொழுது விடிந்ததும் பெண்ணை நினைவாக விசாரித்தாள் தாயார்.

"ஒரு சொப்பனம் கண்டேன், அம்மா!" — இது பெண்.

"அது சரி. பாதியில் எழுந்து நிற்பானேன்?"

"ஆமாம், அம்மா, உனக்குத்தெரியாது, என்ன நடந்ததென்று. எங்கள் பள்ளிக் கூடத்திலே இன்ஸ்பெக்டர் வந்திருக்கிறார். ஓட்டப் பந்தயத்தில் முதலாக வந்ததற்கு எனக்குப் பரிசுகூடக் கிடைத்தது. கடைசியில் கூட்டம் கலைவதற்கு முன்னால் எங்கள் அணி வகுப்பு நடக்கிறது. தேசியக் கொடிக்கு முன்னால் நின்று கொண்டு நாங்கள் எல்லோரும் 'ஜனகணமன' பாடுகிறோம். நான் நின்றது அப்போதுதான்! தேசிய கீதம் பாடும்போது உட்கார்ந்து கொண்டிருப்பதா?"

அம்மாவுக்கு வியப்புத் தாங்கவில்லை. "தூக்கத்திலே வரும் தேசியக் கொடிக்குக் கூட நின்று மரியாதை செய்வதுண்டா? நல்ல வேடிக்கை இது!"

பெண் ஒரு விநாடி யோசனைக்குப் பின் கேட்டாள்— "ஏன், அம்மா, சொப்பனத்தில் சுவாமி வந்தால், நீ கன்னத்தில் போட்டுக் கொள்ள மாட்டாயா?"

## ஏன் இரண்டு மனைவியர்?

பெண் வெகு நேரம் காலண்டரையே வெறித்தாற்போலக் கவனித்துக் கொண்டிருந்தாள். காலண்டரில் மகா விஷ்ணுவின் படம் போட்டிருந்தது. தம் கருட வாகனத்தின் மீது திருமால் வெகு கம்பீரமாக இரு புறமும் இரண்டு தேவியரும் இருக்க, இடையில் வீற்றிருந்தார். பெண் பார்த்துக் கொண்டிருந்தது மேற்சொன்ன படத்தைத்தான்.

"அதில் எப்பொழுதும் இல்லாத புதுமை என்ன வந்து விட்டது? அந்த மகா விஷ்ணு படத்தை இவ்வளவு உறுத்துப் பார்ப்பானேன்?" என்று தந்தை கேட்டார்.

"அதுவா? சொல்கிறேன்" என்று மிக உற்சாகத்துடன் பெண் தொடங்கினாள். ஏதோ கவையான ஆராய்ச்சி என்பது அவளது மகிழ்ச்சியிலிருந்தே தெரிந்தது.

"மகா விஷ்ணு ஏன் இரண்டு மனைவிகளைக் கல்யாணம் செய்து கொண்டார் என்பதைக் கண்டுபிடித்து விட்டேன். ஸ்ரீதேவி, பூதேவி என்று இரண்டு பேர் அவருக்கு ஏன் சொல்லுங்கள், பார்க்கலாம்?"

தகப்பனார் விழித்தார்.

பெண்ணுக்கு மெத்தத் திருப்தி. தன் ஆராய்ச்சி முடிவை விளக்கினாள்:

"கருடனின் மீது போவதற்கு மகா விஷ்ணு லக்ஷ்மியோடு மட்டும் இருந்தால்



கஷ்டப்படுவார். ஒரு பக்கமாகக் குடைசாய்ந்து விடும் வாகனம். இப்போது பாருங்கள், நடுவிலே அவர், இரண்டு பக்கத்திலும், இரண்டு தேவிகள். ஆதலால் பாரம் சீராக இருக்கிறது. அதற்காகத்தான் இதே மாதிரி முருகப் பெருமானும் மயில் மேல் போவதற்கு ஏற்றபடி இரண்டு பேரைக் கல்யாணம் செய்து கொண்டார் என்கிறேன். நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?"

"ஸிமெட்ரிக்காக இரண்டு பேரா? நல்ல சமாதானம் இது!" — இப்படி என்னவோ முணு முணுத்தார் பெண்ணின் தந்தை.

## ஏன் பாசஞ்சர் என்ற பத்திரிகை இல்லை?

இரயில் வண்டி. ஏதோ ஒரு இரயிலடி. பெட்டிக்குள் ஒரு குடும்பம் இருக்கிறது. அதன் தலைவர் — தகப்பனார் — தம் குமாரர்களுக்கு மெயி



லுக்கும் எக்ஸ்பிரஸுக்கும் உள்ள வேறுபாட்டைக் கூறுகிறார். மெயில், எக்ஸ்பிரஸ், பாசஞ்சர் என்ற மூன்று இனங்களையும் விளக்குகிறார். கடைசியில் கூறியது எல்லா இரயிலடிகளிலும் நின்று செல்வது, மற்ற இரண்டும் முக்கியமான ஊர்களில் மட்டும் நிற்பது; அவற்றில் மெயில் என்பது தபால்கள் எடுத்துச் செல்வதாகும்.

இந்த விளக்கத்தை யெல்லாம் நான்கைந்து வயதான சின்னப் பெண்ணும் கேட்டுக் கொண்டிருக்கிறாள். அப்போது வெளியே பத்திரிகைப் பையனின் குரல் கேட்கிறது— 'ஹிந்து, மெயில், எக்ஸ்பிரஸ்!' உடனே சிறுமி கேட்கிறாள்— "ஆமாம், அப்பா, மெயில்—எக்ஸ்பிரஸ் என்றெல்லாம் பத்திரிகைக்குப் பேர் வைத்திருக்கிறார்களே, ஏன் பாசஞ்சர் என்று பத்திரிகை ஒன்றும் இல்லை?" தகப்பனார் விழிக்கிறார்.

# GRASIM

## STAPLE FIBRE A SUPPLEMENT TO COTTON AND OTHER FIBRES



Among Indian technological achievements Gwalior Rayon's success in producing Rayon Grade Pulp from indigenous raw materials without any foreign aid or collaboration has, perhaps, been the most remarkable. The staple fibre produced from the pulp has been a boon to the hard-pressed textile industry which was deprived of valuable raw materials when vast areas of cotton-growing land were lost to Pakistan as a result of Partition.

Grasim Staple Fibre is unique in many respects, and is, in effect, a supplement to all natural fibres including cotton, wool, silk, jute, as well as to synthetic fibres. When blended or mixed with other fibres, it increases the usefulness of the resultant fabrics, making them cooler, softer, and more comfortable while at the same time helping to lower costs.

Today Gwalior Rayon contributes substantially to the national economy. It keeps hundreds of textile mills busy, gives employment to thousands of people, helps clothe lakhs more, saves crores of rupees in foreign exchange, contributes handsomely and in ever-increasing amounts to the national exchequer—these are just a few of the calculable benefits.

Besides Rayon Grade Pulp and Staple Fibre, Gwalior Rayon also produces high quality fabrics and fabficates its own machinery and equipment.

As the needs of the nation for the basic necessities of life are constantly growing, Gwalior Rayon, conscious of its responsibilities, has already made plans to expand its production. It is the constant endeavour of the Company to serve the country to its utmost ability.

**THE GWALIOR RAYON SILK MANUFACTURING (WVG.) CO. LTD.**

Birlagram, Nagda.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

**FORGED FOR TOUGHNESS AND GROUND FOR PRECISION**



ADDISON

# FORGE-FORM TWIST DRILLS

Addison Forge-Form Drills are first forged in electronically controlled machines coupled to high frequency Generators and then ground to a super precision finish on automatic grinders equipped with time controlled switches and cold running, rotationally stable and vibrationless bearings.

This unique combination of toughness and precision has won for Addison Drills a commanding position in the export markets of U.S.A., Canada, U.K., West Germany, Sweden, Denmark, Holland, Belgium, Italy, Greece, Australia & New Zealand.

**ADDISON & COMPANY LTD., MADRAS-2**
*(A Member of the Gauge & Tool Makers Association U.K.)*

**DISTRIBUTORS:** **J. N. Marshall & Co.**, Bombay—For Maharashtra, Gujarat & Part of Madhya Pradesh, **Macneill & Barry Ltd.**, Engineering Division — For West Bengal, Bihar, Assam, Orissa, Uttar Pradesh, Haryana, Punjab, Delhi, Himachal Pradesh, Jammu & Kashmir. Rajasthan & Part of Madhya Pradesh. **Addison & Co. Ltd.**, Madras—For Tamil Nadu & Coastal Andhra. **Addison & Co. Ltd.**, Bangalore — For Mysore State. **Batliboi & Co. Pvt. Ltd.**, Secunderabad — For Andhra Pradesh excluding Coastal Andhra. **Batliboi & Co. Pvt. Ltd.**, Ernakulam — For Kerala State. **OVERSEAS DISTRIBUTORS IN** U.K., U.S.A., Canada, Denmark, Holland, West Germany, Sweden, Italy, Greece, Malaysia, Singapore, Thailand, New Zealand, Korea and Philippines.

ATW-37a